09

பேராசிரியர் டாக்டர் ந.சுப்பு ரெட்டியார்

# சைவமும் தமிழும்




மணிவிழா வெளியீடு

# அறிவியல் தமிழ்

(ஆசிரியரின் மணிவிழா ஆண்டு வெளியீடு—1976); இரண்டாம் பதிப்பு இவர்தம் 64-வது அகவை நிறைவு வெளியீடு—1981)

'அருங்கலைக்கோன்' பேராசிரியர்
டாக்டர் ந. சுப்பு ரெட்டியார்
எம்.ஏ., பி.எஸ்சி., எல்.டி., பிஎச்.டி.
ஓய்வு பெற்ற தமிழ்த்துறைத் தலைவர்
திருவேங்கடவன் பல்கலைக் கழகம், திருப்பதி

விற்பனை உரிமை :
பாரி நிலையம்
184, பிராட்வே, சென்னை-600001

## பக்திப் படையல்

பங்கயச் செல்வி மேவிய மார்பன்;
பசுந்துழாய் பொலிவுறு தோளன்;
சங்குசக் கரத்தன்; திருவருள் பொழியும்
தாமரைக் கண்ணினன்; மாறன்
மங்கல மறையின் உட்பொரு ளாய
மாண்பினன்; முகில்நிற வண்ணன்;
கங்கைசேர் பதத்தன்; வேங்கடத் தெம்மான்
கால்மலர்க் குரியதிந் நூலே.

சு. செல்லப்பன், எம்.ஏ., பி.டி.,
தனி அலுவலர்
தமிழ் வளர்ச்சி இயக்ககம்.

'குறளகம்'
சென்னை-1.
24-3-1976

## அணிந்துரை

*தன்னா சிரியன் தன்னொடு கற்றோன்*
*தன்மா ணாக்கன் தகுமுறை காரனென்று*
*இன்னோர் பாயிரம் இயம்புதல்கடனே.*

சிறப்புப் பாயிரம் செய்தற்குரியார் இன்னார் என விதந்து செப்புகிறது இந்த நன்னூல் நூற்பா. என் ஆசிரியர் பேராசிரியர் டாக்டர் ந. சுப்பு ரெட்டியார் அவர்களின் நூலுக்கு அணிந்துரை நல்கும் தகுதிகள் எனக்கில்லையாயினும் நூற்பா தந்த உரிமை ஒன்றே எனக்கு அத்துணிவினைத் தந்தது.

ஆசிரியர் மணிவிழாவினையொட்டி அவருடைய அருமை மைந்தர்கள் இந்நூலைத் தொகுத்து வெளியிடுகின்றனர். பேராசிரியர் டாக்டர் ரெட்டியார் அவர்கள் தம் மைந்தர்களை 'அவையத்து முந்தியிருக்கச்' செய்தவர். மைந்தர்களும் 'தந்தை எந் நோற்றார்கொல்' என்னும் மொழியை மெய்ப்பித்தவர்கள். வள்ளுவர் வாக்கின்வழி ஒழுகிவரும் தந்தையாரையும், மக்களையும், மனையறம் சிறக்க வழிநடத்திடும் திருமதி ரெட்டியாரையும் கொண்ட நல்ல குடும்பத்துடன் நெருங்கிப் பழகி வருபவன் நான். அப் பற்றுணர்வோடு இவ்வுரையைப் பெருமை பொங்க எழுதுகின்றேன்.

மாமயில் ஆடரங்கத்து மன்னி வளர் திருமாலின் அவதாரங்கள் பத்தென்பர். அவனடியாரான என் ஆசிரியரின் கட்டுரைகளும் பத்தாக இந்நூலில் நிலை பெறுகின்றன.

'ஓசை பெற்றுயர் பாற்கடலாகிய' நாலாயிரப் பிரபந்தத்தில் ஆசைபற்றி முற்றவும் குடிக்க முடியாத நமக்கு, உரைக்கிண்ணத்தில் ஆழ்வார்கள் அளித்த தேனைப் பாலோடு கலந்து ஆசிரியர் அளித்துள்ளார். அமலனாதி பிரானை அடிமுதல் முடிவரை அநுபவித்து அறிந்த ஆசிரியர் அப்'பிரானுக்குப்' பிரானாகிய திருமாலின் அழகை யெல்லாம் சொல்லிச் சொல்லித் தம்மையே மறந்து நிற்கிறார்.

'கம்பன் கவி உண்டிட மால் அம்புவியில் வந்து அவதாரம் செய்தானோ' என்று பாடுவார் கவிமணி. இருசுடர் தோற்றமாம் இரண்டாம் கட்டுரை கம்பனை முழுதும் காட்டும் காட்சியாக விரிகிறது.

அம்பலத்தே ஆடும் அம்பலவாணனின் திருக்கூத்தை அணுவின் ஆனந்தக் கூத்தாகவே கண்டு மகிழ்கின்றார் ஆசிரியர். அணுபற்றிய இன்றைய அறிவியற் கொள்கைகளை அன்றே தமிழ்ச் சான்றோர் அறிந்திருந்தனர் என்று எடுத்துக்காட்டியுள்ள திறம் பாராட்டத்தகுவது.

தானே தனக்குவமை என்பதுபோலத் தன் சொல்லுக்குத் தானே இலக்கியமாகக் கம்பன் திகழும் திறத்தைக் 'கம்பன் கண்ட மெய்ப்பொருள்' என்ற கட்டுரை காட்டுகிறது. 'கவிகளாகுவர் காண்குவர் மெய்ப்பொருள்' என்ற கம்பன் வாக்கில் தொடங்கி, பன்னீராயிரம் பாடல்களுள்ளும் புகுந்து, எங்கெல்லாம் கம்பன் 'இம்மையே எழுமை நோய்க்கும் மருந்தைக் கண்டானோ' அங்கெல்லாம் ஆசிரியர் நின்று, கவனித்துச் செல்கின்ற நிலையைக் காண்கிறோம்.

ஐந்தாம் கட்டுரை சேந்தனாரையும் பெரியாழ்வாரையும் ஒப்பிட்டுப் பல்லாண்டு கூறுகிறது. ஆறும் எட்டும்

அறிவியலைப் பற்றியன. பண்டைத் தமிழர்களின் அறிவியலை ஆராய்ந்து இவ்விரண்டும் இனிது விளக்குவன. ஏழும் ஒன்பதும் பத்தும் வைணவ நெறி நின்று, சைவ நெறி அளாவி, உலக வாழ்க்கையின் இறுதியில் பெற வேண்டிய வீட்டின்பத்தை இனிதே புகல்வன.

கட்டுரைகள் பத்தும் ஆழ்வார்களின் பாசுரங்களில் ஆசிரியர் எந்த அளவிற்கு ஆழ்ந்துள்ளார் என்பதையும், 'கம்பனில்' நெஞ்சைப் பறிகொடுத்த காட்சியையும், அறிவியலில் துறைபோகிய நெஞ்சத்தையும் காட்டுகின்றன.

ஆழ்வார்களின் பாடல்களில் ஆசிரியர் ஆழங்கால் படுவது போலவே அவருடைய கட்டுரைகளில் நாமும் ஆழங்கால்படுகிறோம்.

ஆசிரியரின் இந்த அரிய முயற்சியைத் தமிழ் கூறும் நல்லுலகம் நன்கு வரவேற்குமாக. இவருடைய நூற்றாண்டு விழாவின்போது இத்தகையதொரு நூலைத் தொகுத்து இவர் கையில் தந்து மகிழும் பேறு மாணாக்கனாகிய எனக்குக் கிட்ட வேண்டுமென்ற விழைவுடன் என் ஆசிரியப் பெருமகனார் பன்னெடுங்காலம் பயன் பெருக்கி வாழ வேண்டுமென உளமார வாழ்த்துகின்றேன்.

சு. செல்லப்பன்

# நூல்முகம்

கண்டதுவேகொண்டு எல்லாரும் கூடி
கார்க்கடல் வண்ணனோடு என்திறத்துக்
கொண்டுஅலர் தூற்றிற்று; அதுமுதலாக்
கொண்டஎன் காதல்உரைக்கில், தோழீ!
மண்திணி ஞாலமும் ஏழ்கடலும்
நீள்விசும்பும் கழியப் பெரிதால்;
தெண்திரை சூழ்ந்துஅவன் வீற்றிருந்த
தென்திருப் பேரெயில் சேர்வன்சென்றே[1]

—நம்மாழ்வார்

இந்தத் தொகுப்பில் காணும் கட்டுரைகள் 11-ம் வெவ்வேறு காலத்தில் வெவ்வேறு சந்தர்ப்பத்தில் எழுதப் பெற்று வெவ்வேறு இதழ்களில்-மலர்களில் வெளிவந்தவை. இவற்றுள் கட்டுரை-7 நீங்கலாக பத்துக் கட்டுரைகள் என் மணிவிழா ஆண்டு வெளியீடாக என் அருமைச் செல்வர்கள் திரு எஸ். இராமலிங்கம் M.Sc., டாக்டர் எஸ், இராமகிருஷ்ணன் M.D. என்போரால் 1976-இல் வெளியிடப் பெற்றன. இந்தப் பதிப்பில் ‘தமிழ் இலக்கியத்தில் தொலைக் காட்சி' என்ற கட்டுரை ஏழாவது கட்டுரையாகச் சேர்கின்றது. இக்கட்டுரைகள் யாவும் மேற்கல்வி கற்கும் இளைஞர்கட்குப் பல்சுவை விருந்தாக அமைந்து மேலும் கற்கவேண்டும் என்ற பெரு விருப்பைத் தூண்டி விடும் என்பது என் திடமான நம்பிக்கை. ‘கற்றனைத்து ஊறும் அறிவு' அன்றோ?

இந்த இரண்டாம் பதிப்பு (1981) என் 64-வது அகவை நிறைவு வெளியீடாக வரும்வரையிலும் என் பிராரப்த கருமம் கழியாது உள்ளது. என்னைக்கொண்டு கல்வி உலகில் ஒரு ‘பெருந்தொண்டு' நிறைவேற்றக் கருதியுள்ளான் எம்பெருமான் என்பது என் அதிராத நம்பிக்கை. அதுவரையிலும் என் பிராரப்தம் கழியாது.

என்னைக் கொண்டு இத்தகைய கட்டுரைகள் எழுதுவித்தும் வெவ்வேறு துறைகளில் என்னைப் பணி செய்வித்தும், என் பிராரப்தம் தீரும் வரையிலும் எனக்கு உடல் நலமும் மனவளமும் நல்கி வரும் எம்பெருமான் வேங்கடவாணனை நினைந்து அவன் பொன்னார் திருவடிகளை மனம் மொழி மெய்களால் வாழ்த்தி வணங்குகின்றேன்.

---

1. திருவாய். 7.3:8

களியுற்று நின்று
    கடவுளே! இங்குப்
பழியற்று வாழ்ந்திடக்கண்
    பார்ப்பாய்—ஒளிபெற்றுக்
கல்விபல தேர்ந்து
    கடமையெலாம் நன்காற்றித்
தொல்வினைக்கட் டெல்லாம்
    துறந்து.[2]

—பாரதியார்

சென்னை-600 040
10-6-1981

ந. சுப்பு ரெட்டியார்

2. பாரதியார்: விநாயகர் நான்மணி மாலை-9

## உள்ளுறை

# 1. அரங்கநகர் அப்பன்

தமிழ் நாட்டில் பக்தி இலக்கியம் தோன்றிய காலத்திலும் அதற்குச் சற்றுப் பின்னரும் வைணவத்தின் வளர்ப்புப் பண்ணைகளாகத் திகழ்ந்த பெருந் தலங்கள் திருவேங்கடம், திருமாலிருஞ்சோலை, திருவரங்கம், காஞ்சிபுரம் என்பவையாகும். இவற்றுள் "பெரிய கோயில்" என வழங்கப்பெறும் திருவரங்கம் தனிப் பெரும் புகழுக்கு உரிய இடமாகும். ஆற்றிடைக் குறையாகிய இந்த அரங்கம் நீர் வளமும் நில வளமும் ஒருங்கே பொருந்திச் சோலைகள் சூழ்ந்து விளங்குகின்றது. இதன் வளத்தை,

"முருகனுறை குறிஞ்சித்தேன் முல்லை பாய
முல்லைநிலத் தயிர்பால்நெய் மருதத் தோட
மருதநிலக் கொழும்பாகு நெய்தற் றேங்க
வருபுனல்கா விரிசூழ்ந்த வளம்"[1]

என்று வருணித்திடுவர் பிள்ளைப்பெருமாள் அய்யங்கார். இந்த அரங்கத்தில் கோயில் கொண்டுள்ள 'அரங்க நகர் அப்பனைக்' காவிரியும் அதன் கிளையாறாகிய கொள்ளிடமும் மாலையிடுவது போலச் செல்லுகின்றன. இந்த ஞானப் பேரூரில் 'கிடந்த திருக்கோலத்துடன்' திகழும் எம்பெருமானைப் பத்து ஆழ்வார்கள் "பக்திச்சுவை நனி சொட்டச் சொட்டப்" பாடியுள்ளனர். இவர்களுள் திருப்பாணாழ்வாரின் பெருமையைக் குறித்து,

"காண்பனவும் உரைப்பனவும்
மற்றொன்(று) இன்றிக்

---

*முருக. தனுஷ்கோடி மணி விழா மலரில் (1967) வெளி வந்தது.

1. சீரங்கநாயகருசல்—29

கண்ணனையே கண்டுரைத்த
 கடிய காதல்
பாண்பெருமாள் அருள்செய்த
 பாடல் பத்தும்
பழமறையின் பொருளென்று
 பரவு மின்கள்!"[2]

என்று பாராட்டியுள்ளார் வேதாந்த தேசிகர். பாண் பெருமாளின் வாக்கு நான்மறையின் செம்சொருளைச் செந்தமிழால் வெளியிடுகின்றது என்பர் திருவரங்கத் தமுதனார். பாண் பெருமாளின் திருவடிக் கமலத்தை வைணவத்திற்குப் புத்துயிரளித்த இராமாநுசரும் தம் முடியில் தரித்துக் கொண்டதாக 'இராமாநுச நூற்றந் தாதி' என்ற நூல் அறிவிக்கின்றது. திருப்பாணரின் வாக்காகிய 'அமலனாதி பிரானில்' கம்பனுக்கும் நிறைந்த ஈடுபாடு உண்டு என்பதை ஆய்வாளர்கள் நன்கு அறிவர். அமலனாதி பிரான்' என்ற இச்சிறு பிரபந்தத்திற்குப் பெரியவாச்சான் பிள்ளையும், அழகிய மணவாளப் பெருமாள் நாயனாரும் மணிப்ரவாள நடையில் வியாக்கி யானங்கள் அருளிச் செய்துள்ளனர். வேதாந்த தேசிகரால் அருளிச் செய்யப்பட்ட 'முனிவாகந போகம்' என்ற பெயருடைய வியாக்கியானமும் இதற்கு உண்டு.

உலோக சாரங்க முனிவரால் சுமக்கப் பெற்று அரங்கநகர் அப்பனை அடைந்த திருப்பாணாழ்வார் அந்த அழகிய மணவாளனின் வடிவழகை அடி முதல் முடி வரை அநுபவிக்கின்றார். வறியவனுக்கு வளமான நிதி காட்டுவதுபோல் ஆழ்வாருக்கு இறைவன் தனது அழகைக் காட்ட, அந்த அழகில் திளைத்த ஆழ்வார் பத்துப் பாசுரங்களில் தமது அநுபவத்தை எளிய நடை

2. தேசிகப் பிரபந்தம்—132

யில் வெளியிட்டருளுகின்றார். யாழையே தெய்வமாகப் போற்றி வந்த பாணர் குலத்தில் தோன்றிய 'பாணர் விளக்கு' இசையாகவும் இசைப்பயனாகவும் இருக்கும் அந்த இறைவனை அரங்கநகர் அப்பனாகக் கண்டு கொள்கின்றார்.

முதலில் பெரிய பெருமாளின் திருவடிகளின் அழகு இவரது கண்களைக் கவர்கின்றது.

> ''கமல பாதகவந்து
> என் கண்ணின் உள்ளன
> ஒக்கின்றதே!''[3]

என்று கமலபாதம் தம்மை ஆட்கொண்டதை வெளியிடுகின்றார். இங்கு இறைவனை ஆழ்வார் அமலன், விமலன், நிமலன், நின்மலன் என்ற சொற்களால் குறிப்பிடுகின்றார். மிகவும் தாழ்ந்தவரான தாம் சந்நிதிக்குள்ளே புகுவதனால் பெருமாளுக்குப் பெருத்த குற்றம் உண்டாகும் என்று அஞ்சியிருந்தவர் அந்த ஐயம் தோற்ற 'அமலன்' என்கின்றார். தம்முடைய சிறுமையை நோக்காமல் தம்மைப் பாகவதர்களுடன் ஆட்படுத்தி ஒரு சீரிய பொருளாக ஆக்கினதனால் எம்பெருமானது திருமேனியிற் பிறந்த ஒரு சிறந்த பேரொளியை அநுபவிப்பார் 'விமலன்' என்கின்றார். அடியார்க்கு எளியனாகும் தன்மையை வெளியிட்டு நிற்பவனாதலால் 'நிமலன்' என்றும், அடியார்களின் குற்றங்களைக் காண்கையில் குற்றமில்லாதவனாகையால் 'நின்மலன்' என்றும் குறிப்பிடுகின்றார். தன்னுடன் தொடர்பு கொண்டவர்கள் எக்குலத்தவராயினும், அவர்களை யெல்லாம் தூய்மை செய்து ஆயிரத்தெட்டு மாற்றுத் தங்கமாக்கிக் கொள்ள வல்ல திருவடிகளை அருளின் செவ்வியும் குளிர்ச்சியும் மலர்ச்சியும் கருதிக் கமலபாதம்' என்கின்றார். 'கதிரவனைக் கண்டு

3. அமலனாதி—1

மலர்வது தாமரை; இந்தத் தாமரைக்குக் கதிரவன் திருப்பாணர் என்று குறிப்பிடுவர் பெரியவாச்சான் பிள்ளை. இத்தகைய இறைவனது அருளுக்கு அறிகுறியான மலரடிகளைக் கண்ணுள்ளும் கருத்துள்ளும் காண்கின்றார் ஆழ்வார்.

அடுத்து, அப்பனின் பொன்னாடை புனைந்துள்ள திருமேனியழகு ஆழ்வாரின் உள்ளத்தைக் கவர்கின்றது.

"அரை சிவந்த ஆடையின்
மேல்சென்றதாம் எனசிந்தனையே"[4]

கீழ்ப்பாட்டில் 'திருக்கமலபாதம் வந்து' என்றதும், இப்பாட்டில் 'ஆடையின் மேற்சென்றதாம் என சிந்தனை' என்றதும் உற்று நோக்கி உணரத்தக்கவை. முதலில் எம்பெருமான் தானாக ஆழ்வாரை அடிமை கொள்ள மேல் விழுந்தபடியும், பிறகு ஆழ்வார் சுவைகண்டு தாம் மேல் விழுகிறபடியும் இவற்றால தோற்றும். கன்றை ஈன்ற பசு தன் கன்றுக்கு முதலில் முலைக்காம்பின் சுவை தெரியாமையால் தானே தன் முலைக்காம்பினை அதன் வாயில் கொடுக்கும்; பின்பு சுவடறிந்தால் பசு காற்கடைக் கொண்டாலும் கன்று தானே மேல் விழும். அங்ஙனமே, திருவடிகள் தாமே வந்து போக்கியமானவாறு கூறினார் முதற்பாசுரத்தில்; இதில் தம்முடைய நெஞ்சு சுவடறிந்து மேல் விழுமாறு கூறுகின்றார் என்பதை உணர்க.

ஆடையின் அழகை அநுசந்தித்த ஆழ்வார் மூன்றாவது பாசுரத்தில் படைப்பிற்கெல்லாம் மூலகாரணமான உந்திக் கமலத்தைப் பாடி அநுபவிக்கின்றார்.

"அந்தி போல் நிறத்(து) ஆடையும் அதன்மேல்
அயனைப் படைத்த(து) ஓரெழில்

4. அமலனாதி—2

உந்தி மேலதன்றோ அடியேன்
உள்ளத்து இன்னுயிரே!"[5]

என்பது ஆழ்வாரின் அநுபவம். முன்னைய பாட்டில் குறிப்பிட்ட "சிவந்த ஆடை" இப்பாட்டிலும் "அந்திபோல் நிறத்து ஆடை" என்று குறிப் பிடப்பெறுகின்றது. 'பீதக ஆடையின்' அழகு படைப் பிற்கெல்லாம் காரணமாகிய உந்தியத் தாமரையின் அழகிலே உள்ளத்தைக் கொண்டு முட்டுகின்றது!

திருஉந்தியின் அழகை அநுபவித்துக் கொண்டிருக்கும் போதே எம்பெருமானின் உதரபந்தத்தின் மீது ஆழ்வாரின் கண்கள் தாவுகின்றன.

"மதுரமா வண்டு பாட
மாமயில் ஆடரங்கத்(து)
அம்மான் திருவயிற் (று)
உதரபந்த மென் உள்ளத்துள்நின்(று)
உலாகின்றதே."[6]

திருவரங்கச் சோலையில் வண்டுகள் இனிமையாக இசை பாட, அதற்கேற்பச் சிறந்த மயில்கள் களிப்புடன் கூத்தாடு கின்றன. இந்தப் பசுஞ்சோலையில் கடல் வண்ணனாகக் காட்சியளித்து அடியவர்களின் சிரமத்தைப் போக்கும் எம்பெருமானின் 'உதர பந்தம்' என்ற அரைக் கச்சு ஆழ்வாரின் நெஞ்சில் நின்று உலவத் தொடங்குகின்றது. இந்தத் திருமேனியழகில் இராமனாக அவதரித்து இராவண வதம் செய்தபோது ஏற்பட்ட வீரப்பொலிவும் கலந்து காணப்பெறுகின்றதைக் குறிப்பிடுகின்றார் ஆழ்வார். 'ஸ்ரீவைகுண்டநாதன் பெரிய பெருமான் ஆனவாறே, நித்திய சூரிகள்—வைகுந்தத்தில் இறைவனு

5. அமலனாதி—3
6. அமலனாதி—5

டன் உறையும் விண்ணவர்கள்—வண்டுகளுடன், மாமயில்களும் ஆனபடி!' என்பது வியாக்கியானம்.

அடுத்து, அடியார்களைப் பரிந்து காத்தருள வல்ல பெரிய பிராட்டியாரும், அனைத்தையும் காக்கும் பண்புக்கு அறிகுறியாக உள்ள திருமாலையும் திகழப் பெற்ற அப்பனின் திருமார்பின் அழகு ஆழ்வாரை ஆட்கொள்ளுகின்றது.

"பாரமாய பழவினை
 பற்(று) அறுத்(து) என்னைத்தன்
வாரம்ஆக்கி வைத்தான் வைத்த(து)அன்றி
 என் உள் புகுந்தான்
கோர மாதவம் செய்தனன்கொல்
 அறியேன் அரங்கத் தம்மான், திரு
ஆர மார்புஅது அன்றோ
 அடியேனை—ஆட்கொண்டதே!"[7]

[பாரமாய பழவினை—பொறுக்க முடியாத சுமையாக உள்ள நெடுங்கால வினைகள்; பற்று—சம்பந்தம்; வாரம்—அன்பு]

இதில் இறைவன் தம்முள் புகுந்து நிற்கும் நிலையில் ஒன்றுபட்டுப் பேசுகின்றார் ஆழ்வார். இறையருள் தமக்கு (1) பாரமான பழவினைகளைப் பற்றறுத்தது; (2) இவரைத் தன்பால் அன்பனாக்கிக் கொண்டது; (3) இந்த நன்மைகளுக்கு மேலாக இவருள்ளம் புகுந்தது என்ற மூன்று வகைகளில் துணை செய்துள்ளது என்பவற்றைக் குறிப்பிடுகின்றார். 'பின்னையும் தன் ஆற்றாமையாலே விடாய்த்தவன்—பெரிதும் களைப்புற்றவன்—தடாகத்தை நீக்கி உள்ளே முழுகுமாப் போலே, என் உள்ளம் புகுந்தான்' என்பது வியாக்கியானம். 'புலன்களை

7, அமலனாதி—5

வென்று கொடுந்தவம் புரிந்தேனோ? என்று எண்ணிப் பார்ப்பவர் நான் அறிய ஒன்றும் இல்லையே!' என்று குறிப்பிடுகின்றார். மூன்றாம் அடியிலுள்ள 'செய்தனன்' என்பதைத் தன்மை வினைமுற்றாகக் கொள்ளாமல் படர்க்கை வினைமுற்றாகக் கொண்டு 'இப்படி என் நெஞ்சினுள் புகுவதற்கு எம்பெருமான் இரு காவிரியின் நடுவில் நின்றுகொண்டு என்ன கடுந்தவம் செய்தனனோ? என்பதாக உரைத்தருளின வேதாந்த தேசிகரின் வியாக்கியானமும் அநுபவித்து மகிழத்தக்கது. ஓர் அடியானைப் பெறுவதற்கு எம்பெருமான் படுகின்ற பாட்டை யார் அறிவார்?

பிறகு, அப்பனின் திருக்கழுத்தின் அழகு ஆழ்வாரின் அகக்கண்ணுக்கு இலக்காகின்றது.

"அண்ட ரண்டபகி ரண்டத்(து) ஒரு
மாநிலம் எழுமால்வரை, முற்றும்
உண்ட கண்டம்கண்டீர்!
அடியேனை உயக்கொண்டதே!"[8]

[அண்டர் — தேவர்கள்; அண்டம் — உலகங்கள்; பகிரண்டம்—அண்டங்கட்கு அப்பாலுள்ள உலகங்கள்; கண்டம்—திருக்கழுத்து.]

திருமார்பின் அழகு அண்டங்களையெல்லாம் அமுது செய்தருளின் திருக்கழுத்தின் அழகிலே கொண்டு முட்ட, அந்த அழகு தம்மை ஈடுபடுத்தியதாகப் பேசுகின்றார் ஆழ்வார் இந்தப் பாசுரத்தில்.

அடுத்து, அனைவருக்கும் பட்சபாதம் இன்றி அபயம் அளிக்கும் 'நீதி வானவனின்' பவள வாயின் அழகு ஆழ்வாரை வசீகரிக்கின்றது.

---

8. அமலனாதி—6

"செய்யவாய், ஐயோ! என்னைச்
சிந்தை கவர்ந்ததுவே!"

எம்பெருமானை முற்றிலும் அநுபவிக்க வேண்டும் என்று பாரித்திருக்கையில் 'இடையிலே நெஞ்சைக் கொள்ளை கொண்டு விட்டதே, அதரம்! இதற்கு என் செய்வேன்!' என்பார், 'ஐயோ.' என்கின்றார். சங்கு சக்கரங்களை யுடையவனாய், திருத்துழாய் மாலை அணிந்த நீள் முடிய னாய், நம் போன்றவர்களும் ஊனக் கண்ணால் காணும் படியாகக் காட்சி தரும் பச்சை மாமலைபோன்ற மேனி யின் அழகிற்குத் தப்ப முடிந்தாலும், அன்பர்களின் நலன்களை வினவத் துடித்துக் கொண்டிருக்கும் திரு வாயின் அழகுக்குத் தப்ப முடியாது. 'ஐயோ'! என்ப தற்கு, "பண்டே நெஞ்சு பறிகொடுத்த என்னை அநியா யம் செய்வதே! என்று கூப்பிடுகின்றார்" என்பதும், "கல்லை நீராக்கி, நீரையும் தானே கொண்டது" என்பதும் வியாக்கியானம். "ஐயோ" என்றது—ஆச்சரியத்தையாதல், அநுபவிக்க அரிதானபடியையாதல், அநுபவரசத்தை யாதல் காட்டுகிறது" என்பர் வேதாந்த தேசிகர்.

அனைத்திற்கும் மேலாக அரங்கத்து அமலனின் திருக் கண்கள் இவரைக் குளிர நோக்கி வசீகரிக்கின்றன. வாயால் சொல்ல முடியாததையும் பேசாத பேச்சாகக் கண்கள் உணரச் செய்து விடுகின்றனவாம். அந்தக் கண் களின் அழகு,

"கரிய வாகிப் புடைபரந்து மிளிர்ந்து
செவ்வரி யோடி, நீண்ட அப்
பெரிய வாய கண்கள் என்னைப்
பேதைமை செய்தனவே!"[10]

9. அமலனாதி—7
10. அமலனாதி—8

என்ற அற்புதமான செந்தமிழாக வடிவங் கொண்டுள்ளது இந்தப் பாசுரப் பகுதி. ஓதி ஓதி, உணர்ந்து உணர்ந்து, இன்புற்று அநுபவித்தால் ஒவ்வொரு சொல்லும் ஒவ்வொரு படித் தேனாக இனிக்கும். 'அந்தக் கண்களின் அழகு என்னைப் பைத்தியமாக்கி விட்டதே!' என்பதில் கடல் போலப் பெருகி வரும் இவரது பக்திக் காதலை நாமும் உணர்ந்து அநுபவிக்க முடிகின்றது. இல்லையா?

"ஏழையர் ஆவிஉண் ணும்மிணைக்
கூற்றங்கொ லோஅறியேன்
ஆழியங் கண்ண பிரான்திருக்
கண்கள்கொ லோஅறியேன்
சூழவும் தாமரை நாண்மலர்
போல்வந்து தோன்றும்கண்டீர்
தோழியர் காள்! அன்னை யீர்! என்செய்
கேன்துய ராட்டியேனே"[11]

என்று எம்பெருமான் திருக்கண்களில் ஈடுபட்டு நம்மாழ்வார் நாயகி நிலையிலிருந்துகொண்டு பட்டபாட்டை இவரும் படுகின்றார் போலும்.

அப்பால் எல்லா உறுப்புகளின் சேர்த்தி அழகினை ஒருங்கே அநுபவிக்கின்றார் ஆழ்வார்.

"ஆலமா மரத்தின்
இலைமேல் ஒருபாலகனாய்
ஞாலம் ஏழும் உண்டான்
அரங்கத்(து) அரவின் அணையான்
கோல மாமணி ஆரமும்
முத்துத் தாமமும்
முடிவு இல்ல(து)ஓர் எழில்

---

11. திருவாய். 7.7:1

நீல மேனி ஐயோ!
நிறைகொண்ட(து)என் நெஞ்சினையே!'[12]

[பாலகன்-குழந்தை; ஞாலம்-உலகம்; கோலம்-அழகிய; ஆரம்-மாலை; தாமம்-மாலை; எழில்-அழகு]

என்பது ஆழ்வாரின் அநுபவம். இந்தப் பாசுரத்தில், எல்லா அழகுகளையும் சேர்த்துக் கொண்டு, திருமேனி என்ற நீலச்சோதி ஆழ்வாரைப் படுத்திய பாடு வெளிப்படுகின்றது. நீலமேனியின் மாசற்ற அழகு, கடலாக வெள்ளமிட்டுவர, அதனை நெஞ்சால் அநுபவிக்கப் பாரிக்கின்றார்; அந்த அழகினை 'முடிவில்லதோர் எழில்' என்று பாடிப் பரவசமாகின்றார். ஆனால், அழகு வெள்ளத்தில் சுருட்டிய பேரலை ஒன்று இவர் நெஞ்சை இழுத்துக் கொள்ள, 'ஐயோ, என் நெஞ்சையும் இழுத்துக்கொண்டதே!' என்று ஏங்குகின்றார். "ஐயோ—பச்சைச் சட்டையுடுத்தித் தனக்குள்ளதை யடையக் காட்டி எனக்குள்ளதை அடையக் கொண்டானே!" என்பர் பெரியவச்சான் பிள்ளை. "நான் எல்லாவற்றையும் நின்று நின்று அநுபவிக்க வேணுமென்றிருக்க, அது பவபரிகரமான என் நெஞ்சைத் தன் பக்கலிலே இழுத்துக்கொள்வதே! ஐயோ! என்கிறார்" என்பர் அழகிய மணவாளப் பெருமாள் நாயனார். இந்த அநுபவத்தின் எதிரொலிதான்,

"ஐயோ! இவன் வடிவென்பதோர்
அழியா அழகுடையான்"[13]

என்று கம்பன் வாக்கால் இராமபிரானின் அழகாக வடிவங் கொள்ளுகின்றது.

இங்ஙனம் இறைவனின் எழிலை அகக் கண்ணாலும், புறக்கண்ணாலும் அநுபவித்த ஆழ்வார்,

12. அமலனாதி-9
13. கம்ப. அயோத். கங்கைப் படலம்-1

"கொண்டல் வண்ணனைக்
கோவல னாய்வெண்ணெய்
உண்ட வாயன்என்
உள்ளம் கவர்ந்தானை
அண்டர் கோன்அணி
அரங்கன்என் அமுதினைக்
கண்ட கண்கள்மற்(று)
ஒன்றினைக் காணாவே!"[14]

என்று பாடி இப் பிரபந்தத்தைத் தலைக்கட்டுகின்றார். 'கொண்டல் வண்ணன்' என்பதில் இந்த ஆழ்வாரின் தாபம் தீர, விடாய் தீர அருள் பொழிந்த குறிப்பினைக் காணலாம். அழகிய மணவாளனின் திருமேனியில் முன்பு வீரப்பொலிவு கண்ட ஆழ்வார் இப்போது வெண்ணெயை யும் வெண்ணெய் போன்ற உள்ளங்களையும் களவாடிய கண்ணபிரானின் அழகுப் பொலிவினை அநுபவிக்கின்றார். உற்று நோக்கினால், வெண்ணெய் உண்ட திருப்பவளமாகக் காணப்படுகின்றது என்கின்றார். "என்னைச் சிந்தை கவர்ந்த வாயில் இப்போதும் வெண்ணெய் மணக்கின்றது," என்பது குறிப்பு. கூரத்தாழ்வான் தன்னுடைய சுந்தர பாஹுஸ்தவத்தில் பண்டு யசோதைப் பிராட்டி முத்தங் கொடுத்த கவடு இன்னும் அழகரின் திவ்விய கன்னங்களில் திகழா நிற்கும்என்று அநுபவித்தாற் போல, இவரும் பண்டு கண்ணன் வெண்ணெய் உண்ட முடை நாற்றம் இன்றும் பெரிய பெருமாள் திருப்பவளத்தில் கமழா நிற்பதாக அநுபவிக்கின்றார். தசரத சக்கரவர்த்தி தன்னுடைய அரச ஐசுவரியம் அனைத்தையும் அநுபவித்தற்கு 'எனக்கு ஒரு பிள்ளை வேணும்' என்று நோன்பு நோற்றுப் பெருமாளைப் பெற்றாற்போல, நந்தகோபனும்

14. அமலனாதி—10.

"கானாயன் கடிமனையில் தயிருண்டு நெய்பருக நந்தன் பெற்ற ஆனாயன்[15]" என்று திருமங்கை மன்னன் வாக்கின் படி திருவாய்ப்பாடி பால்பண்ணை பாழ்போகவொண்ணா தென்று அச் செல்வத்தை அமுது செய்கைக்காக நோன்பு நோற்றுப் பெற்ற பிள்ளையல்லவா கண்ணன்? 'ஞாலம் ஏழும் உண்டான்' என்று சொல்வதைவிட 'வெண்ணெய் உண்ட வாயன் என் உள்ளங் கவர்ந்தான்' என்று கூறுவதில் இந்த ஆழ்வாருக்கு முற்றிலும் மனநிறைவு.

இவர் பாடிய இந்த 'அமலனாதி பிரான்' என்ற பிர பந்தத்தில் முதல் ஒன்பது பாசுரங்கள் அகக்கண் கொண்டு அருளியவை என்றும், பத்தாவது பாசுரம் புறக்கண்ணால் நேரில் கண்டு பாடப்பெற்றது என்றும் கொள்வர். 'என் அமுதினைக் கண்டகண்கள் மற்றொன்றினைக் காணாவே!' என்று இவர் பாடி முடித்ததும், அரங்கநகர் அப்பன் இவரை அளவற்ற பெருமகிழ்ச்சி நிலையில் அப்படியே அந்தத் திருமேனியுடன் ஏற்றுக் கொண்டானாம். ஆழ் வாரும் அனைவருங் காண அப்பிரானது திருவடிகளிலே காய்ந்த இரும்பு உண்ட நீராயினர். இராமாநுசர் போன்ற மெய்ஞ்ஞானியரும், கம்பன் போன்ற கவிஞர் களும் உச்சிமேல் கொள்ளத்தக்க சிறப்பு வாய்ந்தது இந்த ஆழ்வாரின் பிரபந்தம். இன்றும் திருப்பாணர் தமது திருவாக்கில் நம்மிடையே வாழ்கின்றார்.

"அம்புவியில் மதிள் அரங்கர்
அகம்புகுந்தான் வாழியவே!
அமலனாதி பிரான்பத்தும்
அருளினான் வாழியே!

---

15. பெரி திரு. 5-5:3

செம்பதுமை யருள்கூறும்
செல்வனார் வாழியே
திருப்பாணன் பொற்பதங்கள்
செகதலத்தில் வாழியே!''[16]

என்று அரங்கநகர் அப்பனை அகங்குளிரக் கண்ட ஆழ்வாரை வாழ்த்துகின்றது வைணவ உலகம்.

16. வாழித் திருநாமம்-9

## 2. எழிலுடை இருசுடர் தோற்றம்

எல்லாம் வல்ல இறைவன் நமக்குப் புலன்களையும் நுண்ணிய அறிவையும் அளித்து அவற்றின் துணை கொண்டு கோடானு கோடி இன்பங்களை நுகர்வதற்கு வாய்ப்பும் அளித்துள்ளான். இதனை எண்ணியே மகாகவி பாரதியார்,

"எத்தனைகோடி இன்பம்
வைத்தாய்!—எங்கள்
இறைவா! இறைவா!
இறைவா!"[1]

என்று பாடித் திளைக்கின்றார். இங்ஙனம் கூறிய கருத்தினை விளக்குவதுபோல்,

"சித்தினை அசித்துடன்
இணைத்தாய்;—அங்கு
சேரும்ஐம் பூதத்து
வியன்உல(கு) அமைத்தாய்;"

"அத்தனை உலகும்
வண்ணக் களஞ்சியம்
ஆகப் பலப்பலநல்
அழகுகள் சமைத்தாய்"

[சித்து—உயிர்; அசித்து—உயிரற்ற சடப்பொருள்]

என்று பின்னும் கூறுவர். நம் முன்னோர்கள் இயற்கையைக் கண்டுகளித்தே தமது வாழ்வைச் சிறப்பித்துக்கொண்டனர்

*கலைக்கதிர் வெள்ளி விழா மலரில்(1974)வெளிவந்தது.
1. பாரதியார் கவிதைகள்—இறைவா! இறைவா!

என்பதற்கு அவர்கள் இயற்றிய நூல்களே சான்றுகளாகும். அகன்ற நிலவானமும் அதில் துலங்கும் தாரகையும் தண் மதியும் நமக்கு இன்பத்தை அள்ளித் தெளிக்கக் காத்திருக்கின்றன. கண்ணுக்கு எட்டாத தொலைவில் மரகதத்தை உருக்கி வார்த்தாற்போன்று கண்கொள்ளாக் காட்சியளிக்கும் மாக்கடலைப் பார்த்த மாத்திரத்தில் நம்மிடையே தோன்றும் அகத்தெழுச்சிகட்கு எல்லையே இல்லை.

இந்நிலையில் அருமறையிலுள்ள ஒரு வாக்கியத்தில் நம் கருத்தினைச் செலுத்துவோம். "வானத்தை அண்ணாந்து நோக்கினீர்களா? என்ன எழில்? ஒரே நீலமாய் மேடுபள்ளம் இல்லாத தூய்மையான விளையாட்டுத் திடல்! அப் பரந்த மைதானத்தில் இரண்டு குழந்தைகள் விளையாடுகின்றனர். குழவிகளின் மேனியொளி கண்ணைப் பறிக்கின்றது; நம் உள்ளத்தையும் கொள்ளை கொண்டுவிடுகின்றது. நாடோறும் அக் குழந்தைகள் குண திசையிலிருந்து குட திசையை நோக்கிப் போய்க் கொண்டிருப்பதைப் பார்க்க யாருக்குத்தான் ஆர்வம் பொங்கி எழாது?" என்று வெங்கதிரோனையும் தண்மதியையும் வருணித்திருப்பது இயற்கையில் அவர்கள் கொண்ட மோகத்தைக் காட்டுகின்றதன்றோ? கதிரவனின் தோற்றமும் மறைவும், தண்மதியின் எழுகையும் அதன் மறைகையும் கவிஞர்கட்குப் பேரானந்தத்தை விளைவித்துள்ளன. அந்த இன்பமயமான சமாதியில், உறங்குகின்ற குழந்தையைத் தாய் அணைத்துக்கொண்டு கிடப்பதைப் போன்று, அச் சமாதி கலையாமல், தழுவுவர் அவர்கள். உறக்கம் கெடாமல் தாய் தன்னை மறந்துவிடுவதைப் போன்று அவர்களும் இன்பப் பெருக்கில் மிதப்பர். அவர்கள் அநுபவித்த இன்பப் பெருக்கில் ஒன்றிரண்டு திவலைகள் அவர்கள் பாடிய பாட்டுகளிலும் ஆடிய கூத்திலும் இல்லாமற் போகாது. அவற்றைப் பார்த்தே

'கலைகள், கலைகள்' என்று கொண்டாடி நாம் உள்ளம் பூரிக்கின்றோம். அத்தகைய கலைத்திறம் வாய்ந்த பாடல்கள் ஒன்றிரண்டில் ஆழங்கால் படுவோம்.

**கதிரவன் உதயம்:** கம்பன் காட்டும் உதயசூரியனைக் காண்போம். புகர்முக யானையின் தோலை மேற் போர்த்துக் கொண்டிருக்கும் பரமசிவனைப்போல் மிகுந்த கரிய இருளிலே மறைந்து கிடக்கின்றது உதய கிரி. அப் பரமசிவனின் நெற்றியில் திறந்து விளங்கும் நெருப்புக் கண்போல் உதயகிரியின் கொடு முடியில் உதித்து விளங்கு கின்றான் பகலவன்.

"... ... ... ... ... ... ...
சிதையுப்பனத்து இடருடைய செங்கமல
முகமலரச் செய்ய வெய்யோன்
புதையிருளில் எழுகின்ற புகர்முகயா
னையின் உரிவைப் போர்வை போர்த்த
உதயகிரி எனுங்கடவுள் நுதல்கிழித்த
விழியேபோல் உதயம் செய்தான்"[2]

[சிதையும்-நிலைகுலையும்; இடர்; துன்பம்; செங்கமலம்-செந்தாமரை; வெய்யோன்-சூரியன், புதை இருள் ஆழ்ந்த இருள்; புகர்-செம்புள்ளி; உரிவை-தோல்; நுதல்-நெற்றி.]

என்ற பாடற் பகுதியில் இக் காட்சி சித்திரிக்கப் பெற் றிருப்பதைக் கண்டு மகிழ்க. ஈண்டுக் கரிய இருளின் மீது விளங்குகின்ற வெண்ணிறங் கலந்த சிவந்த விண் மீன்கள் கரிய யானையின் முகத்தில் நிறைந்துள்ள செம் புள்ளிகளாகக் கொள்ளப் பெற்றிருப்பதை நோக்குக. கதிரவனைக் கண்ட மாத்திரத்தில் தாமரை மலர்தலும், அவனைப் பிரிந்த மாத்திரத்தில் அது குவிதலுமாகிய இயல்புபற்றித் தாமரைக் கொடிகளாகிய மகளிர்க்குக் கதிரவனைத் தலைவனாகக் கூறுதல் கவி மரபாகும்.

2. கம்பரா. பாலகா. மிதிலைக் காட்சி .150

கொழுநனாகிய தன்னைப் பிரியப் பெற்றதனால் நிலை குலைகின்ற நெஞ்சத்தில் சோகத்தையுடையவனாகக் காணப்பெறுகின்றன செந்தாமரைகள். தலைவி முகம் மலரத் தலைவன் தோன்றினதுபோல் தாமரைகள் மலரக் கதிரவன் தோன்றினான் என்ற செய்தி நயம்பட உரைக்கப் பெற்றிருத்தலைக் கண்டு தெளிக.

வெய்யோன் ஒளி பரந்து விரியும் காட்சி அடுத்து அற்புதமாகச் சித்திரிக்கப்பெறுகின்றது. அம்பலவன் ஆனந்தத் திருநடனம் புரியுங்கால் அவனுடைய திருச் சடைகள் விரிந்து பரந்து காணப்பெறுவதுபோல் கதிர்கள் விரிந்துபரவும் நிலையில் கதிரவன் காணப்பெறுகின்றான் என்ற ஒப்புமை நம் நெஞ்சை அள்ளுகின்றது. பாடலைக் காண்போம்.

"எண்ணரிய மறையினொடு கின்னரர்கள்
இசைபாட உலகம் ஏத்த
விண்ணவரும் முனிவர்களும் வேதியரும்
கரங்குவிப்ப வேலை என்னும்
மண்ணுமணி முழவதிர வானரங்கில்
நடம்புரிவான் இரவி யான
கண்ணுதல்வா னவன்கனகச் சடைவிரிந்தால்
எனவிரிந்த கதிர்கள் எல்லாம்."[3]

[எண் அரிய-அளவிடுதற்கு அருமையான; மறை-வேதம்; ஏத்த-துதிக்க; விண்ணவர்-தேவர்; வேதியர்-அந்தணர்; கரம் குவிப்ப-கைகூப்ப; வேலை-கடல்; மண்ணும் அணி-மார்ச்சனை அமைந்த; முழவு-மத்தளம்; அரங்கு-நடன சபை; வாள் இரவி-ஒளியையுடைய கதிரவன்; கண்ணுதல்-நெற்றிக்கண்; கனக சடை-பொன்னிறமான சடை; விரிந்த-பரவின]

3. கம்பரா. பாலகா. மிதிலைக் காட்சி, 153.

வானத்தின்மீது பகலவனின் கதிர்கள் பரவுதல் விண்ணையளாவி ஓங்கி யுயர்ந்து நடம் புரியும் சிவபெருமானின் செஞ்சடைகள் விரிந்து நிற்றலை ஒத்திருக்கின்றது. கதிரவன் கனன்று எழுங்காலத்தும் கண்ணுதலோன் ஆனந்தத் திருநடனம் புரியும்பொழுதும் அந்தணர்களின் அருமறை முழக்கம் எங்கும் எழுகின்றது. அவ்வமயம் கின்னரர்கள் இசை பாடுகின்றனர்; உயர்ந்தவர்கள் துதித்த நிலையிலுள்ளனர். தேவர்களும் முனிவர்களும் கைகூப்பிய நிலையில் காணப்பெறுகின்றனர். இதய கமலத்திலும் பொற்சபையிலும் ஆனந்தக் கூத்தாடும் ஆடலரசனைப் போலவே, வான் அரங்கில் 'கர, கர' வென்று சுழன்று அற்புதக் கூத்தினை நடத்துகின்றான் பகலவன். கூத்தன் நடனத்திற்கு ஏற்ப முழவு ஒலிப்பது போல, பகலவனின் நடனத்திற்குக் கடல் ஒலித்துத் தன் மகிழ்ச்சியைப் புலப்படுத்துகின்றது. இயற்கையில் ஈடுபட்டுக் களித்து நிற்கும் கம்பன் நம்மையும் இப்பாடல் வாயிலாக ஈடுபடுத்திக் களிக்கும்படி செய்கின்றான்.

**மறையும் கதிரவன்:** காலையில் 'கர, கர' வென்று எழும் ஞாயிற்றின் எழிலில் ஈடுபட்ட நாம் மாலையில் மறையும் பகலவனின் பாங்கெழிலிலும் பங்கு பெறுவோம். இதற்கு மகா கவி பாரதியார் நமக்குக் கை கொடுத்து உதவுகின்றார். அத்தினபுரத்தை நோக்கிச் செல்லும் பாண்டவர்கள் பயணத்தில் பார்த்தன் பாலைப் போல் மொழி பிதற்றும் பாஞ்சாலிக்குப் பரிதியின் எழிலை விளக்கும் பாணியில் கவிஞன் களிப்புடன் பேசுகின்றான்: "பண்மொழீ! வானத்தில் காணுந்தோறும் மாறி மாறி நவநவமாகத் தோன்றும் காட்சியைக் காண்பாயாக. இந்தப் பூவுலகில் யார் எண்ணரிய பொருள் கொடுத்து இத்தகைய தொன்றினை இயற்ற இயலும்? அன்பே, செழுஞ் சோதி வனப்பையெல்லாம் ஒரு சேரக்

கண்டு மகிழ்வாயாக" என்கின்றான். கதிரவன் 'கர, கர' வென்று அடிவானத்தில் சுழன்று இறங்குவதைத் தன் சொற்களால் ஓவியம் தீட்டிக் காட்டுகின்றான் கவிஞன்.

"அடிவானத் தேஅங்கு பரிதிக் கோளம்
அளப்பரிய விரைவினொடு சுழலக் காண்பாய்;
இடிவானத் தொளிமின்னல் பத்துக் கோடி
எடுத்தவற்றை ஒன்றுபட உருக்கி வார்த்து,
முடிவான வட்டத்தைக் காளி ஆங்கே,
மொய்குழலாய் சுற்றுவதன் மொய்ம்பு காணாய்!
வடிவான தொன்றாகத் தகடி ரண்டு
வட்டமுறச் சுழலுவதை வளைந்து காண்பாய்"[4]

[பரிதி-சூரியன்; மொய்குழல்-பாஞ்சாலி; மொய்ம்பு-வன்மை]

கணந்தோறும் இங்ஙனம் நவநவமாகப் புதிய வண்ணம் காட்டி நிற்பதைக் காளி பராசக்தி களிக்கும் கோலமாகக் காண்கின்றான் பாரதி. அம்பிகையின் திருநடனம் அம்பலவனின் கூத்தினையொத்துக் காணப் பெறுகின்றது. அவளும் வானரங்கில்தான் திருநடனம் புரிகின்றாள். அவள் திருக்கையில் பொன்மயமான வட்டத் தட்டொன்று சுழன்று கொண்டுள்ளது. பத்துக் கோடி மின்னல்களைத் திரட்டி அவற்றை ஒரு குகையில் (crucible) போட்டு உருக்கி வார்த்து ஒரு வட்டமான தட்டாக ஆக்கி அதனைத் தன் திருக்கரத்தில் தாங்கிக் கொண்டு சுழற்றுகின்றாள் அன்னை பராசக்தி. அன்னையின் அற்புதத் திருநடனத்தை மானசீகமாகக் கண்டு களிக்கும் பாரதி நமக்கு அந்த அற்புத வட்டத் தகட்டை மட்டிலும் காட்டுகின்றான். அவள் கையில் 'கர, கர' வென்று சுழன்று நிற்கும் வட்டத் தட்டே

4. பாஞ்சாலி சபதம்—150

வானத்தில் 'கர, கர' வென்றுசுழன்றுமறையும்நிலையிலுள்ள வெய்யோன் என்பது கவிஞனின் அற்புதக் கற்பனை. 'கணந்தோறும் அவள் பிறப்பாள்' என்று மேலோர் கருது வதன் விளக்கத்தை நாம் கண்டு அநுபவிக்கின்றோம்.

பாஞ்சாலிக்குப் பகலவனின் பாங்கெழிலை விளக்கும் பார்த்தன் மேலும் கூறுகின்றான்: "மின்னே, குட திசையில் தோன்றும் அற்புதக் காட்சிகளை அமைதியாகக் கண்டு களிப்பாயாக. முதலில் மின்னால் செய்யப்பட்ட வட்டினைக் காண்க. அதற்கு முன்னதாக பச்சை நிறமாகவுள்ள வட்டத்தையும் காண்பாய்; மின்வட்டினின்றும் எண்ணற்ற வயிரக் கால்கள் இடை இடையே எழுவதையும் காண்பாய். உமை அன்னை கவிதை செய்யத் தொடங்குகின்றாள். நாம் எழுந்து நின்று 'பல்லாண்டு வாழ்க!' என்று பல்லாண்டு பாடுவோம்" என்கின்றான்.

கவிஞனின் ஆனந்தக் களிப்பு அதன் கொடு முடியை எட்டுகின்றது. கதிரவனின் வடிவமும் மறை யும் நிலையில் உள்ளது. பார்த்தன் பாஞ்சாலியிடம் கொஞ்சிப் பேசுகின்றான். "அன்பே, ஊன்றிக் கவனிப் பாயாக" என்று கூறும் முறையில் செவ்வானத்தையும் அதில் காணப்பெறும் செந்நிற முகிற்படலங்களையும் சுட்டிக் காட்டியவண்ணம், "பரிதியைச் சூழ இருக்கும் படர்முகில்கள் தீப்பட்டெரிவதைக் காண்க. எத்தனை வடிவம்! எத்தனைக் கலவை! தீயின் குழம்புகளையும் செழும்பொன் காய்ச்சி விட்ட ஓடைகளையும் பார்ப்பா யாக. வெம்மை சிறிதும் தோன்றாது எரிந்திடும் தங்கத் தீவுகளைக் காண்க. இன்னொரு பக்கம் நீலப்பொய்கை கள் திகழ்வதைக் காண்க. அந்த நீலத்திலும் எத்தனை வகை! எத்தனை விதமான கலவைகள்! நீலப் பொய் கையில் மிதந்திடும் தங்கத்தோணிகளைக் கண்கொண்டு பார்க்க. இன்னொரு பக்கம் பொற்கரையிட்ட கருஞ்

சிகரங்கள் காட்சியளிப்பதைக் காண்க. பிறிதொரு பக்கம் தங்கத் திமிங்கலம் மிதக்கும் இருட்கடலைக் கண்டு களிப்பாயாக. எங்கு நோக்கினும் ஒளித்திரள்! ஒளித்திரள்! வண்ணக் களஞ்சியம்!'' என்று கூறுவதில் கவிஞனின் எக்களிப்பைக் காணலாம்.

முழுமதிய உதயம் : வெங்கதிரோன் உதயக் காட்சியையும் அவன் மறையும் காட்சியையும் கண்டுகளித்த நாம் கடலிடையே முழுமதியம் எழும் காட்சியையும் அது நிலாக் கற்றையை எம் மருங்கும் வீசி நிற்கும் காட்சியையும் கண்டு அவற்றில் ஆழங்கால் படுவோம். மீண்டும் கம்பனின் கலைக் கோயிலுக்கு வருகின்றோம். கவிஞனின் கற்பனையில் எழுந்த ஒரு திவலை இது:

''பெருந்திண் நெடுமால் வரைநிறுவிப்
பிணித்த பாம்பின் மணித்தாம்பின்
விரிந்த திவலை யுதிர்த்தமணி
விசும்பின் மீனின் மேல்விளங்க
அருந்த அமரர் கலக்கியநாள்
அமுது நிறைந்த பொற்கலசம்
இருந்த திடைவந் தெழுந்ததென
எழுந்தது ஆழி வெண்திங்கள்''.[5]

[நெடுமால்–திரிவிக்கிரம அவதாரம் செய்த திருமால்; வரை-மந்தர மலை; பாம்பு-வாசுகி; தாம்பு-கயிறு; திவலை-நீர்த்துளி; விசும்பு-வானம்; மீன்-நட்சத்திரங்கள்; கலசம்-பாத்திரம்; ஆழி-கடல்; திங்கள்-சந்திரன்].

திருமால் தேவர்கட்காக அமுதம் பெறச் செய்த ஏற்பாட்டை நமக்கு முதலில் நினைவுறுத்துகின்றான் கவிஞன். இறவாத நிலையைப் பெறுவான் வேண்டி தேவர்கள் அமுதம் பெற எண்ணுகின்றனர். மந்தர மலையை

5. கம்பரா. பாலகா. மிதிலைக் காட்சி-70.

மத்தாகவும் வாசுகி என்னும் மாநாகத்தைக் கயிறாகவும் கொண்டு திருப்பாற் கடலைக் கடையும் திட்டம் நிறை வேற்றப்படுகின்றது. அமுதம் நிறைந்த பொற்கலசம் ஒன்று பாற்கடலின் அலைகளிடையே தோன்றி ஆடி அசைந்து வருகின்றது. அந்தப் பொற்கலசத்தை யொப்பச் சந்திரன் கருங்கடலில் உதயமாகின்றான்.

இக் காட்சியின் நுட்பத்தை எண்ணுந்தோறும் இன்பம் ஊற்றெடுக்கின்றது. கருங்கடலினிடையே தோன்றிய பொன்னிறச் சந்திரன் பாற்கடலினிடையே தோன்றிய அமுதம் நிறைந்த பொற்கலசமாக உவமிக்கப் பெற்றுள்ளது. மதியின் கதிர்களால் வெண்ணிறம் அடைதல் பற்றிக் கருங்கடலுக்குப் பாற்கடல் ஒப்பாகின்றது. சந்திரன் அமுதக் கதிர்களைக் கொண்டவனாதலால் அவனுக்கு அமுதக் கலசத்தை ஒப்புக் கூறுதல் மிகப் பொருத்தமாக அமைகின்றது. பாற்கடலைக் கடைந்த காலத்தில் கடைந்த அதிர்ச்சியால் வெளியில் தெறித்தெழுந்த பால் துளிகள் விண்ணில் நட்சத்திரங்களாகவும், வலி பொறுக்கமாட்டாமல் வாசுகியின் வாயினின்றும் உதிர்ந்த இரத்தினங்கள் கோள்களாகவும் காணப்பெறுகின்றன என்பது கவிஞனின் குறிப்பு. மேலும், சந்திரமண்டலம் வெண்ணிறத்ததாயினும் உதிக்கும் காலத்துச் செந்நிறமாகக் காணப்பெறுதலின் அது பொற்கலசமாக உருவகிக்கப் பெற்றது என்பது ஆழ்ந்து அறிய வேண்டிய குறிப்பு. கவிஞன் கூறும் முழுமதியக் காட்சியை மனத்திரையில் அமைத்து இன்பக் கடலில் மிதக்கின்றோம்.

வெண்மதியத் தோற்றம் இன்னொரு முறையாலும் வருணிக்கப் பெறுகின்றது. பாலனாகி ஏழுலகமும் உண்டு அந்த உண்ட களைப்புத் தீர ஆலிலையில் உறங்குவான் போல் யோகு செய்யும் பரந்தாமனின் உந்திக் கடலில் ஒரு

செந்தாமரை முகை தோன்றிற்று. நான்முகன் வண்டாக நின்று நான்மறைகளைப் பாட அம் முகை மலர்ந்தது. திருமாலின் திருவுந்திக் கடல் ஒரு செந்தாமரை மலரைப் பூத்தது கண்டு கருங்கடலும் ஒரு வெண்டாமரையைப் பூத்தது போல் அக்கடலில் சந்திரன் தோன்றினான். இவ்வுலகில் ஒருவர் ஒரு செயலை மேற்கொண்டால் பிறரும் அது போன்ற தொன்றை விரும்பிச் செய்தலும், அங்ஙனம் செய்யுங்கால் சிறிது வேறுபாடு காட்டுதலும் உலகத்தாரது தன்மை யாதலின், உந்திக் கடல்போல் செந்தாமரை பூவாது வெண்டாமரை பூத்தது என்ற நயம் தோன்ற உரைத்தான் கவிஞன். கலை நிறைந்த சந்திரமண்டலம் இதழ் விரிந்த வெண்டாமரை மலரை யொத்து நின்றது. தாமரை பூப்பது நீர்நிலையிலாதலின், உந்தி கடலாகக் கொள்ளப்பெற்றது.

நிலாக்கற்றை பரவுதல்: முழுமதியம் வீசும் கதிர்கள் பரவும் தன்மையைக்காட்டும் கவிஞனின் மதிநுட்பம் போற்றத்தக்கதாக அமைகின்றது. புள்ளிகளை அடையாளம் இட்டதுபோல் 'மினுக்மினுக்'கென்று விண்மீன்கள் ஒளிர்கின்ற வானத்தில், எம்மருங்கும் இருள் கவிந்து நிற்கின்றது. மதியினின்று கிளம்பும் நிலாக் கற்றை நாற்புறமும் கவிந்து நிற்கும் இருட் படலத்தை நக்கி உலர்கின்றது. சந்திரனின் இருப்பும் அதிலிருந்து புறப்படும் கதிர்களும் ஓர் அழகான கற்பனை மூலம் விளக்கப் பெறுகின்றன. கீழ் வானத்தில் எழிலுடன் அமைக்கப் பெற்றுள்ளது ஒரு மேடை; அதன்மீது வெள்ளி மயமான பூர்ண கும்பம் வைக்கப்பெறுகின்றது. அந்தக் கும்பத்தில் இலிங்கமுகப் பாளை விரித்து வைக்கப் பெறுகின்றது. மங்கல நிகழ்ச்சிக்கு அடையாளமாக வைக்கப்பெறும் பூர்ணகும்பம்போல் காட்சியளிக்கின்றது கீழ் வானத்தில் உதயமாகும் முழுமதியம்,

இதனை அடுத்து நிலாகற்றை பரவும் நேர்த்தியை விளக்கக் கவிஞன் கூறும் கற்பனை ஓவியம் நம் உள்ளத்தைப் பிணித்து நிற்கின்றது. அந்த இன்னமுத ஓவியம் இது :

"நீத்தம் அதனில் முளைத்தெழுந்த
நெடுவெண் திங்கள் எனும்தச்சன்
மீத்தன் கரங்கள் அவை பரப்பி
மிகுவெண் நிலவாம் வெண்சுதையால்
காத்த கண்ணன் மணியுந்திக்
கமல நாளத் திடைப் பண்டு
பூத்த அண்டம் பழையதென்று
புதுக்கு வானும் போன்றுளதால்."[6]

[நீத்தம்-கடல்வெள்ளம்; திங்கள்-சந்திரன்; தச்சன்-சிற்பி; கண்ணன்-திருமால்; உந்தி-நாபி, பண்டு-முன்பு; பூத்த-தோன்றின; கரங்கள்-கிரணங்கள்; பரப்பி-பரவச் செய்து; சுதை-சுண்ணச் சாந்து.]

பழைய காலத்தில் திருமாலின் திருவுந்திக் கமலத்தில் தோன்றின இந்த அண்டகோளமாகிய வீடு மிகவும் பழையதாகிவிட்டது என்று கருதுகின்றான் கடல் வெள்ளத்தில் உதித்து மேலெழுந்த நெடுவெண் திங்கள் என்னும் சிற்பி. உடனே அவன் அதனைப் புதுப்பிக்க நினைக்கின்றான். தன் கதிர்களாகிய கைகளை நாற்புறமும் பரப்பி வெள்ளிய நிலாவாகிய வெண்ணிறமுள்ள சுண்ணச் சாந்தினால் புதுப்பிக்கின்றான். சிற்பி வீட்டிற்கு வெள்ளையடிப்பதுபோல் நிலாக் கற்றை நாற்புறமும் பரவி நிற்கின்றது என்று கூறும் கவிஞனின் கற்பனை கற்போர் கருத்தைக் கவர்கின்றதன்றோ?

6. கம்பரா. பாலகா. மிதிலைக் காட்சி-74.

**புரட்சிக் கவி காட்டும் முழு மதியம்:** இங்ஙனம் முழு மதியத்தில் பேரழகில் ஈடுபடுகின்றனர் கவிஞர்கள். இக் காலக் கவிஞர் ஒருவர் அந்த அழகில் ஈடுபடுவதைக் காண்போம். காதல் மயக்கத்தில் ஆழ்ந்து கிடக்கும் ஒரு கவிஞன் வாயில் வைத்தே பேசுகின்றான் கவிஞன்.

''நீலவான் ஆடைக்குள் உடல்ம றைத்து
நிலாஎன்று காட்டுகின்றாய் ஒளிமு கத்தைக்
கோல முழுதும் காட்டிவிட்டால் காதல்
கொள்ளையிலே இவ்வுலகம் சாமோ? வானச்
சோலையிலே பூத்ததனிப் பூவோ நீதான்!
சொக்கவெள்ளிப் பாற்குடமோ? அமுத ஊற்றோ?
காலைவந்த செம்பரிதிக் கடலில் மூழ்கிக்
கனல்மாறிக் குளிரடைந்த ஒளிப்பி ழம்போ''.[7]

[வான்-ஆகாயம்; கோலம்-அழகு; சொக்க வெள்ளி-கலப்படமற்ற வெள்ளி; பரிதி-சூரியன்; கனல்-சூடு.]

இங்குக் கவிஞன் சந்திரனை ஒரு பெண்ணாக உருவகிக்கின்றான். அந்தப் பெண் நீலஆடை புனைந்து உடலையெல்லாம் மறைத்துக் கொண்டு முகத்தைமட்டிலும் வெளிக் காட்டுகின்றாள். அவளுடைய முழு அழகையும் காட்டி விட்டால் அவள் காதல் வெள்ளத்தில் உலகம் இறந்துபடுமோ என்று வினவுகின்றான். ''சந்திரனே, நீ வானச் சோலையில் பூத்த ஒரு தனிப் பூவோ? பாலமுதம் நிறைந்த சொக்க வெள்ளிக்குடமோ? அமுத ஊற்றோ? காலையில் கனன்று எழுந்த செவ்விய சூரியன் கடலில் மூழ்கி வெப்பத்தை இழந்து தண்ணொளி வீசும் ஒளிப் பிழம்பாக வடிவெடுத்ததோ?'' என்று நேருக்கு நேர் பேசுவது நம்மைக் கிளர்ந்தெழச் செய்கின்றது. பிள்ளைத் தமிழ்க் கவிஞர்கள்

7. பாரதிதாசன்—'புரட்சிக்கவி'.

'அம்புலிப் பருவத்தில்' அமைத்துக் காட்டும் கற்பனையெல்லாம் ஆழ்ந்திருக்கும் கவியுள்ளத்தைக் காட்டி நிற்பதாகும்.

இங்ஙனம் கவிஞர்கள் 'இருசுடர் தோற்றத்தை' இன்பம் ததும்ப எடுத்துக் காட்டியுள்ளனர். உள்ளக் கனிவுடன் பாடல்களை நுகர்பவர்கட்குத்தான் இந்த இன்பம் தட்டுப்படும். இளமையிலிருந்தே நல்ல முறையில் தரப்பெறும் இலக்கியப் பயிற்சியாலேயே இக் கனிவு பிறக்கும். இக் கனிவு பெற்றால் உலகில் எல்லாவற்றையும் இன்பமாகக் காணும் ஆற்றல் தோன்றக்கூடும். துன்பக் கடல்போன்ற இவ்வுலகில் இத்தகைய பாடல்கள் 'மம்மர் அறுக்கும் மருந்தாக' இருந்து அவ்வப்பொழுது சிறிதளவு விண்ணுலக இன்பத் தேன் துளிகளைப் பிலிற்றி நம்மைத் தேற்றி நிற்கின்றன.

## 3. அணுவில் ஆனந்தக் கூத்து

"கற்பனை கடந்த சோதி
கருணையே யுருவ மாகி
அற்புதக் கோலம் நீடி
அருமறைச் சிரத்தின் மேலாம்
சிற்பர வியோம மாகும்
திருச்சிற்றம் பலத்துள் நின்று
பொற்புடன் நடஞ்செய் கின்ற
பூங்கழல் போற்றி போற்றி".[1]

—சேக்கிழார்

'அண்டத்தில் போலத்தான் பிண்டத்திலே' என்பது நமது நாட்டில் வழங்கிவரும் பழமொழி. இந்தப் பழமொழி யின் உண்மையினை அணுவாராய்ச்சியின் முடிபாக இருப்பதை அறிவியலறிஞர்கள் காட்டியுள்ளனர். அணுவின் அமைப்பும் அண்டத்தின் அமைப்பும் ஒப்புடையனவாக உள்ளன என்று அவர்கள் ஆய்வுகளால் மெய்ப்பித்து விட்டனர்.

இந்த உலகில் 92 வகை அணுக்கள் உள்ளன என்றும், இந்த அணுவகைகள் ஒவ்வொன்றும் ஒவ்வொரு விதமாக இருக்கின்றன என்றும், இவை யாவும் தம்மோடு தாமாகச் சேர்ந்து அணுத்திரளைகள் (Molecules) ஆகின்றன என்றும் இப்படிப்பட்ட அணுத்திரளைகளாலான சேர்க்கைப் பொருள்கள் (Compounds) ஏழு இலட்சத்திற்கு மேலும் உள்ளன என்றும் அவர்கள் விளக்கிக் கூறிக் கணக்கிட்டும்

1. திருத்தொண்டர் புரா—தில்லைவாழந்தணர்-12.

காட்டுவர். இதனால் அணுக்களின் திரட்சியே அண்டங்களா கின்றது என்பதை அறிகின்றோம். அறிவியலறிஞர்கள் இன்று கண்டுள்ள மெய்ம்மையினையே மெய்யுணர்வு பெற்ற நம் நாட்டுப் பெரியார்கள் அநுபவ உண்மையாகக் காட்டி யுள்ளனர்.

"அண்டங்கள் எல்லாம் அணுவாக
அணுக்கள் எல்லாம்
அண்டங்க ளாகப் பெரிதாய்ச்
சிறிதாயி னானும்
அண்டங்க ளுள்ளும் புறம்புங்
கரியாயி னானும்
அண்டங்கள் ஈன்றான் துணைஎன்பர்
அறிந்த நல்லோர்"[2]

என்று பரஞ்சோதி முனிவர் இறையுண்மையுடன் இணைத்துக் காட்டுவர். இங்ஙனம் அறிவியலறிஞர்கள் ஆய்வுகள் மூலம் கண்டவற்றையே நம் நாட்டு ஞானச் செல்வர்கள் உள்ளுணர்வால் அநுபவமாகக் கண்டு அநுபவித்துள்ளனர். இவர்கள் கண்ட அநுபவ இயலும் அறிவியலறிஞர்களின் அணுவியலும் ஓரிடத்தில் சந்திப் பதை ஆய்ந்து பார்ப்போர் நன்கு அறிவர். இந்தச் சந்திப்பைத் தெளிவாக விளக்க முயல்வோம் இக்கட்டுரை யில். அணுக்கோயிலின் முன்நிற்கும் விஞ்ஞானிகளும் அண்டக்கோயிலின்முன் நிற்கும் மெய்ஞ்ஞானிகளும் ஒரே உண்மையைக் காண்கின்றனர் என்பதை நாம் அறியுங்கால் எல்லையற்ற மகிழ்ச்சியடைகின்றோம்; இறைவன் படைப் பின் விந்தையை எண்ணி எண்ணி வியப்படைகின்றோம்.

**அண்டங்களின் அமைப்பு:** முதலாவதாக அண்டங் களின் அமைப்பைக் காண்போம். இந்த அகிலத்திலுள்ள (Universe) அண்டங்கள் யாவும் கதிரவ மண்டலத்தில்

2. பரஞ்சோதியார்: திருவிளையாடல்-பாயிரம்-6.

அமைந்துள்ளன. வானவெளியில் எத்தனையோ அண்டங்கள் உள்ளன. மணிவாசகப் பெருமானும்,

அண்டப் பகுதியின் உண்டைப் பிறக்கம்
அளப்பருந் தன்மை வளப்பருங் காட்சி
ஒன்றனுக் கொன்று நின்றெழில் பகரின்
நூற்றொரு கோடியின் மேற்பட விரிந்தன[3]

என்ற இவற்றின் தொகையைக் கூறியுள்ளமை ஈண்டு கருதத்தக்கது. கண் சிமிட்டும் கோடானுகோடி விண்மீன்கள் ஒவ்வொன்றும் நமது சூரியனுக்கு ஒப்பானவை. ஒவ்வொன்றுக்கும் பேருருவமும் சுயஒளியும் உண்டு. அத்தனையும் அண்டங்களே. அவை அளப்பரும் சேய்மையி லிருப்பதால் பேராற்றல் மிக்க ஒரு தொலை நோக்கியில் (Telescope) கூட அவை சிறு சிறு புள்ளிகள்போல் தோற்றுகின்றன. கதிரவ மண்டலத்தில் நாம் காண்பதென்ன? கதிரவன் நடுவில் அமைந்திருக்கின்றான். அவனைச் சுற்றி புதன், வெள்ளி, பூமி, செவ்வாய், வியாழன் சனி, யுரேனஸ் நெப்தியூன், புளூட்டோ ஆகிய கோள்கள் இதே வரிசை முறையில் அமைந்துள்ளன. நமக்கும் (பூமி) சூரியனுக்கும் இடையிலுள்ள புதனையும் வெள்ளியையும் அகக்கோள்கள் என்றும், செவ்வாய் முதல் புளூட்டோ ஈறாகவுள்ள கோள்களை நமக்கப்பால் அமைந்திருப்பதால் அவை புறக் கோள்கள் என்றும் வழங்குகின்றோம். அவை யாவும் கதிரவனைச் சுற்றி அயனப்பாதையில் (Orbit) வெவ்வேறு வேகங்களில் சுற்றி வந்து கொண்டுள்ளன.

சென்னை போன்ற பெரு நகரங்களிலுள்ள சாலைகள் போக்குவரவுக்காகப் பல பத்திகளாகப் பிரிக்கப் பெற்றுள்ளன அல்லவா? சாலையின் நடுவிலுள்ள பத்திகளில் வேகமாக ஓடும் மோட்டார் வண்டிகள்தாம் செல்லலாம்.

---

3. திருவாசகம்-திருவண்டப்பகுதி அடி: (1-4)

ஓரங்களிலுள்ள பத்தியில் மாட்டு வண்டிகள் போன்ற மெதுவாகச் செல்லும் ஊர்திகள் அநுமதிக்கப்படுகின்றன. ஊர்க்காவலரின் ஆணையாலும் கண் காணிப்பாலும் இவை வழி விலகாது சென்று கொண்டுள்ளன. அங்ஙனமே புறமுக ஆற்றல் (Centrifugal force) என்ற ஒருவித இறைவனது ஆணையால் இக்கோள்களும் வழி விலகாமல் சுற்றிவந்து கொண்டுள்ளன. தம்மீதுள்ள பொருள்களும் வானத்தில் வீசியெறியப்பெறாமலும் உள்ளன. ஒவ்வொரு கோள்கட்கு இடையிலும் பல்லாயிரக்கணக்கான மைல் இடைவெளி கள் உள்ளன. இந்த இடைவெளிகளில்தான் சில சமயம் வால்மீன்களையும் (Comets) விழ்மீன்கள் அல்லது எரிமீன் களையும் (Meteors) காண்கின்றோம்.

**ஆற்றலின் மூலம்:** பூமியும் ஏனைய கோள்களும் தத்தம் வாழ்வு நலன்களைச் சூரியனிடமிருந்தே பெறு கின்றன. சூரியன்தான் குடும்பத்தின் தலைவன். கோள் களும், சிறுகோள்களும், வால் மீன்களும் அவன் பெற்ற குழவிகள். நம் பூமியையும், செவ்வாய், வியாழன், சனி, யுரேனஸ், நெப்தியூன் போன்ற கோள்களைச் சுற்றி வரும் சந்திரர்கள் இவனுடைய பேரப் பிள்ளைகள். இவை யாவும் சூரியனிடமிருந்துதான் தத்தமக்கு வேண்டிய வெப்பத்தை யும் ஒளியையும் பெறுகின்றன.

பூமியின் உயிர் நாடியாக இருப்பது சூரியனுடைய வெப்பமே. அதன் மேற்புற வெப்ப நிலை 12,000°F. உட்புற வெப்பநிலை 4,00,00,000°F. சூரியனிடம் உற்பத்தியாகும் வெப்பத்தின் அளவை இவ்வளவு என்று திட்டமாகக் கணக்கிட முடியாது. இரண்டேகால் மைல் குறுக்களவும் ஒன்பது கோடியே முப்பது இலட்சம் மைல் உயரமும் உள்ள பனிக்கட்டிக் கம்பத்தின் மீது கதிரவனின் வெபப முழுவதையும் செலுத்தினால் அஃது ஒரு வினாடி யில் நீராக உருகிவிடும் என்றும், அப்படி உருகின நீர் எட்டு

வினாடிகளில் ஆவியாக மாறிவிடும் என்றும் அறிவியலறிஞர்கள் ஒருவாறு கணக்கிட்டுக் கூறுகின்றனர். ஒவ்வோர் ஆண்டிலும் சூரியனுடைய வெப்பத்தால் பூமியின் மீதுள்ள கடல், ஆறு, குளம் இவற்றினின்றும் 49 கோடி டன் நீர் ஆவியாக மாறுகின்றது. வானத்தில் ஒரு மைல் உயரத்தில் இந்த ஆவி மேகமாக மாறுகின்றது. மேகம் குளிர்ந்து மழையாகப் பூமியின்மீது கொட்டுகின்றது. மழையின் துணையால் தாவரங்களும் பிராணிகளும், மக்களும் உயிர்பெற்று வாழ்கின்றனர்.

மழை நீரினால் ஏரிகளும் குளங்களும் நிரம்புகின்றன. ஆறுகள் பெறுக்கெடுத் தோடுகின்றன. நீரோட்டத்தைத் தேக்கி மின்னோட்டத்தை விளைவித்துஅதை மனிதன் தன் வாழ்க்கைக்குப் பலவழிகளிலும் பயன்படுத்திக் கொள்ளுகின்றான். உலகிலுள்ள எல்லா ஆறுகளிலும் ஓடுகின்ற நீரின் ஆற்றலைக் கொண்டு சுமார் முப்பத்தைந்து கோடிக் குதிரைத் திறன் அளவு ஆற்றலைப் பெறலாம் என்று மதிப்பிடுகின்றனர். கதிரவன் வெப்பத்தையொட்டியே காற்றுகள் வீசுகின்றன; காற்றின் ஆற்றல் குறைந்த அளவு பயன்படுகின்றது. மின்னலில் உண்டாகும் மின்னாற்றலைக் கட்டுப்படுத்த இன்னும் அறிவியலறிஞர்கள் வழி வகுக்கவில்லை. ஒவ்வொரு மின்னலிலும் சுமார் 1000 குதிரைத் திறன் அளவு ஆற்றல் வெளிப்படுவதாகவும் உலகின் பல பாகங்களில் வினாடி யொன்றுக்குச் சராசரி பதினாறு மின்னல்கள் ஏற்பட்டு வருவதாகவும் மதிப்பிடப் பெற்றுள்ளது.

கதிரவனிடமிருந்து பெறும் ஆற்றலைத் துணை கொண்டே, தாவரங்கள் வேதியியல் செயல்களை விளைவித்து ஆண்டுதோறும் பத்தாயிரம் மிலியன் டன் மரத்தையும் பலநூறு மிலியன் டன்கள் கோதுமை, அரிசி, ஏனைய உணவு வகைகள் ஆகியவற்றையும் உற்பத்தி செய்

கின்றன. முன்னொரு காலத்தில் சூரிய வெப்பத்தால் வளர்ந்து கால பேதத்தால் பூமிக்குள் புதையுண்டு போன மாபெரும் மரங்கள் பாறைகளின் அதிக அழுத்தத்திற்கும் பூமியின் வெப்பத்திற்கும் உட்பட்டு நிலக்கரியாகவும் பெட்ரோலியமாகவும் மாறிக் கனிகளினின்றும் (Mines) கிடைக்கின்றன. இவற்றைக் கொண்டு இரயில் வண்டிகளையும் மோட்டார் வண்டிகளையும் இயக்குகின்றோம். இவற்றையெல்லாம் ஆழ்ந்து நோக்கின் கதிரவனே உலகின் ஆற்றல் மூலம் என்பது தெரிகின்றது.

இனி, அணுவின் அமைப்பை நோக்குவோம். அணு மிகமிக நுண்ணிய துகள். பேராற்றல் வாய்ந்த நுண்பெருக்கியால் (Microscope) காண முயன்றாலும் அது நமது ஊனக் கண்ணுக்குப் புலனாவதில்லை. அரைக் கோடி அணுக்களை அணிவகுத்து நிற்க வைத்தால் அவை நாம் எழுதும்பொழுது வைக்கும் ஒரு சிறு முற்றுப் புள்ளியினுள் அடங்கிவிடும். எனினும், அறிவியலறிஞர்கள் மிகச் சிறிய அணுவின் அளவினையும் கணக்கிட்டுள்ளனர். ஓர் அங்குலத்தினை இருபத்தைந்து கோடி அளவுகளாகப் பங்கிட்டால் கிடைக்கும் அளவே அணுவின் குறுக்களவாகும் என்று கண்டுள்ளனர். பெரிய அணுவின் குறுக்களவு இதனைவிட இரண்டரை மடங்கு பெரியது; அஃதாவது, ஓர் அங்குலத்தினைப் பத்துக் கோடியாகப் பங்கிட்டதில் ஒரு பங்காகும் அது. ஒரு திராட்சைப் பழத்திலுள்ள ஒவ்வோர் அணுவும் ஓர் அங்குல விட்டமுள்ள பந்துபோல் பெருக்கமடைவதாகக் கற்பனை செய்து கொண்டால், அந்தத் திராட்சைப் பழம் நம் பூமியளவு உப்பிப் பெருக்கமடைந்துவிடும். விருப்பம் போல் ஓர் உருவத்தைப் பருக்கச் செய்யும் மகிமாச் சித்தர் ஒருவர் ஒரு கையில் ஒரு நீரிய அணுவையும் மற்றொரு கையில் ஒரு சிறு பந்தினையும் வைத்துக்கொண்டு ஒரே

வீதத்தில் இரண்டினையும் விம்மிப் பெருக்கமடையச் செய்து கொண்டுபோனால், பந்து இவ்வுலக அளவு பெரிதாக விம்மித்தோன்றும் பொழுது, அணு பந்து அளவுதான் பெருக்கமடையும். பந்திற்கும் உலகிற்கும் எவ்வளவு வேற்றுமை! இவற்றிலிருந்து அணுவின் நுட்பத்தை ஓரளவு தெளிவாக அறியலாம்.

அணுவின் நடுவிலிருப்பது உட்கரு (Nucleus); அதில் புரோட்டன்களும் சிலவகை அணுக்களில் புரோட்டான்களுடன் நியூட்ரான்களும் அடங்கியுள்ளன. உட்கருவினைச் சுற்றியுள்ள பல வட்டங்களில் எலக்ட்ரான்கள் சுழன்று கொண்டுள்ளன. இந்த வட்டங்கள் வெவ்வேறு தூரங்களில் அமைந்துள்ளன. கதிரவ மண்டலத்தில் சூரியனைச் சுற்றிப் பல வட்டங்களில் வெவ்வேறு தூரங்களில் கோள்கள் அமைந்திருப்பது போலவே, உட்கருவினைச் சுற்றிப் பல வட்டங்களில் பல்வேறு தூரங்களில் எலக்ட்ரான்கள் அமைந்துள்ளன. உட்கருவிலுள்ள புரோட்டான்கள் நேர்மின்னூட்டம் கொண்டவை; நியூட்ரான்களுக்கு மின்னூட்டம் இல்லை; வட்டங்களிலுள்ள எலக்ட்ரான்கள் எதிர் மின்னூட்டம் பெற்றவை. புரோட்டான்களும் நியூட்ரான்களும் எடையில் சமமுள்ளவை. எலக்ட்ரான்கள் புரோட்டான் அல்லது நியூட்ரானின் எடையில் 1840 இல் ஒரு பங்கு எடையையே பெற்றுள்ளன. ஓர் அணுவில் ஓர் எலக்ட்ரான் இருப்பின் ஒரு மின்னூட்டம் இருக்கும்; இரண்டு எலக்ட்ரான்கள் இருப்பின் இரண்டு மின்னூட்டமாகும். எலக்ட்ரான்களின் எண்ணிக்கை வளர வளர அணுவின் மின்னூட்டமும் படிப்படியாக வளர்ந்து கொண்டே போகும். ஓர் அணுவில் உட்கருவினைச் சுற்றிக் கோள் நிலையில் சுழன்று வரும் எலக்ட்ரான்கள் ஒன்றிலிருந்து படிப்படியாக 92 வரையிலும் உயர்ந்து கொண்டே போகின்றன. இதனால்தான்

அணுக்களின் வகையும் 92 ஆயிற்று. ஓர் அணுவில் புரோட்டானோ எலக்ட்ரானோ வந்தால் மின்னூட்டம் மாறும்; நியூட்ரான் வந்தால் அது மாறுவதில்லை; இதன் வருகையால் அணுவகையும் மாறுவதில்லை. ஆனால் அணுவின் எடையில் மட்டிலும் மாற்றம் நிகழ்கின்றது.

இன்று கண்டறியப்பட்ட 92 தனிமங்களின் அணுக்களில் மிகச் சிறியது நீரிய அணு (Hydrogen atom); மிகப் பெரிய அணு யுரேனிய அணு. நீரிய அணுவின் உட்கருவில் ஒரே ஒரு புரோட்டான் உள்ளது. வட்டத்தில் ஒரே ஓர் எலக்டரான் சுற்றுகின்றது. யுரேனிய அணுவின் உட்கருவில் 92 புரோட்டான்களும் 143 நியூட்ரான்களும் செறிந்துள்ளன. அதைச் சுற்றியுள்ள ஏழு வட்டங்களில் 92 எலக்ட்ரான்கள் சுற்றி வருகின்றன. ஏனைய அணுக்கள் யாவும் இந்த இரண்டு அணுக்கட்கும் இடைப்பட்டவை. இந்த அணுக்களில் எலக்ட்ரான்களின் அமைப்பு ஓர் ஒழுங்கில்தான் உள்ளது. இந்த அணுக்களின் உட்கருவினைச் சுற்றியுள்ள வட்டங்களும் அதிகரிக்கின்றன. உட்கருவினுக்கு அடுத்துள்ள முதல் வட்டத்தில் 2 எலக்ட்ரான்கள் தாம் இருக்கக் கூடும். இரண்டாவது வட்டம் 8 எலக்ட்ரான்களைக் கொள்ளும். அதற்கு அடுத்த மூன்றாவது வட்டமும் 8 எலக்ட்ரான்களைத் தான் கொள்ளும். நான்காவது ஐந்தாவது வட்டங்கள் ஒவ்வொன்றிலும் 18 எலக்ட்ரான்களையும், ஆறாவது ஏழாவது வட்டங்கள் ஒவ்வொன்றிலும் 32எலக்ட்ரான்களையும் கொள்ளும். இந்த எண் வரிசைகளை உற்று நோக்கினால் அடியிற் கண்டவாறு ஒரு பொருத்தமும் காணப்படுகின்றது.

$$(1\times1)2=2.1^2=2$$
$$(2\times2)2=2.2^2=8$$
$$(3\times3)2=2.3^2=18$$
$$(4\times4)2=2.4^2=32$$

1, 2, 3, 4 என்ற நான்கின் மடங்கெண்களை இரண்டால் பெருக்கிய தொகையாக இவை வருகின்றன. இந்த வட்டங்களில் முதல் நான்கு வட்டங்களே முழுதும் நிரம்பியுள்ளன. ஐந்து, ஆறு ஏழு வட்டங்கள் கனமுள்ள அணுக்களில்வரும் வட்டங்களாகும். இவை முழுதும் நிரம்பி இருப்பதில்லை. இந்த மேல்நிலை வட்டங்களில் வெளிப் புறத்தில் இருக்கும் மண்டலம் மேற்காட்டிய கணக்குப்படி 18 அல்லது 32 எலக்ட்ரான்கள் கொண்டு விளங்க வேண்டும் என்றிருப்பினும் எந்த வெளிப்புற வட்டத்திலும் 8 எலக்ட்ரான்களுக்கு மேல் இருப்பதில்லை என்பது அறியத் தக்கது. இந்த வெளிப்புற வட்டத்திலுள்ள எலக்ட்ரான்களின் எண்ணிக்கையைக் கொண்டுதான் ஒரு பொருளின் வேதியியல் நாட்டம் (Chemical affinity) அறுதியிடப் பெறுகின்றது.

அணுவில் மிகச் சிறியது நீரிய அணு என்பதை மேலே குறிப்பிட்டோம். அதன் குறுக்களவு ஓர் அங்குலத் தில் பத்துக் கோடியில் ஒரு பங்கைக் காட்டிலும் குறை வானது. ஆனால், அதன் உட்கருவின் குறுக்களவு இதில் 20,000-இல் ஒருபங்குதான். அஃதாவது உட்கருவின் குறுக் களவினைக் காட்டிலும் அணுவின் குறுக்களவு 20,000மடங்கு பெரியது. எலக்ட்ரானின் குறுக்களவு அணுவின் குறுக்களவில் ஐம்பதாயிரத்தில் ஒரு பங்கு. புரோட்டானின் குறுக் களவு எலக்ட்ரானின் குறுக்களவில் இரண்டாயிரத்தில் ஒரு பங்கு. ஆனால் புரோட்டான் எலக்ட்ரானைவிட 1840-மடங்கு கனமுடையது. எடையிற் பெரிய உட் கரு எடையிற் சிறிய எலக்ட்ரானைவிடப் பரிமாணத்தில் சிறியதாக இருப்பது ஒரு வியப்பு. அணுவின் எடை முழுவதும் அதன் உட்கருவிலேயே அடங்கிக் கிடக் கின்றது.

ஓர் அணுவின் அளவினைப் பெரிதாக்கி அதன் பரப்பை இருபது மீட்டர் விட்டமுள்ள வட்டத்தில்

குறிப்பிட்டால், அப்பொழுது ஒரு மில்லி மீட்டரில் பத்தில் ஒரு பங்குள்ள ஒரு மையப் புள்ளியே அதன் உட்கருவினைக் குறிக்கும். மகிமாச் சித்தர் ஒருவர் ஒரு துளி நீரை உலகம் அளவு பெரியதாகச் செய்ய முடியு மானால், அதிலுள்ள ஒவ்வோர் அணுவும் ஒரு மீட்டர் குறுக்களவுடையதாக இருக்கும். அப்பொழுதும் உட் கருவின் குறுக்களவு ஒரு மில்லி மீட்டரில் நூறில் ஒரு பங்குதான் இருக்கும். அதே சித்தர் ஒரு நீரிய அணுவினை 600 மைல் குறுக்களவுள்ள கோளம் போல் விம்மி உப்பச் செய்தால் நடுவில் அதன் உட் கரு ஒரு பட்டாணி அளவு இருக்கக் காணலாம். எலக்ட்ரானோ இதனினும் மிகப் பெரியதாய், 30 அடி குறுக்களவுள்ள பெரிய உருண்டையாய், கோளத்தின் விளிம்பில் கிடக்கும். எனவே, அணு முழுவதும் பெரும் பாலும் காலியிடமே நிறைந்துள்ளது; எல்லாம் வெட்ட வெளியாகக் கிடக்கின்றது. கதிரவனுக்கும் கோள்கட்கும் இடையில் வெட்டவெளி இருப்பது போலவே, அணுவிலும் உட்கருவிற்கும் எலக்ட்ரான்களுக்கும் இடையில் எல்லாம் வெட்ட வெளியேயாகும். ஒருவர் அணுவைத் துளைத்து அதனுள் பறந்து செல்லக் கூடுமானால், அவர் எலக்ட்ரானையோ உட்கருவினையோ அடிக்கடிச் சந்திக்க முடியாது. இதனால்தான் உட்கருவினைத் தாக்கிச் சிதைக்க முயலுங்கால் தாக்கச் செல்லும் பொருள்கள் (வேகம் வளர்க்கப் பெற்ற நியூட்ரான்கள் போன்றவை) உட்கருவில் படாமல் வெட்டவெளியில் ஓடிப் போகின்றன.

அணுவின் உட்கருவிலுள்ள துகள்கள் மிக இறுகப் பிணைக்கப் பெற்றுள்ளன. நாம் இதுகாறும் அறிந்துள்ள ஆற்றல்கள் அனைத்திலும் இவை பிணைந்திருக்கும் ஆற்றல் மிகப் பெரியது. இந்த ஆற்றலை 'உட்கருவின் பிணைப்பாற்றல்' (Binding energy of the nucleus) என

வழங்குவர். அணுவில் உட்கருவிற்கும் எலக்ட்ரான்களுக்கும் இடையேயுள்ள மின்னாற்றலைவிட இவ்வாற்றல் பத்து இலட்சம் மடங்கு பெரியது; வன்மையும் வாய்ந்தது. இந்த ஆற்றல்தான் ஹிரோஷீமாவை அழித்தது; நாகசாகியை நாசமாக்கியது. இதுவே அணுக்குண்டில் செயற்படும் மாபெரும் ஆற்றலாகும்.

மேற்கூறியவற்றை ஆழ்ந்து நோக்குங்கால் அண்டத்தின் அமைப்பும் அணுவின் அமைப்பும் ஒன்றுபோல் இருப்பதை அறிகின்றோம். இந்த அகிலத்தைச் சிவமாகக் கொண்டால் சூரியன் சக்தியாகின்றது. அங்ஙனமே அணுவின் உட்கருவும் சக்தியாகின்றது. ஒருவருடைய உயிர்ப்பு ஆற்றல் அவருடைய தடைபடாத இதயத் துடிப்பில் இருப்பது போலவே, இந்த அகிலத்தின் ஆற்றல் கதிரவனிலும், அணுவின் ஆற்றல் அதன் உட்கருவிலும் அடங்கியுள்ளன. அண்டங்களின் தத்துவமும், அணுவின் தத்துவமும் தில்லைத் திருநடனத் தத்துவத்தில் வைத்து விளக்கப்பெற்றுள்ளன; இவற்றை நமது முன்னோர்கள் அழகான ஆடலரசத் திருவுருவத்தின்மூலம் நமக்கு என்றைக்கும் எடுத்துக் காட்டாக இருக்குமாறு செய்துள்ளனர். திருமூலரும் இதனை,

எங்குந் திருமேனி எங்குஞ் சிவசத்தி
எங்குஞ் சிதம்பரம் எங்குந் திருநட்டம்
எங்குஞ் சிவமா யிருத்தலால் எங்கெங்குந்
தங்குஞ் சிவனருட் டன்விளையாட்டதே.[4]

என்று விளக்குவர். எங்கும் சிவனுடைய திருமேனியுள்ளது; பார்க்குமிடந்தோறும் அவனுடைய அருளாற்றல் நீக்கமற நிறைந்துள்ளது. அவன் திருவருளால் நடைபெறும் படைத்

4. திருமந்திரம்-ஒன்பதாந்தந்திரம்-திருக்கூத்து தரிசனம்-1.

தல், காத்தல், துடைத்தல், மறைத்தல், அருளல் என்ற திருத்தொழில்கள் ஐந்தும் ஆருயிர்களின் நன்மையின் பொருட்டேயாகும். இவை அனைத்தும் சிவசக்தியின் வாயிலாகவே அவன் செய்தருள்கின்றனன். அம்மையும் அப்பனும் நுண்ணறிவு அம்பலமாம் திருச்சிற்றம்பலத்தின் கண் விளங்கியருள்கின்றனர். அதனால் எல்லாம் சிதம்பர மாகின்றது; அவன் செய்தருளும் திருக்கூத்தும் எங்கும் நிறைந்து காணப்பெறுகின்றது. எல்லாவுயிர்களும் உலகங் களும் எல்லா உலகியற் பொருள்களும் அவனைச் சார்ந்து நிற்கின்றன. சுருங்கக் கூறின், உலகமெலாம் சிவத்தின் திருக்கூத்தாகும். இதனால்தான் திருமூலரும் 'அம்பல மாவது அகில சராசரம்' என்றனர். இதனையே சிவஞான சித்தியாரும்,

> "உலகமே உருவ மாக
> யோனிகள் உறுப்ப தாக
> இலகுபேர் இச்சா ஞானக்
> கிரியையுட் கரண மாக
> அலகிலா உயிர்ப்பு லன்கட்(கு)
> அறிவினை ஆக்கி ஐந்து
> நலமிகு தொழில்க ளோடும்
> நாடகம் நடிப்பன் நாதன்".[5]

என்று விளக்கியுரைக்கின்றது. ஆருயிர்கள் எல்லாமும் பேரின்பம் எய்தும் பொருட்டே இறைவன் இந்த ஐந் தொழில்களைப் புரிந்தருள்கின்றனன்.

ஊழியின் முடிவில் இந்த அகிலம் முழுவதும் அணுத் தத்துவமாக மாறும் என்பதையும், மீண்டும் படைப்புக் காலத்தில் அஃது அண்டங்களாக வடிவெடுக்கும் என்பதை யும் மெய்யுணர்வு பெற்ற தாயுமான அடிகள்,

5. சிவஞான சித்தியார்-சுபக்கம் 237

"செகத்தையெல்லாம் அணுவளவும்
சிதறா வண்ணம்
சேர்த்து அணுவில் வைப்பை; அணுத்
திரளை யெல்லாம்
மகத்துவமாப் பிரமாண்ட
மாகச் செய்யும்
வல்லவா நீ நினைத்த
வாறே யெல்லாம்"[6]

என்று இரத்தினச் சுருக்கமாக விளக்குவர். இந்த உண்மையினையே இன்றைய அறிவியலறிஞர்கள் புலன் உணர்வைப் பன்மடங்கு பெருக்கும் கருவிகளைக் கொண்டு உணர்த்தினர். நாம் காணும் பொருள்கள் யாவும் அணுத்திரளேயன்றி வேறொன்றுமில்லை என்பதை விளங்க உணர்ந்தனர். இதனையே அம்பலத்தில் ஆடும் ஆனந்தக் கூத்து விளக்குகின்றது. அணுவிலும் இந்த ஆனந்தக் கூத்தையே நாம் காண்கின்றோம்.

பூதங்கள் ஐந்தாகிப்
புலனாகிப் பொருளாகிப்
பேதங்கள் அனைத்துமாய்ப்
பேதமிலாப் பெருமையனைக்
கேதங்கள் கெடுத்தாண்ட
கிளரொளியை மரகதத்தை
வேதங்கள் தொழுதேத்தும்
விளங்குதில்லை கண்டேனே.[7]

என்பது மணிவாசகப் பெருமான் கண்ட காட்சி யாகும்.

---

6. தாயுமானவர் பாடல்–தந்தை தாய்-6.
7. திருவாசகம்-கண்டபத்து-10.

# 4. கம்பன் கண்ட மெய்ப்பொருள்*

"எப்பொருள் எத்தன்மைத் தாயினும் அப்பொருள்
மெய்ப்பொருள் காண்பது அறிவு"[1]

என்றார் வள்ளுவப் பெருந்தகை. பொருளல்லவற்றைப் பொருள் என்று உணரும் திரிபுணர்ச்சியால் பெரும்பாலான மக்கள் உண்மைப் பொருளை உணர முடிவதில்லை. மெய்ப்பொருள் காணும் அறிவு எல்லோர் மாட்டும் அமைவதுமில்லை. எப்பொருள் எத்தன்மையதாயினும் அப் பொருளின் உண்மைநிலையைக் காணும் அறிவுத்திறன் கம்பன் போன்ற மேதையரிடம் மட்டிலுந்தான் அமைந்து கிடக்கும். பொருள் தோறும் உலகத்தார் கற்பித்துக் கொண்டு வழங்குகின்ற கற்பனைகளைக் கழித்து நின்ற உண்மையைக் காண்பது சிறந்த கவிஞனுக்கே இயலும். இதனைக் கம்பநாடனே,

"கவிக ளாகுவர்
காண்குவர் மெய்ப்பொருள்"[2]

என்று பிரகலாதன் வாய்மொழியாகக் கூறியிருத்தல் ஈண்டுக் கருதத் தக்கது. "எவரும் ஆழ்ந்த மெய்ப்பொருள் அறிவின்றி என்றுமே பெருங்கவிஞனாகத் திகழ்ந்ததில்லை"[3] என்பது கோலரிட்ஜ் என்ற ஆங்கில அறிஞரின் கருத்தும் இஃதுடன் வைத்து ஒப்புநோக்கத் தக்கது.

---

*இந்தியப் பல்கலைக் கழகத் தமிழ் ஆசிரியர் முதல் மாநாட்டில் (மதுரை 1969) படிக்கப்பெற்றது.

1. குறள்–355.
2. கம்பரா. யுத்த—இரணியன் வதை-32.
3. அடுத்த பக்கம் காண்க.

கம்பன் தான் காவியமாக அமைத்த இராமகாதையில் காணும் மெய்ப்பொருளை ஈண்டு ஆராய்வோம். கம்ப ராமாயணத்தை நுணுகிக் கற்பவர்கள் காவியத்திற்கு ஏற்புடைக் கடவுளாகிய திருமாலையே கம்பன் தனது வழிபடு கடவுளாகக் கொண்டவன் என்பதை நன்கு அறிவர். ஆகவே, அவனுள்ளத்திலே தேங்கிய வைணவ சமயக் கருத்துகள் ஆங்காங்கே வெளிப்படுவனவாயின. தமிழ்நாட்டில் தொன்றுதொட்டுக் கடவுள், உயிர், உடம்பு இவற்றைப் பற்றி வழங்கிய சீரிய கருத்துகளே ஆழ்வாரின் உள்ளங்களில் அமைந்து அவர்தம் பாசுரங்களில் வெளிப் பட்டன என்பதை நாம் அறிவோம். தமிழ் இலக்கண இலக்கியங்களில் புலமைமிக்கு ஆழ்வார் பாசுரங்களில் ஆழங்கால்பட்ட கம்பநாடனின் காவியத்திலும் இக் கருத்துகள் வெளிப்படுவனவாயின. இராமகாதையில் காண்டங்கள்தோறும் அவன் கூறும் காப்புச் செய்யுட் களாலும், காவிய மாந்தர்களின் கூற்றுகளைக் கொண்ட செய்யுட்களாலும், கவிஞனே சில சமயம் கூறும் தற்கூற்று களாலும் இம் மெய்ப் பொருள் கருத்துகள் வெளிப்படு வதைக் காணலாம்.

**வைணவ சமயத்தின் தத்துவம் :** வைணவ சமயத்தின் தத்துவம் மூன்று ஆகும். அவை சித்து, அசித்து, ஈசுவரன் (உயிர், உடம்பு கடவுள்) என்பன. சித்து என்பது, உயிர்களின் தொகுதி. அசித்து என்பது, மக்கள் விலங்கு முதலியவற்றின் உடம்பு முதலிய உலகப் பொருள்கள் எல்லாவற்றிற்கும் காரணமான பிரகிருதி என்பது.

3. 'No man was ever a great poet without being at the same time a profound philiospher'—Essay on "Words-Worth' by Coleridge. (Quoted by W.H Hudson in his "*An Introduction to the Study of Literature*" *p. 93*)

பிரகிருதியை மூலப் பகுதி என்பர். ஈசுவரன் என்பது, இறைவன். இவை மூன்றும் தனித்தனி இயல்புடைய வேறு வேறு பொருள்கள்; என்றும் அழிவில்லாதவை. ஆயினும், எக்காலத்தும் இவை மூன்றும் சேர்ந்தே காணப்பெறும். இவற்றுள் இறைவன் சித்து, அசித்து இவை இரண்டனுள்ளும் அந்தர்யாமியாக உள்ளான். இதுவே இவற்றின் நுண்ணிய (சூக்கும) நிலை. மூலப்பகுதி விரிவடைந்து மக்கள், விலங்கு முதலியவற்றின் உடம்பு களாகவும், மற்றுமுள்ள பொருள்களாகவும் ஆகின்றது.

உயிர், தன்னுடைய புண்ணிய பாவங்கட்கேற்ப ஒவ்வோருடம்பை அடைகின்றது. இதுவே உயிருக்குப் பிறப்பாகும். இறைவன், மூலப்பகுதியின் விகாரமாகிய எல்லாப் பொருள்களுள்ளும் எல்லா உயிர்களுள்ளும் அந்தர்யாமியாக மறைந்துள்ளான். இதுவே இவற்றின் பருநிலை (தூலநிலை). மூலப் பகுதியின் விகாரமாகிய உடம்பிற்கு வளர்தல், பருத்தல், குறைதல் முதலிய விகாரங்கள் உண்டு. இவ்வுடலினுள்ளிருக்கும் உயிருக்கு அத்தகைய விகாரம் ஒன்றும் இல்லை. ஆயினும், உயிர் தான் செய்த கன்மங்கட் கேற்ப உடம்பைப் பெற்றிருத் தலால், அவ்வுடம்பைப்பற்றிய இன்ப துன்ப உணர்ச்சிகள் அவ்வுயிருக்கு உண்டு. இவ்வுடம்பினுள்ளும் உயிரினுள்ளும் அந்தர்யாமியாக உள்ள இறைவன் உடம்பினுடைய விகாரங்களையும்,உயிரினுடையஇன்பதுன்ப உணர்ச்சிகளை யும் அடைவதில்லை.

இறைவன் வினைகாரணமாக அன்றி தன் விருப்பின் காரணமாக இவ் விரண்டனுள்ளும் அமைந்திருப்பவனா தலால், அவ்விரண்டின் தன்மைகளையும் அவன் அடைவ தில்லை. உயிர் மூலப்பகுதியின் விகாரமாகிய உடம்பைத் தனக்கு உடம்பாகக் கொண்டிருத்தல் போல், இறைவன்

உடம்பு, உயிர் ஆகிய இரண்டையும் தனக்கு உடம்பாகக் கொண்டுள்ளான். இவ்வாறு இம் மூன்று தத்துவங்களும் ஒன்றைவிட்டு ஒன்று பிரியாமல் எக் காலத்தும் தத்தம் இயல்பையும் விடாமல் ஒன்று சேர்ந்துள்ளன என்பது வைணவ சமயக் கொள்கையாகும்.

மேலும், வைணவ சமயக் கருத்துப்படி கடவுளுக்கு உருவம் உண்டு. அது திவ்வியமங்கள விக்கிரகம் எனப்படும். பர, வியூக, விபவ (அவதாரம்), அந்தர்யாமி, அர்ச்சை என்ற ஐந்து வகையாக அது இருக்கும். இராமகாதை அவதாரமாகிய மூன்றாவது நிலையினைக் கூறுவது· இறைவன் தன்னை அடைந்தவர்களைக் காப்பதற்காகவும், அவர்களது விரோதிகளைப் போக்குவதற்காகவும், வைதிக தர்மத்தை நிலைநிறுத்துவதற்காகவும் தன் இச்சையின் காரணமாக அவதரிக்கின்றான். இராமாவதாரம் அத்தகைய எண்ணற்ற அவதாரங்களுள் ஒன்று. இறைவனுக்கு எண்ணற்ற பெயர்கள் உண்டு. அவனது மங்கள குணங்களை அளவிட்டு உரைக்க முடியாது· இறையனே இவ்வுலகத்தைப் படைத்தற்கும், அளிப்பதற்கும், அழிப்பதற்கும் முதற் காரணமாவான். இச் செயல்களை அவன்விளையாட்டாகவே நிறைவேற்றுவான்.[4]

**நாராயணனே இராமன்:** பரமபத நாதனாகிய நாராயணனே இராமனாக அவதரித்தான் என்ற செய்தியைக் கம்பநாடன் காவியத்தில் பல இடங்களில் பெற வைக்கின்றான். இராமனது அவதாரத்தைக் கூறும் கவிஞன்,

"ஒருபகல் உலகெலாம் உதரத் துட்பொதிந்(து)
அருமறைக்கு உணர்வரும் அவனை அஞ்சனக்

---

4. இவை பற்றிய விவரங்களை 'தத்துவத் திரயம்' என்ற நூலில் காண்க. (ஈசுவர பிரகரணம் சூத்திரம் 42 to 59).

கருமுகில் கொழுந்துஎழில் காட்டும் சோதியைத்
திருவுறப் பயந்தனள் திறங்கொள் கோசலை"[5]

என்று கூறுவன். பிரளயகாலத்தில் எல்லாவுலகங்களையும் தன் திருவயிற்றில் மறைத்து வைப்பவன் நாராயணன்; உலகம் உண்ட பொருவாயன்;[6] பாலனாய் ஏழ் உலகு உண்டு பரிவு இன்றி ஆல்இலையில் அன்னவசம் செய்யும் அண்ணல் அவன்[7]. நான்மறைகளாலும் உணர முடியாத அவனை, அந்த அஞ்சனக் கருமுகிலை, கோசலை மகனாகப் பெற்றாள். இதனையே பிறிதோரிடத்தில்,

"எழுதரிய திருமேனிக்
கருங்கடலைச் செங்கனிவாய்க்
கவுசலையென் பாள்பயந்தாள்"[8]

என்று மேலும் வற்புறுத்துவன். இக்குழந்தைக்கு 'இராமன்' எனப் பெயரிடப் பெற்றது என்பதைக் கூறும் கவிஞன் இதனை வலியுறுத்துகின்றான்.

"கராம்மலை யத்தளர் கைக்கரி எய்த்தே
அராவணை யில்துயில் வோய்என அந்நாள்
விராவி அளித்தருள் மெய்ப்பொரு ளுக்கே
'இராமன்' எனப்பெயர் ஈந்தனன் அன்றே."[9]

[கராம்-முதலை; கைக்கரி-யானை; அராவணை-பாம்புப் படுக்கை].

முதலை வாயில் அகப்பட்ட களிறு 'ஆதிமூலமே' எனக் கூவ, அதனை முன்வந்து அளித்த திருமாலே இராமனாகப் பிறந்தான் என்பது ஈண்டு மீண்டும் வலியுறுத்தப் பெறுவதைக் காண்க. இதே கருத்து விராதன் வாய் மொழியாகவும்,

5. பால-திருவ 2·10:3 6.திருவாய் 6.10:1. 7.திருவாய் 4:2:1. 8.பால-குலமுறை-20. 9.பால-திருவ. 119.

"கடுத்துநிமிர் கராம்கவ்வக்
கையெடுத்து மெய்கலங்கி
உடுத்ததிசை அனைத்தினும்சென்(று)
ஒளிகொள்ள உறுதுயரால்
அடுத்தபெருந் தனிமூலத்து
அரும்பரமே பரமேஎன்று
எடுத்தொருவா ரணம் அழைப்ப
நீயோவந் தேன்என்றாய்"[10]

[கராம்-முதலை.]

என்று வந்துள்ளது. சனகன் மாளிகையில் இராமன் திருப்பள்ளி எழுதலைக் கூறவந்த கவிஞன்,

"கொல்லாழி நீத்தங்கோர் குனிவயிரச்
சிலைதடக்கைக் கொண்ட கொண்டல்"[11]

[ஆழி-சக்கரம்படை]

என்று கூறுவன். 'பாற்கடலில் துயிலும் பரந்தாமனே சக்கரப் படையை நீத்துவிட்டு கோதண்டத்தைத் திருக்கையில் கொண்ட முகில் வண்ணன்' என்று கூறுவதனால் இக்கருத்து மேலும் அரண் செய்யப்பெறுவதைக் காண்க. இன்னும்,

"பஞ்சணை பாம்பணை யாகப்பள்ளிசேர்
அஞ்சன வண்ணனே இராமன்"[12]

என்று சங்கரன் கொடுத்த வாளால் இராவணனால் சிறகொடிக்கப் பெற்ற சடாயு வாக்கில் வைத்துக் கூறப் பெற்றுள்ளதை எண்ணி உணர்க. திருமாலே இராமனாக அவதரித்துள்ளான் என்பதை,

---

10. ஆரணி. விராதன் வதை. 49
11. பால. மிதிலை. 154
12. ஆரணி. சடாயுவுயிர்நீத்த 142

"சங்கு சக்கரக் குறியுள
தடக்கையில் தாளில்
எங்கும் இத்தனை இலக்கணம்
யாவர்க்கும் இல்லை
செங்கண் வில்கரத்து இராமன்அத்
திருநெடு மாலே"[13]

என்று அநுமன் வாக்கிலும் வந்துள்ளமை காண்க.

இறைவன் பிறப்பில்லாதவன்; ஆனால் பல பிறப்புகளையுடையவன்.

"பிறப்பில் பல்பிறவிப் பெருமான்"[14]

என்பது ஆழ்வார் வாக்கு. பிறப்பில்லாதவன் என்றது ஏனையோரைப்போல் வினை காரணமாகப் பிறக்கும் தன்மையில்லாதவன் என்றவாறு. பல பிறவிகளையுடையவன் என்றது அடியார்கள் பொருட்டாகப் பல பிறப்புகளை (அவதாரங்களை) மேற்கொள்பவன் என்றபடி. இதுவே அவதார இரகசியம். கம்ப நாடன் இதனை நான்முகன் வாக்காக,

"தோற்றம் என்பதொன்று உனக்கில்லை"[15]

என்று கூறுவன். இராமனது பிறப்பினைக் கூறும் பகுதியில் இதனை விளக்கமாகக் காணலாம். பிறிதோர் இடத்தில் இராமனைக் குறிப்பிடுமிடத்து,

"மெய்யே பிறந்தேயும் பிறந்தி லாதான்"[16]

என்று இக் கருத்தினை மேலும் வற்புறுத்துவன்.

---

13. கிட்கிந். நட்புகொள். 79
14. திருவாய்.2.9:5
15. யுத்த. மீட்சி. 107
16. யுத்த. நாகபாசப். 222

**நாராயணனே முதற்கடவுள்:** நாராயணனே உலகின் முதற்கடவுள் என்பதைக் கம்ப நாடன் தன் காவியத்தில் பல இடங்களில் வற்புறுத்துகின்றான். சீதை தூயவள் என்று அங்கியங் கடவுள் மெய்ப்பித்த பிறகு தேவர்களின் வேண்டுகோட்கிணங்க நான்முகன் இராமனது உண்மைச் சொரூபத்தை விளக்குகின்றான்.

> "மறைகளின் தலைகள்
> மன்பெ ரும்பர மார்த்தமென்(று)
> உரைக்கின்ற மாற்றம்
> அன்ப நின்னையல் லால்மற்றிங்(கு)
> யாரையும் அறையா"[17]
>
> [மறைகளின் தலைகள்-உபநிடதங்கள்]

என்ற பாசுரப் பகுதியில் உபநிடதங்கள் குறிப்பிடும் 'பரம்பொருள்' திருமாலைக்குறிக்குமேயன்றித்தன்னையோ, சிவனையோ அல்லது இந்திரனையோ குறிக்கவில்லை என்று உணர்த்துவதை அறிக. அடுத்து, சிவபெருமான்,

> "முன்னை ஆதியாம் மூர்த்திநீ
> மூவகை உலகின்
> அன்னை சீதையாம் மாதுநின்
> மார்பின்வந் தமைந்தாள்"[18]

என்பதால் திருமாலே முதற்கடவுள் என்றும், சீதையே உலக அன்னையென்றும் உறுதி செய்வன். இப்பகுதியில் வரும் பாசுரங்கள் யாவும் இக்கருத்தையே பலபடியாக வலியுறுத்துகின்றன. நிகும்பலையைக் குலைத்தபின் இலக்குவனுக்கும் இந்திரசித்துக்கும் நடந்த போரில் பின்னவன் விட்ட நான்முகன் படையை அப்படையாலேயே

17. யுத்த. மீட்சி. 101
18. யுத்த. மீட்சி. 113

அழித்து அதன் வேகத்தைத் தணித்தனன். அப்போது அதனைக் கண்டு வியந்த தேவர்களிடம் சிவபெருமான் கூறிய,

"நாராயண நரர்என்றுஇவர்
உளராய் நமக்கெல்லாம்
வேராய்முழு முதற்காரணப்
பொருளாய்"[19]

என்ற வாக்கிலும் இதனைக் காணலாம். சேதுவை அமைக்க வருணனை வழி வேண்டியபொழுது, வருணன் வரத் தாமதித்ததனால், இராமன் சினங்கொள்ளுகின்றான். இதனைக் கவிஞன்,

"உற்றொடு தனியே தானே
தன்கணே உலகம் எல்லாம்
பெற்றவன் முனியப் புக்கான்"[20]

என்று குறிப்பிடும் இடத்தில் 'இராமனே பரம்பொருள்' என்று தற்கூற்றாகக் கூறுவதைக் காண்க. அடுத்து வருணன் வாயில் வைத்து,

"நவையறும் உலகிற் கெல்லாம்
நாயக நீயே"[21]

என்றும்,

"எள்ளலா காதமூலத்(து)
யாதுக்கும் முதலாய்உள்ள
வள்ளலே"[22]

என்றும் பின்னும் வற்புறுத்துவன். அங்கதனுக்கு அறவுரை கூறும் வாலியின் கூற்றாக வந்துள்ள,

19. யுத்த. நிகும்பலை-141
20. யுத்த. வருணனை வழி. 63
21. யுத்த வருணனை வழி-67
22. யுத்த வருணனை வழி-71

"மேலொரு பொருளும் இல்லா
மெய்ப்பொருள் வில்லும் தாங்கிக்
கால்தரை தோய நின்று
கட்புலக் குற்றதம்மா"[23]

என்ற பாடற் பகுதியும்,

"மும்மையாம் உலகம் தந்த
முதல்வற்கும் முதல்வன் தூதாய்ச்
செம்மையால் உயிர்தந் தாய்க்கு"[24]

என்று சீதை அநுமனைக் குறிப்பிடும் பாடற் பகுதியும் திருமாலே முழு முதற்கடவுள் என்பதனைப் பின்னும் அரண் செய்கின்றன. இதனையே.

"மூலமும் நடுவும் ஈறும்
இல்லதோர் மும்மைத் தாய
காலமும் கணக்கும் நீத்த
காரணன்"[25]

என்று அநுமன் வாய் மொழியாகவும்,

"மூவர்க்கும் தலைவ ரான
மூர்த்தியார் அறத்தை முற்றும்
காவற்குப் புகுந்து நின்றார்
காகுத்த வேடங் காட்டி"[26]

என்று கும்பகருணன் வாய்மொழியாகவும் கவிஞன் பேசுவன். ஞான ஒளி தட்டுப்பட்ட கவந்தனும்,

---

23. கிட்கிந்-வாலிவதை-148
24. சுந்தர-உருக்காட்டு-71
25. சுந்தர-பிணிவிட்டு 80
26. யுத்த-கும்பகருணன் வதை 150

"மூலமே இல்லா முதல்வனே நீஎடுத்த
கோலமே யார்க்கும் தெரிவரிய கொள்கைத்தால்
ஆலமோ? ஆலின் அடையோ? அடைக்கிடந்த
பாலனோ? ஆதிப் பரமனோ? பகராயே"[27]

என்று இராமன் மூதற்பொருள் என்று கூறுவதைக் காண்க. மேலும், விராதன் வாய்மொழியாக,

"மெய்யைத்தான் சிறிதுணர்ந்து
நீவிதித்த மன்னுயிர்கள்
உய்யத்தான் ஆகாதோ?
உனக்கென்ன குறையுண்டோ?
வையத்தார் வானத்தார்
மழுவாளிக்கு அன்றளித்த
ஐயத்தால் சிறிதுஐயம்
தவிர்ந்தாரும் உளர்ஐயா."[28]

[மெய்-நீயே பரத்துவம் என்னும் உண்மை; மழுவாளி-பரமசிவன்; ஐயம்-பிச்சை, சந்தேகம்.]

என்று பின்னும் கூறுவன். இக்கருத்து நம்மாழ்வாரின்

"பேசநின்ற சிவனுக்கும் பிரமன்
தனக்கும் பிறர்க்கும்
நாயகன் அவனே; கபாலநல்
மோக்கத்துக் கண்டுகொண்மின்"[29]

என்றப் பாசுரப் பகுதியின் கருத்துடன் இயைந்திருத்தல் கண்டு மகிழத்தக்கது. மேலும், கம்பநாடன் திருமால் அன்னமாய் இருந்து அருமறைகள் உரைத்ததைக் குறிப்பிடும் ஆழ்வார்களின் பாசுரங்களை நினைந்து,

27. ஆரணி-கவந்த-44.
28. ஆரணி-விராதன் வதை-59
29. திருவாய் 4.10:4

"அன்னமாய் அருமறைகள்
அறைந்தாய்நீ அவையுன்னை
முன்னம்ஆர் ஓதுவித்தார்
எல்லாரும் முடிந்தாரோ?"[31]

என்று விராதன் வாய்மொழியாகப் பேசுவன். இதில் நாராயணனே ஊழிக்குப் பிறகும் நிலை பெற்று நிற்பவன் என்ற கருத்து வற்புறுத்தப் பெற்றுள்ளமை காண்க. மேகநாதன் ஏவிய நான்முகன் கணையால் இலக்குவன் அறிவொடுங்கி அயர்ந்தபோது தம்பி இறந்தான் என்று புலம்புகின்றான் இராமன். பின் அறிவு சோர்ந்து துயலுகின் றான். அப்போது வந்த தேவர்கள், "முன்பு பின்பு நடு இல்லாய்!"[32] என்று விளித்துப் பேசுவதிலும் இதைக் காண லாம். நிகும்பலையைக் குலைக்கும்போது மேகநாதன் தன்னை இகழ்ந்து பேசிய போது, மறுமாற்றம் உரைக்கும் வீடணின் பேச்சில்,

"மூவகை உலகம் ஏத்தும்
முதல்வன்; எவர்க்கும் மூத்த
தேவர்தம் தேவன்"[33]

என்று குறிப்பிடும் பகுதியிலும் இக்கருத்து மிளிர்வதைக் காணலாம். கவிஞனே பிறிதோர் இடத்தில்,

"மூவ ராய்முத லாகி மூலம
தாகி ஞாலமும் ஆகியத்
தேவ தேவர் பிடித்த போர்வில்
ஒடிந்த சேவகர்"[34]
[தேவ தேவர்—சிவன்; சேவகர்—இராமன்]

---

30. பெரிய. திரு. 11.4:8
31. ஆரணி. விராதன் வதை-60
32. யுத்த. பிரமாத்திரப். 227
33. யுத்த நிகும்பலை யாகப். 175
34. அயோத். கைகேசி சூழ்வினை-62

என்று இக் கருத்தை மேலும் வற்புறுத்துவன். இராமன் கோலம் புனைதலைக் கூறும் இடத்தில் இராமனைக் கவிஞன்,

"முப்பரம் பொருளிற்குள் முதலை மூலத்தை"[35]

என்று குறிப்பிடுவன். முடிசூடப் போகும் இராமனின் திருமேனியைக் (திவ்வியமங்கள விக்கிரகத்தைக்) கண்டு ஊரார் வாய்மொழியாக,

"காலம்ஆ கணிக்கும் நுண்மைக்
கணக்கையும் கடந்து நின்ற
மூலமாய் முடிவி லாத
மூர்த்திஇம் முனிவன் என்பார்"[36]

என்றும் அவனது 'ஆதி அம் சோதி உருவைச்' சுட்டிக் காட்டுவன்.

**உலகத் தோற்றத்திற்கு முதற்காரணன்:** நாராயணனே உலகத்திற்கு முதற்காரணன்[37] என்ற வைணவ சமயக் கருத்தைக் கவிஞன் கவந்தன் வாய்மொழியாக,

'நிற்கு நெடுநீத்த நீரின் முளைத்தெழுந்த
மொக்குளே போலமுளைத்தெழுந்த அண்டங்கள்
ஒக்கவுயர்ந் துனுளே தோன்றி ஒளிக்கின்ற
பக்கம் அறிதற்கு எளிதோ பரம்பரனே.[38]

[நீர்-ஆவரண நீர்; மொக்குள்-நீர்க்குமிழிகள்; பக்கம்-தன்மை; பரம்பரன்- மிகச் சிறந்தவன்]

என்று கூறுவன். மெய்யறிவு தோன்றப்பெற்ற விராதன் புகழ் மொழியாக,

---

35. பால. கடிமணப்-69
36. அயோத். கைகேயி சூழ்வினை-91
37. தத்துவத்திரயம் ஈசுவரப் பிரகரணம்-12
38. ஆரணி. கவந். 48

"ஓயாத மலரயனே முதலாக உளராகி
மாயாத வானவர்க்கும் மற்றொழிந்த மன்னுயிர்க்கும்
நீயாகின் முதல்தாதை நெறிமுறையால்"[39]

என்று பின்னும் வற்புறுத்துவன். இக்கருத்துகள்,

"தான்ஓர் உருவே தனிவித்தாய்
தன்னின் மூவர் முதலாய
வானோர் பலரும் முனிவரும்
மற்றும் மற்றும் முற்றும்ஆய்"[40]

என்ற ஆழ்வார் பாசுரக் கருத்தினை அடிப்படையாகக் கொண்டு வந்திருப்பது கண்டு மகிழத் தக்கது.

இறைவன் இவ்வுலகத்தைப் படைக்கும்பொழுது யாதொரு விகாரமும் அடைவதில்லை.[41] இக்கருத்தைக் கம்பநாடன்,

"அண்டம் பலவும் அனைத்துயிரும்
அகத்தும் புறத்தும் உளவாக்கி
உண்டும் உமிழ்ந்தும் அளந்திடந்தும்
உள்ளும் புறத்தும் உளையாகிக்
கொண்டு சிலம்பி தன்வாயில்
கூர்நூல் இயைக் கூடுஇயற்றிப்
பண்டும் இன்றும் அமைக்கின்ற
படியை ஒருவாய் பரமேட்டி"[42]

என்று தேவர்களின் வாய்மொழியாகக் கூறுவன். "ஒரு சிலந்திக்கு உண்டான ஸ்வபாவம் ஸர்வ வியக்திக்குக்

39. ஆரணி. கவந்தன் வதை-53
40. திருவாய் 1.5:4
41. தத்துவத்திரயம் ஈசுவரப் பிரகரணம்-சூ.26
42. யுத்த. பிரமாத்திரப். 226

கூடாதொழியாதிறே'[43] என்ற தத்துவத்திரயக் கூற்றினையும் காண்க. இக்கருத்தினையே திவ்வியகவி பிள்ளைப் பெருமாள் அய்யங்காரும் அழகாகக் கவி அமைத்துக் காட்டுவர்.[44]

**சரீர-சரீரி பாவனை :** சித்தும் அசித்தும் ஈசுவரனின் உடலாக அமைந்துள்ளன என்பது வைணவ சமயக் கொள்கை[45] இஃது உடல் உயிர்த்தொடர்பு (சரீர-சரீரி பாவனை) என்று வழங்கப்பெறும். இக்கருத்து,

"வானின்று இழிந்து வரம்புஇகந்த
மாபூ தத்தின் வைப்புஎங்கும்
ஊனும் உயிரும் உணர்வும்போல்
உள்ளும் புறனும் உளன்என்ப"[46]

என்ற பாடற் பகுதியில் அமைந்திருப்பதைக் காண்க. இங்கு 'வான்' என்பது மூலப்பிரகிருதி (அசித்து). மூலப் பகுதியிலிருந்து தோன்றிய ஐந்து பூதங்களின் விகாரமே இந்த அகிலம்.

"வானும் நிலனும் முதலீறில்
வரம்பில் பூதம்"[47]

என்று பூதங்களின் வரம்பின்மையைப் பின்னும் விளக்குவன். இங்கு உணர்வு என்பது, தர்மபூத ஞானம். பிரகிருதியின் உள்ளே இருப்பதற்கு ஊனுக்குள் உயிர் இருப்பது உவமை; அங்ஙனமே அவன் அதன் வெளியில் இருப்பதற்கு உயிரில்

---

43. தத்துவத்திரயம். ஈசுவரபிரகரணம்-சூ29
44. திருவரங்கத்துமாலை-18
45. தத்துவத்ரயம்-சித்பிரகரணம்-சூ.41
46. அயோத். காப்பு
47. அயோத். நகர்நீங்கு-120

உணர்வு இருப்பது உவமை. மேற்கூறிய பாடலின் 'ஊனும் உயிரும் உணர்வும் போல் உள்ளும் புறனும் உளன் என்ப' என்னுமிடத்து,

''திடவிசும் பெரிவளி நீர்நிலம் இவைமிசைப்
படர்பொருள் முழுவது மாய்அவை அவைதொறும்
உடல்மிசை உயிரெனக் கரந்தெங்கும் பரந்துளன்''[48]

என்ற ஆழ்வார் பாசுரத்தின் கருத்தினை அடக்கிக் கொண்டிருப்பது கண்டு மகிழத் தக்கது. உயிர் உடம்பினுள் இருந்து அதனைத் தரிக்கச் செய்து அதற்குத் தலைவனாக நின்று அதனை நடத்துவது போலவே, இறைவனும் எல்லாப் பொருள்களுள்ளும் இருந்து அவற்றைத் தரிக்கச் செய்து அவற்றிற்குத் தலைவனாக நின்று அவற்றைந் தன் விருப்பம்போல் நடத்துகின்றனன் என்பது கருத்து.

அசித்து விகாரத்திற்கு இடமானது. ஐந்து பூதங்களின் விதாரமின்றி அகிலம் என்ற ஒன்று இல்லை.

''நிலம்தீ நீர்வளி விசும்போ டைந்தும்
கலந்த மயக்கம் உலகம்''[49]

என்பர் தொல்காப்பியனாரும். கம்பநாடன் இக் கருத்தையே,

''அலங்கலில் தோன்றும் பொய்ம்மை
அரவெனப் பூதம் ஐந்தும்
விலங்கிய விகாரப் பாட்டின்
வேறுபா டுற்ற வீக்கம்''[50]
[அலங்கல்-மாலை]

48. திருவாய். 1.1:7
49. தொல். பொருள். மரபு-89
50. சுந்தர. காப்பு.

எனக் கூறுவன். அவங்கலைக் கண்டு அரவு என மருளுதல் திரிபுணர்ச்சிக்கு எடுத்துக்காட்டு. ஐந்து பூதங்களும் தனித் தனியே இருக்கும் தன்மையை விட்டு ஒன்றாகச் சேர்வ தனாலும், அங்ஙனம் சேர்ந்த சேர்க்கை அறுவகையாக விகாரப்படுவதனாலும், தேவர், மனிதர், விலங்கு, தாவரம் என்னும் பாகுபாடு கொள்வதனாலுமான இந்த உலகத் தோற்றம் மக்களிடம் திரிபுணர்ச்சியை உண்டாக்குதல் கூடும். இந்தத் திரிபுணர்ச்சி உண்மைப் பரம்பொருளைக் கண்ட மாத்திரத்தில் ஒழிந்துவிடும் என்று கூறுவன் கவிஞன்.

பிறிதோரிடத்தில் இந்த உடல்-உயிர் உறவுபற்றிய கருத்து மிகத் தெளிவாக விளக்கப் பெற்றுள்ளது.

"மூன்றுரு எனக்குணம் மும்மை யாம்முதல்
தோன்றுரு எவையும்அம் முதலைச் சொல்லுதற்கு
ஏன்றுரு அமைந்தவும் இடையின் நின்றவும்
சான்றுரு உணர்வினுக்(கு) உவந்த தாயினான்"[51]

[முதல்-மூலப் பிரகிருதி; தோன்று உரு-மூலப்பகுதியில் தோன்றும் எல்லாத் தத்துவங்கள்; ஏன்றுரு-வடிவமைந்த அகிலம்; இடையில் நின்றவும்-சீவர்கள்; சான்ற உரு-சிறந்த சரீரம்].

என்ற பாடலில் இந்த விளக்கத்தைக் காணலாம். மூலப் பிரகிருதியும், அதில் தோன்றும் சேதநா சேதநங் களின் வடிவமான எல்லாப் பிரபஞ்சமும் இறைவனுக் குத் திருமேனியாகும் என்பது கருத்து. மூலப் பிரகிருதி யினின்றும் தோன்றும் தத்துவங்கள் 24 என்பதை,

51. கிட்கிந். காப்பு.

"பொங்கு ஐம்புலனும் பொறிஐந்தும்
கருமேந் திரியம் ஐம்பூதம்
இங்குஇவ் உயிர் ஏய் பிரகிருதி
மான்ஆங் காரம் மனங்களே."[52]

என்ற ஆழ்வார் பாசுரம் விளக்கும். சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றம் ஆகிய புலன் ஐந்தும்; மெய், வாய், கண், மூக்கு, செவி ஆகிய பொறி ஐந்தும்; வாக்கு, கால், கை, பாயு, உபத்தம் ஆகிய கருமேந்திரியம் ஐந்தும்; மண், நீர், எரி, கால், வான் என்னும் பூதங்கள் ஐந்தும்; இங்குள்ள இந்த ஆன்மாக்கள் பொருந்தியுள்ள மூலப்பிரகிருதி ஒன்றும்; மகத் தத்துவம் ஒன்றும்; அகங்கார தத்துவம் ஒன்றும்; மனம் ஒன்றும் ஆக 24. இவற்றுடன் ஆன்மா (புருடன்), இறைவன் (ஈசுவரன்) ஆகிய இரண்டும் சேர விசிட்டாத்வைத தத்துவங்கள் 26 ஆகின்றன.

படைப்புக் காலத்திற்கு முன்னர் சேதநா சேதநங்க ளெல்லாம் தன் திருமேனிக்குள் வியாபித்து நிற்கப் பரம் பொருள் ஒன்றே தனித்து நிற்கும். அந்தப் பரம்பொருள் 'பலவாக ஆகக்கடவேன்' என்று சங்கற்பங்கொண்டு இவ்வுலகத்தை யெல்லாம் தன் திருமேனியினின்றும் விரியச் செய்யும். இங்ஙனம் தேவர்கள், மனிதர்கள், விலங்குகள், தாவரங்கள் என்ற நால்வகைப் பிறவியாகத் தோன்றிய பொருள்தோறும் இறைவன் மறைந்து அந்தர்மியாகப் பரந்துள்ளான். இதனைக் கம்பநாடன் இந்திரன் வாய் மொழியாக,

"ஒன்றாகி மூலத்(து) உருவம் பலவாகி
உணர்வும் உயிரும் பிறிதாகி ஊழி

52. திருவாய். 10.7:10

சென்றா சறுங்காலத்(து) அந்நிலைய தாகித்
திறத்துலகம் தானாகிச் செஞ்செவே நின்ற
நன்றாய ஞானத் தனிக்கொழுந்தே''[53]

[ஆசறுதல்-முடிதல்]

என்று கூறுவன். இங்கு 'ஒன்றாகி.........ஞானக் கொழுந்தே' என்றது,

''கரந்தசில் இடந்தோறும்
இடந்திகழ் பொருள்தொறும்
கரந்துஎங்கும் பரந்துளன்,
இவைஉண்ட கரனே.''[54]

என்ற ஆழ்வார் பாசுரப் பகுதியை நினைவிற் கொண்டு என்க. மேலும் இந்திரன் வாய்மொழியாகவே இறைவனின் அந்தர்யாமித்துவத்தை,

''தோய்ந்தும் பொருளனைத்தும்
தோயாது நின்றசுடரே!''[55]

என்று வற்புறுத்துவன்.

முத்தொழில்களையுடையவன்: ஈசுவரன் படைத்தல், காத்தல், அழித்தல் என்ற முத்தொழில்களையும் தனது சங்கல்பத்தாலேயே வருத்தமின்றி நிறைவேற்றுவான்[56] இதனைக் கம்பநாடன்,

''உலகம் யாவையும் தாம்உள ஆக்கலும்
நிலைபெ றுத்தலும் நீக்கலும் நீங்கலா

---

53. ஆரணி. சரபங்கன் பிறப்புநீங்கு-30
54. திருவாய் 1.1:10
55. ஆரணிய. சரபங்கன் பிறப்பு-27
56. தத்துவத் திரயம்-ஈசுவரப் பிரகரணம்-சூத். 21-25.

அலகி லாவிளை யாட்டுடை யார்அவர்
தலைவர் அன்னவர்க் கேசரண் நாங்களே.''[57]

என்று கூறுவன். இங்கு 'உளவாக்கல்' என்பது சூக்கும வடிவினவாகவுள்ளவற்றைத் தூலவடிவினவாகச் செய்தல்; இல்லாததை உண்டாக்குவது அல்ல. இஃது 'உள்ளது போகாது, இல்லது வாராது' என்னும் சத்காரியவாதம்[58]; சூனிய வாதத்துக்கு மறுதலை. இத்தொழில்களைச் சிறார் மணல் வீடு கட்டி அழிக்குமாப் போலே கேவல விளையாட்டாகவே நிறைவேற்றுவான் இறைவன்[59] இதனையே பிறிதோர் இடத்தில் கம்பநாடன்,

''உலகம் யாவையும் படைத்து அளித்து
உண்டு உமிழொருவன்''[60]

என்றும், மற்றோர் இடத்தில்,

''காட்டுவாய் உலகம் காட்டிக்
காத்தவை கடையிற் செந்தீ
ஊட்டுவாய் உண்பாய் நீயே''[61]

என்றும் வற்புறுத்துவன்.

ஆயிரம் பெயருடையவன்: இறைவன் அநந்த கல்யாண குணங்களையுடையவன்; அவன் பெருமைகள் பேசிமுடியா.

---

57. கம்ப. தற்சிறப்புப்பாயிரம்-1.

58. முன்பில்லாதது இடையே தோன்றாது என்றும், காரியம்அழிந்த காலத்தும காரிய வடிவம் காரணத்தில். அழியாது சூக்குமமாய் நிலைத்திருக்கும் என்றும் வாதித்து நிலைநாட்டுவது.

59. தத்துவத்திரயம்-ஈசுவரப் பிரகரணம். சூத் 22, 24

60. பால். அகலிகைப்-7

61. யுத்த. வருணனை வழிவேண்-69

இவற்றை அடக்கிக் கொண்டு அவன் ஆயிரத்திற்கு மேற்பட்ட (எண்ணற்ற) பெயர்களைத் தாங்கி நிற்கின்றான். கம்பநாடன்,

"நினையும் தேவர்க்கும் நமக்கும்ஒத்
தொருநெறி நின்ற
அனகன் அங்கணன் ஆயிரம்
பெயருடை அமலன்"[62]

என்று இராமனைக் குறிப்பிடுவன். மண்ணுலகில் பிறந்து விசேட அறிவைப் பெறாத நம்மைப்போலவே, அறிவு ஆற்றல்களில் மிக்கவரென்று நம்மால் மதிக்கப்பெறும் தேவர்களாலும் அவன் பெருமையை அறிய வொண்ணாது என்பது கவிஞனின் குறிப்பு. ஆண்டவன் ஆயிரம் பெயருடைய அமலன் என்பதையே கருடன் வாய் மொழியாக,

"பேரா யிரங்கள் உடையாய்
பிறந்த பொருள்தோறும் நிற்றி"[63]

என்று பேசுவன். "நாமங்கள் ஆயிரம் உடைய நம் பெருமான்"[64] "பேரும் ஓர் ஆயிரம் பிறபல உடைய எம் பெருமான்"[65] "பேராயிரம் உடைய பேராளன்"[66] என்ற ஆழ்வார்களின் வாக்குகளை நினைவிற் கொண்டே இங்ஙனம் கவிஞன் பேசுவன்.

மந்திரங்களுள் சிறந்தது திருமந்திரம்; நாராயண நாமம். இராமநாமமும் இதுவேயாகும். இதன் பெருமை சொல்லுந்தரமன்று. இந்நாமம் அருகிலிருந்து தன்னைப்

62. அயோத். சித்திரகூட-1
63. யுத்த. நாகபாசம்-261
64. திருவாய். 5.9:11
65. திருவாய். 1.3:4
66. பெரி. திரு. 8.1:6

பக்தியுடன் சொன்னவர்களுடைய விருப்பங்களை நிறைவேறச் செய்யும். இதனைச் சொல்லவேண்டும் என்ற எண்ணமேயின்றித் தம் குழந்தைகட்கு இப் பெயரை இட்டு அழைக்கினும், பரிகாசமாகவோ இழிவாகவோ பொருளுணர்ச்சியின்றியோ சொல்லினும், இது கொடுக்கும் பலனிலிருந்து தவறாது. இத்தகைய மந்திரத்தின் பெருமையைக் கம்பநாடன்,

"மும்மைசால் உலகுக் கெல்லாம்
மூலமந் திரத்தை, முற்றும்
தம்மையே தமர்க்கு நல்கும்
தனிப்பெரும் பதத்தை; தானே
இம்மையே எழுமை நோய்க்கும்
மருந்தினை, 'இராமன்' என்னும்
செம்மைசேர் நாமந் தன்னை'[67]

என்று சிறப்பித்துப் பேசுவன். மூலமந்திரம் என்பது தலைமையான மந்திரம். உலகுக்கெல்லாம் மூலமந்திரம் இதுவேயாகும். இம்மந்திரத்தைச் செபிப்பார் பரமபதத்தையடைந்து அப்பெருமானுடைய சுயரூபம் முழுவதையும் திரிகரணங்களாலும் அநுபவித்துப் பெருமகிழ்வு அடைவர்.

"சரணம்ஆகும் தனதாள்
அடைந்தார்க்கு எல்லாம்;
மரணம்ஆனால் வைகுந்தம்
கொடுக்கும் பிரான்"[68]

என்று ஆழ்வார் பணித்தபடி எம்பெருமானுடைய அடியார்கட்கு இப்பிறப்பின் இறுதியிலேயே முக்தி கிடைத்த

67. கிட்கிந். வாலிவதை-71
68 திருவாய் 9.10:5

லால் அந்நாமம், 'இம்மையே எழுமை நோய்க்கும் மருந்து' எனக் குறிப்பிடப் பெற்றது. முக்தி பெற்றவர்க்கு வினைவயமான பிறப்பு இல்லை என்பது வைணவ சமயத்தின் கொள்கை.

**சரணாகதித்வம், கைங்கரியம் :** இராமகாதையைச் சரணாகதி தத்துவத்தை விளக்கவந்த காவியம் என்பர் மெய்ப்பொருளறிஞர்கள்; இதனைச் 'சரணாகதி வேதம்' என்றே கொள்வர்.[69] அபயம் அடைந்த சுக்ரீவனும் வீடணனும் எங்ஙனம் காக்கப் பெறுகின்றனர் என்பதைக் காவியம் பலவாறாக விளக்குகின்றது. இவர்கள் இருவரும் இராம கைங்கரியத்தில் மிகவும் ஈடுபட்டுப் பணியாற்றுவதையும் காணலாம். சரணாகதித்வம், கைங்கரியம் என்ற இரண்டுமே வைணவ சமயத்தின் முக்கியமான கொள்கைகளாகும்.

"'அகலகில்லேன் இறையும்' என்று
அலர்மேல் மங்கை உறைமார்பா!
*　　*　　*
புகல்ஒன்று இல்லா அடியேன்உன்
அடிக்கீழ் அமர்ந்து புகுந்தேனே"[70]

என்பதனால் சரணாகதித்வமும்,

"ஒழிவுஇல் காலம்எல்லாம்
உடனாய் மன்னி
வழுவிலா அடிமை
செய்யவேண் டும்நாம்
தெழிகுரல் அருவித்
திருவேங் கடத்து

69. Srinivasachari P. N.: *The Philosophy of Visistadvaita*-p. 395
70. திருவாய் 6, 10 : 10

எழில்கொள் சோதிஎந்தை
தந்தை தந்தைக்கே"[71]

என்பதால் கைங்கரியத்துவமும் விளக்கப்பெறுகின்றன. சரணாகதித்வம் இராமன் வாய்மொழியாகவே,

"வெற்றியே பெறுக தோற்க
வீகவீ யாது வாழ்க
பற்றுத லன்றி யுண்டோ
அடைக்கலம் பகர்கின் றானை"[72]

என்ற பாசுரப் பகுதியில் விளக்கம் பெறுகின்றது. இந்தக் கட்டத்தில் இராமனே பலவாறு இதற்கு விளக்கம் தருகின்றான்.[73] இறைவனுக்கு அடிமை செய்யவேண்டும் என்ற எண்ணமும், அங்ஙனம் மேற்கொள்ளும் செயலும் சுக்கிரீவன், வீடணன், அநுமன், சடாயு முதலிய பலரிடத்தும் காணப்பெறுகின்றன. "அடியாரின் ஏவல் செய்தி"[74] என்ற அன்னையின் வாக்கின்படி ஏவல் கேட்டு நிற்கும் இலக்குவன் கைங்கரிய வடிவமாகின்றதைக் காவியம் எங்கும் காணலாம்.

இறுவாய்: ஒரு நூல் சிறப்புற்று விளங்குவதும் அந்நூலை யாத்த கவிஞன் பெரும்புகழுடன் திகழ்வதும் அந்நூல் யாத்தற்கு அவன் தேர்ந்தெடுக்கும் பொருளைப் பொறுத்துள்ளன. கம்பன் தேர்ந்தெடுத்த கதைப் பொருளோ மிகச்சிறந்தது. அது திருமாலின் அவதாரமான "காசில் கொற்றத்து இராமன் கதை"[75] ஆகும்.

---

71. திருவாய்-3.3:1
72. யுத்த. வீடணனடைக்-108
73. ,, ,, 109 to 120
74. அயோத். நகர்நீங்கு-152
75. கம்ப. தற்சிறப்புப் பாயிரம்-4

இயல்பாகவே இராமனைப் புகழ்தற்குரிய இடங்கள் பல. அவ்விடங்களில் எல்லாம் திருமாலைப் பரம்பொருளாகக் கொள்ளும்படி பலமுறை கூறியுள்ளான் கவிஞன். எனவே, கம்பனுக்கு உயிருக்கு உயிராகவும் உணர்வுக்கு உணர்வாகவும் ஒப்புயர்வற்றதாகவும் கொண்ட கடவுள் பரமபத நாதனே என்பது பெறப்படும். மரணமானால் வைகுந்தம் கொடுக்கும் பிரானாகிய அவனே அவன் கண்ட மெய்ப் பொருள்; பிறவிக்கு முதற்காரணமாகவுள்ள அறியாமை (அவிச்சை) நீங்குதற்கும் வீடுபேற்றினைப் பெறுவதற்கும் முக்கியக் காரணமாயும், தூயதாயும், என்றும் ஒரே தன்மையதாயுமுள்ள அதுவே (அவனே) அவன் கண்ட செம்பொருள்; ஈசுவரன்.

"பிறப்பென்னும் பேதைமை நீங்கச் சிறப்பென்னும்
செம்பொருள் காண்பது அறிவு."[76]

76. குறள்-358

## 5. திருப்பல்லாண்டு*

சைவ வைணவ சமய வளர்ப்புப் பண்ணைகளாகத் திகழச் செய்து வளர்த்த பெருமை முறையே தில்லைக்கு அருகிலுள்ள திருநாரையூரையும் காட்டுமன்னார் கோயிலையும் நினைக்கச் செய்கின்றன. திருநாரையூரில் பொல்லாப் பிள்ளையாருக்குப் பூசனை புரிந்து வந்த ஆதி சைவ குடும்பத்தில் தோன்றிய நம்பியாண்டார் நம்பி என்ற சைவப் பெரியார் தேவாரப் பாவின் கருத்திலும் பண்ணிசையிலும் மனத்தைப் பறிகொடுத்த சோழப் பேரரசன் இராசராசனின் வேண்டுகோட்கிணங்கி மூவர் பாடியருளிய தேவாரப் பாக்களைத் தேடி எடுத்து அவற்றை ஏழு திருமுறைகளாக வகுத்ததும், பின்னர் வந்த சிவநெறிச் செல்வர்கள் திருவாசகத்தையும் திருக்கோவையாரையும் எட்டாம் திருமுறையாகவும், திருமாளிகைத் தேவர் முதலாக ஒன்பது சைவப் பெரியார்கள் பாடிய திருவிசைப்பாப் பதிகங்களை ஒன்பதாந் திருமுறையாகவும், திருமூலர் திருமந்திரத்தைப் பத்தாம் திருமுறையாகவும், நம்பியாண்டார் நம்பியுட்படப் பன்னிரண்டு பெரியோர்கள் பாடியருளிய நூல்களைத் தொகுத்துப் பதினோராந் திருமுறையாகவும், சேக்கிழார் பெருமானால் பாடப்பெற்ற திருத்தொண்டர் புராணமாகிய பெரிய புராணத்தைப் பன்னிரண்டாந் திருமுறையாகவும் வகுத்தனர் என்பது சைவப் பெருமக்கள் நன்கு அறிந்த செய்தி. அங்ஙனமே, குடமூக்குத் திருப்பதி எம்பெருமான்மீது "ஆராவமுதே" எனத் தொடங்கும் நம்மாழ்வாரின் திருவாய் மொழியில்

* சிதம்பரம் திரு. R. கனகசபை பிள்ளை மணி விழா மலரில் (1973) வெளி வந்தது.

உள்ளத்தைப் பறிகொடுத்தவரும் காட்டு மன்னார் திருமால் கோயில் எம்பெருமானுக்குக் கைங்கரியம் புரிந்துவந்தவருமான நாதமுனிகள் என்ற திருமாலடி யாரின் முயற்சியால் 'நாலாயிரத் திவ்வியப் பிரபந்தம்' என்னும் தமிழ்மறை தொகுக்கப்பெற்றது என்பதும் வைணவப் பெருமக்கள் நன்கு அறிந்ததாகும். இந்தப் பெரியார்கள் இருவரும் தொகுத்த தொகுப்பில்தான் 'திருப்பல்லாண்டு' என்ற தலைப்பில் இரண்டு பதிகங்கள் காணப்பெறுகின்றன. இரண்டு பதிகங்களும் அவ்வச் சமயக் கடவுளருக்கு வாழ்த்துக் கூறுவதாக அமைந் துள்ளன.

'நெடுங்காலம் வாழ்க' என வாழ்த்துதற் பொருளி லமைந்த இசைப்பாட்டு 'பல்லாண்டிசை' என வழங் கப்பெறும்.

"பாடுவார்பணி வார்பல்லாண் டிசை கூறுபத்தர்கள்
சித்தத் துள்புக்குத்
தேடிக் கண்டுகொண்டேன்
திருவாரூர் அம்மானே"[2]

என்று நாவுக்கரசர் பெருமானின் தேவாரப் பாவால் அவர் காலத்துப் பல்லாண்டிசை பாடும் வழக்கமுண் டென்பதனை ஒருவாறு அறியலாம். எங்குமாய் எல்லா மாய் எப்பொழுதுமாய் இருக்கும் இறைவனைச் சில்வாழ் பல்பிணிச் சிற்றுயிர்களாகிய நாம் வாழ்த்து வது நம்முடைய வாழ்க்கை இன்பத்தை மிகுவிப்பதற் காகவே யாகும் என்பது வெளிப்படை. "வாழ்த்துவ தும் வானவர்கள் தாம்வாழ்வான்"[3] என்ற மணிவாசகப் பெருமானின் திருவுளப் பாங்காலும் இதனை அறியலாம்.

2. அப்பர் தேவாரம் (தலமுறை): 4.20:10
3. திருவாச. திருச்சத—16

எல்லாச் சமயத்தினரும் இறைவனை இங்ஙனம் வாழ்த்துதல் பக்தி நிலையில் எழும் செயலாகும். பல்லாண்டு கூறும் பக்தர்கள் மனத்தில் எப்பொழுதும் இறைவன் நீங்காது எழுந்தருளியிருப்பான் என்பது எல்லாச் சமயத்தவர்களின் நம்பிக்கையுமாகும். "இமைப்பொழுதும் என்நெஞ்சில் நீங்காதான் தாள்வாழ்க"[4] என்று ஆளுடைய அடிகளின் அருளிச்செயலும் இதனை வற்புறுத்துவது காண்க. இனி மேற்குறிப்பிட்ட ஒரே யாப்பில் அமைந்த இரண்டு 'திருப்பல்லாண்டுகளையும்' நோக்குவோம்.

ஒன்பதாம் திருமுறையின் இறுதிப் பதிகமாக அமைந்திருப்பது சேந்தனார் அருளிய 'திருப்பல்லாண்டு' ஆகும். இது பதின்மூன்று திருப்பாடல்களைக் கொண்டது. தில்லை மூதூரில் திருக்கோயில் கொண்டு ஆநந்தத் தாண்டவம் புரியும் நடராசப் பெருமான் தம் அடியாராகிய சேந்தனாரின் அன்பின் திறத்தை உலகிற்குக் காட்ட வேண்டுமென்ற அருள்நோக்கத்துடன் மார்கழித் திருவா திரைத் திருவிழாவில் தாம் திருத்தேர் கொண்டருளும் போது மழைபெய்யுமாறு செய்து தம்முடைய தேரைச் சேற்றிலழுந்துமாறு திருவருள் பாலித்தார். அப்பொழுது 'சேந்தா, தேர் நடக்கப் பல்லாண்டு பாடுக' என்றதொரு ஒலி எல்லோரும் கேட்கும்படி விண்ணில் ஒலித்தது. தேரிழுக் கும் அடியார் குழுவில் ஒருவராய் நின்ற சேந்தனார் "மன்னுக தில்லை! வளர்க நம் பக்தர்கள்!" என்று தொடங்கும் 'திருப்பல்லாண்டு' திருப்பதிகத்தைப் பாடிப் போற்றினார். திருத்தேரும் வடம் பிடிக்காமல் தானே அசைந்து ஓடி நிலையினை அடைந்தது. இவ்வற்புதத்தை கண்டார் அனைவரும் சேந்தனாரது பேரன்பின் திறத்தைப் பெரிதும் எண்ணி நெஞ்சம் நெக்குருகி நின்றனர். இதுவே இப்பதிகம் தோன்றிய வரலாறு.

---

4. திருவாச. சிவபுரா—அடி 2

நாலாயிரத் திவ்வியப் பிரபந்தத்தில் முதலாயிரத்தில் முதற்பதிகமாக அமைந்திருப்பது பெரியாழ்வார் அருளிய 'திருப்பல்லாண்டு'. இது பன்னிரண்டு திருப்பாசுரங்களைக் கொண்ட ஒரு சிறு பிரபந்தமாகும். இதுவும் ஓர் அற்புத நிகழ்ச்சியை அடிப்படையாகக் கொண்டு எழுந்ததாக வரலாறு. அந்த வரலாறு இது: சீவல்லப்பதேவன் என்னும் பாண்டியன் புலவர்களைத் திரட்டிப் பரதத்துவத்தை அறுதியிட நினைத்தான். அங்ஙனம் அப் பரம்பொருள் இன்னதென உறுதியுடன் அறுதியிட்டுக் கூறுபவர்க்கு ஒரு பொற்கிழியைச் சன்மானமாக அளிப்பதாகப் பறையறைவித்து அக்கிழியை அவையின் நடுவில் தொங்கவிட்டான். நாட்டின் நாற்புறங்களினின்றும் புலமை மிக்கோர் வந்து திரண்டனர். சீவில்லிபுத்தூர் எம்பெருமான் விஷ்ணு சித்தர் என்ற பெரியாழ்வார் கனவில் தோன்றி மதுரை சென்று பாண்டியனது அரசவைக்கு ஏகிப் பரமபதநாதனாகிய நாராயணனே பரம்பொருள் என நிலைநிறுத்திப் பொற்கிழியை அறுத்து வருமாறு பணித்தார். அங்ஙனமே கமலைக்கேள்வனின் கருணையைக் கனக்க நம்பியிருந்த பெரியாழ்வாரும் புலவர்கள் நடுவில் நான்மறைகள் இதிகாச புராணங்களிலிருந்து பல சான்றுகளை எடுத்துக் காட்டிச் சிமந் நாராயணனே பரம்பொருள் என்றும் அவனைச் சரணமடைவதே சிறந்த உபாயம் என்றும் நிலைநிறுத்தினார். அரசவையில் தொங்கிய பொற்கிழியும் தானாகவே ஆழ்வார் முன்னிலையில் தாழ இழிய, அதுவும் எம்பெருமானின் கருணை என உவந்து ஆழ்வார் அதனை அறுத்துக் கொண்டருளினார்.

இந்த நிகழ்ச்சியை ஒரு பெரு விழாவாகக் கொண்டாட வேண்டுமென்று திருவுளங்கொண்ட அரசன் ஆழ்வாருக்குப் 'பட்டர் பிரான்' என்ற திருநாமம் வழங்கி அவரைப் பட்டத்து யானையின் மீதேற்றி நகர மெங்கும்

உலா வரச் செய்தான். மகனுடைய திருவிழாவை மகிழ்ச்சியுடன் காணவரும் தாய் தந்தையர் போல் பரமபதநாதனும் பெரிய பிராட்டியுடன் பெரிய திருவடியின் மீது இவர்ந்த வண்ணம் விண்ணில் தோன்றி ஆழ்வாருக்குக் காட்சி தந்தருளினான். ஆழ்வாரும் சிறிதும் செருக்குக் கொள்ளாமல் எம்பெருமானின் அநந்த கல்யாண குணங்களுள் அழகு மென்மை முதலிய திருக்குணங்களில் தம் மனத்தைப் பறிகொடுத்துப் பக்திப் பரவசராய்த் தம் நிலைமையையும் எம்பெருமானுடைய நிலைமையையும் மறந்து "காலம் நடையாடாத பரமபதத்தில் நிலை பெற்றிருக்கும் இப்பரம புருடன் காலம் நடையாடுகின்ற இந்த உலகில் வந்து நிற்கின்றானே, பாவிகளின் கண்ணெச்சில் பட்டு இவனுக்கு என்ன தீங்கு வருமோ?" என்று அஞ்சினார். அந்தத் திவ்விய மங்களத் திருமேனிக்கு எவ்விதமான தீங்கும் நேரிடாதிருக்கவேண்டும் என்று மங்களா சாசனம் செய்கின்றவராய் யானைமணிகளையே கைத்தாளமாகக் கொண்டு 'திருப்பல்லாண்டு' என்ற திருப் பதிகத்தைப் பாடியருளினார்.

இங்ஙனம் சைவ வைணவர்கள் தத்தம் பரம்பொருளாகக் கருதும் இறைவனுடைய கருணையின் அடிப்படையாகத் தோன்றிய இவ்விரண்டு பதிகங்களின் சில ஒற்றுமைகளை ஈண்டுக் காண்போம். வாழ்க்கையின் திறனாய்வே இலக்கியம் என்றும், வாழ்வினின்றே இலக்கியம் மலர்கின்றது என்றும் திறனாய்வாளர்கள் கூறுவதை நாம் அறிவோம். பிற்காலத் தமிழர்களின் வாழ்வில் சமயம் உயிர்நாடியாக அமைந்திருந்தது என்று நாம் அறியக்கிடப்பதால் அவர்களிடையே தோன்றிய இலக்கியங்களிலும் சமயக் கருத்துகள் பிரதிபலிப்பதைக் காணலாம். ஆகவே, வைதிக சமயங்களாகிய சைவம், வைணவம் இவற்றின் அடிப்படையில் எழுந்த இந்த இரண்டு 'திருப்பல்லாண்டு

களிலும்' சில பொதுமையான கருத்துகள் மிளிர்வதில் வியப் பொன்றும் இல்லை.

சேந்தனார், பொன்னம்பலத்து ஆடல்வல்லானின் பேரருளால் சேற்றில் அழுந்தியிருக்கும் தேர் திருக் கோயிலை வலம் வந்து நிலையினை அடைய வேண்டும் என்று கோருகின்றார். இவரது பதிகம் பலனை எதிர் நோக்கிப் பாடியருளிய பாடல்களடங்கியது. எம்பெரு மான் திருவருளால் தான் பரதத்துவத்தை நிலைநாட்டிய தும், தன்னையும் ஒரு பொருளாகக் கருதித் தனக்குப் பெரிய பிராட்டியருடன் சேவை பாலித்ததுமான பலனை எய்திய பிறகு விஷ்ணு சித்தர் பாடியருளியது அவரது திருப்பதிகம். முன்னதில் எம்பெருமானின் திருவருள் விண்ணுலக அசரீரியாக வடிவு கொண்டது. பின்னதில் எம்பெருமானின் திருவருள் அவருடைய திவ்யமங்களத் திருமேனியுடன் காட்சி அளித்தது. எங்கும் நீக்கமற நிறைந்திருக்கும் இறைவன் அடியார்க் கெளியன் என்பது இரு சமயத்தார்க்கும் பொதுவான கருத்து.

"அன்னநடை மடவாள் உமைகோன்
அடியோ முக்கருள் புரிந்து
பின்னைப்பிறவி யறுக்க நெறிதந்த
பித்தற்குப் பல்லாண்டு கூறுதுமே"[5]

என்று பாடி மகிழ்வர் சேந்தனார். அங்ஙனமே விஷ்ணு சித்தரும்,

"அடியோ மோடும் நின்னோடும்
பிரிவின்றி ஆயிரம் பல்லாண்டு"[6]

என்று பாடிக் களிப்பர். இரண்டிலும் 'அடியோமுக்கு என்ற சொல் தம்மையும் தம்முடனிருக்கும் அடியார்களை யும் குறித்து நிற்கின்றது.

5. சேந்தனார்-1
6. விஷ்ணு சித்தர்-1

அப்பனை நினைந்து போற்றும் இரண்டு அடியார்களும் அன்னையையும் சேர்த்தே நினைவு கொள்ளுகின்றனர். 'தடித்தவோர் மகனைத் தந்தையீண்டடித்தால் தாய் உடன் அணைப்பள் தாய் அடித்தால் தந்தை யணைப்பன்' என்ற உலகநெறி இரண்டிலும் நிழலிடுகின்றது. 'அன்ன நடை மடவாள் உமைகோன்' என்ற சொற்றொடரில் சேந்தனார் அன்னையை நினைந்து போற்றுதல் காண்க.

"வடிவாய் நின்வல மார்பினில்
வாழ்கின்ற மங்கையும் பல்லாண்டு"[7]

என்று பட்டர் பிரானும் புருஷகார பூதையான[8] பெரிய பிராட்டியாரையும் மறவாது போற்றுதலைக் காணலாம்

இரு சமயத்தினரும் தத்தம் முழுமுதற் கடவுளரைப் பிறப்பு, இறப்பு அற்ற பெருமான் என்று போற்றினும், ஊர்திரை நீர் வேலி உலகத்திலுள்ள சைவர்கள் மன்னிய நாள்மீன் மதி கனலி என்றிவற்றை முன்னம் படைத்த முதல்வனாகிய சிவபெருமானை 'ஆதிரையான், ஆதிரையான்' என்று கூறி மயங்குவர். அங்ஙனமே, கர்மம் அடியாகப் பிறப்பு அற்றவனும் தன்விருப்பங் காரணமாகப் பல்பிறவிப் பெருமானாகிய நாராயணனைத் 'திருவோணத்தான்' என்று வழங்குவர் வைணவப் பெருமக்கள். முன்னவர் சிவபெருமான் பிறந்த ஆதிரை நட்சத்திரத்தைப் போற்றும் முறையில்திருவாதிரைத்திருநாளாகவும், பின்னவர் திருமால் பிறந்த திருவோண நட்சத்திரத்தைப் போற்றும் முறையில் திருவோணத் திருவிழாவாகவும் கொண்டாடுகின்றனர். வழிவழியாக வரும் இந்த மரபினை நினைந்தே சேந்தனார் 'அணியுடை ஆதிரை நாள்'[9] என்று மார்கழித் திருவாதிரைத் திருநாளைக் குறிப்பிடுவர். பெரியாழ்

7. விஷ்ணு சித்தர்-1
8. புருஷகாரபூதை—பரிந்துரை கூறுபவள்.
9. சேந்தனார்-12

வாரும் 'திருவோணத் திருவிழா'[10] என்று நினைவுடன் போற்றியுரைப்பர்.

இரண்டு சமயத்தினரும் தத்தம் கடவுளரின் வீரச்செயல் களையும் வெற்றிச் செயல்களையும் பிறவற்றையும் புகழ்ந்த வண்ணம் இறையநுபவம் பெறுவர். சிவபெருமான் சன காதி முனிவருக்குக் கல்லாலின் கீழிருந்து அறமுறைத்த நிகழ்ச்சியை 'ஆழ்நிழற் பட்டன்'[11] என்றும், மேரு மலையை வில்லாகக் கொண்டு திரிபுரம் எரித்த வரலாற்றைக் குறிப் பிடும் முறையில் 'வில்லாண்ட கனகத்திரள் மேருவிடங் கன்'[12] என்றும், வியாக்கிரக பாத முனிவரின் குழந்தையான உபமன்யுவிற்குப் பாற்கடலை ஈந்தது, திருமாலுக்குச் சக்கரம் ஈந்தது ஆகிய வரலாறுகளைக் குறிப்பிடும் முறையில்,

"பாலுக்குப் பாலகன் வேண்டி
அழுதிடப் பாற்கடல் ஈந்தபிரான்
மாலுக்குச் சக்கரம் அன்(று)அருள்
செய்தவன்"[12]

என்றும், மணலால் ஆன சிவலிங்கத்திற்கு ஆவின் பாலால் திருமஞ்சனம் ஆட்டிய செயலைக் குலைத்த எச்சதத்தன் என்ற தன் தந்தையின் கால்களை வெட்டிய விசார சருமர் என்பவருக்கு அவரது பக்தியைப் பாராட்டித் தொண்டர் கட்கெல்லாம் அதிபதியுமாக்கிச் சண்டீசப் பதமும் அளித்த வரலாற்றைப் புலப்படுத்தும் முறையில்,

"தாதையைத் தாளற வீசிய
சண்டிக்கிவ் அண்டத்தொடு முடனே
பூதலத் தோடும் வணங்கப்பொற்
கோயிலும் போனகமும் அருளிச்

10. பெரியாழ்வார்-8
11. சேந்தனார்-3
12. சேந்தனார்-4
13. சேந்தனார்-9

சோதி மணிமுடித் தாமமும்
நாமமும் தொண்டர்க்கு நாயகமும்
பாதகத் துக்குப் பரிசுவைத்
தானுக்கு''[14]

[தாள்-கால்; அற-அற்றுவிழும்படி; அண்டம்- உலகம்; பொன்கோயில்-அழகிய கோயில்; போனகம்-திருவமுது; தாமம்-மாலை; நாமம்-சண்டேசுரர் என்ற திருப்பெயர்; நாயகம்-முதன்மை; பாதம்-பெரும் பாவச் செயல்; பரிசு-வெகுமதி.]

என்றும் சேந்தனார் புகழ்ந்துரைப்பதைக் காணலாம். அங்ஙனமே, இலங்கை பாழாகப் பொருத திருமாலின் வெற்றிச் செயலை நினைந்து ''இராக்கதர் வாழ் இலங்கை பாழாகப் பொருதான்''[15] என்றும், பொதுவாக அரக்கர்களை அழித்த செயலை நினைந்து ''அசுரர் இராக்கதரை இண்டக்குலத்தை எடுத்துக் களைந்த இருடீகேசன்''[16] என்றும், நரசிம்ம மூர்த்தியாகத் தோன்றி. இரணியனை அழித்து அவன் சிறுக்கன் பிரகலாதனுக்கு அருளிய செயலைக் குறிப்பிடும் முறையில்,

''அந்தி யம்போதில் அரியுரு
வாகி அரியை அழித்தவன்''[17]

[அந்தியம்போது-பகலவன் மறையும் நேரம்; அரி-சிங்கம்; அரியை-பகைவனை]

என்றும், வாணாசுரனின் ஆயிரம் தோள்களையும் அறுத்துத் தள்ளிய செயலைப் பாராட்டும் முறையில்,

---

14. சேந்தனார்-10
15. பெரியாழ்வார்-3
16. பெரியாழ்வார்-5 இண்டக்குலம் - நெருக்கமான கூட்டம்; இருடீகேசன்-இந்திரியங்களை அடக்கினவன்-
17. பெரியாழ்வார்-6

"மாயப் பொருபடை வாணனை
ஆயிரம் தோளும் பொழிகுருதி
பாயச் சுற்றிய ஆழிவல்லான்"[18]

[குருதி-இரத்தம்; பாய-வெள்ளமாகப் பாய; ஆழி. சக்கரம்]

என்றும், கம்சனுடைய ஆயுதசாலையுள் புகுந்து வில்லை வளைத்து முறித்த செயலையும், ஐந்து தலைகளுடைய காளியன் என்னும் நாகத்தின் தலையின்மீது குனித்து அதன் செருக்கையும் வலியையும் அடக்கிய செயலையும் அநுசந்திக்கும் முறையில்,

......"திருமதுரை
யுட்சிலை குனித்து ஐந்தலைய
பைந்நா கத்தலை பாய்ந்தவன்"[19]

[சிலை-வில்; குனித்து-வளைத்து; பைந்நாகம்-படத்தை யுடைய பாம்பு]

என்றும் பெரியாழ்வார் போற்றிப் புகழ்ந்து மகிழ்ந்து உரைப்பதைக் காணலாம்.

இரு சமயத்தினரும் இவ்வுலகிலும் அவரவர் வீட்டு லகிலும் இறைவர்கட்கு அடிமை செய்வதையே குறிக் கோளாகக் கொண்டிருப்பவர்கள். இரு சமயத்தைச் சேர்ந்த அடியார்களும் தம்மை ஏழு தலைமுறையாகவும் இருபத்தொரு தலைமுறையாகவும் வழிவழி அடிமை செய்து வருவதாகக் கருதும் மரபு ஒன்று உண்டு. இருவர் பாடல்களிலும் இம்மரபினைக் காணலாம். இதனை,

"மழுவிடை யாற்கு வழிவழி
யாளாய் மணஞ்செய் குடிப்பிறந்த
பழஅடி யாரொடுங் கூடி
எம்மானுக்கே பல்லாண்டு கூறுதுமே"[20]

18. பெரியாழ்வார்-7
19. பெரியாழ்வார்-10

[மழவிடை-இளமை வாய்ந்த இடபம்; மணம் செய்தல்-அடிமை செய்தல்; பழ அடியார்-அநுபவம் முதிர்ந்த அடியார்]

"எந்தை எந்தாய் சுற்று(ம்)முற்றும்
எமக்கமுதாம் எம்பிரான் என்றென்று
சிந்தை செய்யுஞ் சிவன்சீர்
அடியார்"[21]

என்று சேந்தனாரும், 'ஏழாட்காலும் பழிப்பில்லோம்'[22] என்றும்,

"எந்தை தந்தை தந்தை தந்தைதம்
மூத்தப்பன் ஏழ்படிகால் தொடங்கி
வந்து வழிவழி யாட்செய்கின்றோம்."[23]

[மூத்தப்பன்-பாட்டன்; ஏழ்படி-ஏழு தலைமுறை; வழிவழி-முறை தவறாமல்; ஆள் செய்தல்-கைங்கரியம் புரிதல்.]

என்று பட்டர்பிரானும் கூறுவதைக் காணலாம்.

இரண்டு சமயத்தைச் சேர்ந்த அடியார்களின் தோற்றம் இப் பாடல்களில் காணக்கிடக்கின்றது. சிவனடியார் வெண்ணீறு அணிந்த திருமார்பினையுடையவர்கள் என்பதை,

"பொடியணி மார்பிலங்கும்
புண்ணியர்"[24]

[பொடி-வெண்ணீறு]

என்று சேந்தனார் குறிப்பிடுவர். வைணவ அடியார்கள் மந்திர விதிப்படி ஹோமஞ் செய்த தீயில் காய்ச்சப்

20. சேந்தனார்-11
21. சேந்தனார்-13
22. பெரியாழ்வார்-3
23. பெரியாழ்வார்-6
24. சேந்தனார்-8

பெற்ற சங்கு சக்கரங்களின் பொறிகளைத் தம்முடைய திருப்புயங்களில் அணிந்துகொண்டு இருப்பவர்கள். இதனைப் பெரியாழ்வார்,

"தீயிற் பொலிகின்ற செஞ்சுடர்
ஆழிதிகழ் திருச்சக்க ரத்தின்
கோயிற் பொறியாலே யொற்றுண்டு
நின்று குடிகுடியாட் செய்கின்றோம்"[25]

[தீயின்-நெருப்பின் சுடரைவிட; பொலிகின்ற-பிரகாசிக்கும்; ஆழி-வட்டவடிவான; கோயில்-இடம்; பொறி-அடையாளம்; ஒற்றுண்டு-அடையாளம் செய்யப்பட்டு; குடிகுடி-வழிவழி]

என்று குறிப்பிடுவர்.

இரண்டு அடியார்களும் அடியார் கூட்டம் திரளுமாறு கூவியழைத்து இறைவனுக்குப் பல்லாண்டு கூறுமாறு பணிப்பாதை அவரவர்தம் பாசுரங்கள்தோறும் காணலாம். சான்றாக,

"ஊரும் உலகுங் கழற
உழறி உமைமண வாளனுக்காட்
பாரும் விசும்பும் அறியும்
பரிசுநாம் பல்லாண்டு கூறுதுமே"[26]

[கழற உழறி-புகழ்ந்து பேசி; ஆள்-அடிமைத்தன்மை; அறியும் பரிசு-அறியும் வகை]

என்று சேந்தனாரும்,

"நாடு நகரமும் நன்கறிய
நமோநாரா யணாய வென்று

25. பெரியாழ்வார்-7
26 சேந்தனார்-7

பாடு மனமுடைப் பத்தருள்ளீர்
வந்து பல்லாண்டு கூறுமினே."[27]

[மனம்-எண்ணம்; பத்தர்-பக்தர்கள்]

என்று பெரியாழ்வாரும் பணிப்பதைக் காணலாம். இருவருமே அன்பில்லாதவர்களைத் தவிர்க்கின்றனர். "வாஞ்சகர் போய் அகல!"[28] என்றும், "மிண்டு மனத்தவர் போமின்கள்" என்றும் சேந்தனாரும்[29]; "கூழாட் பட்டு நின்றீர்களை எங்கள் குழுவில் புகுதலொட்டோம்"[30] என்று பெரியாழ்வாரும் அத்தகையோரை நீக்குவதனைக் காணலாம்.

சைவப் பெருமக்கள் சிவபெருமானை முழுமுதற் கடவுளாகக் கொள்பவர்கள். சேந்தனார் தமது திருப் பாடல்களில் இவரை "ஆழநிழற் பட்டன்"[31] "விடை பாகன்"[32] "உமை மணவாளன்"[33] "சிற்றம்பலமே இடமாகப் பாலித்து நட்டம் பயிலவல்லன்"[34] என்று நமக்கு அடையாளம் காட்டுவர். "பின்னைப் பிறவியறுக்க நெறிதந்த பித்தர்"[35] என்றும்,

"அண்டங் கடந்த பொருள் அள
வில்லதோர் ஆனந்த வெள்ளப்பொருள்
பண்டும் இன்றும் என்றும் உள்ளபொருள்
என்றே பல்லாண்டு கூறுதுமே."[36]

28. சேந்தனார்-1
29. சேந்தனார்-2
30. பெரியாழ்வார்-3 கூழ்-சோறு; ஆட்படுதல்-அடிமைப்படுதல்.
31. சேந்தனார்-3
32. சேந்தனார்-4
33. சேந்தனார்-7
34. சேந்தனார் 19
35. சேந்தனார்-1
36. சேந்தனார்- 2
27. பெரியாழ்வார்-4

என்றும் போற்றிப் புகழ்வர். பெரியாழ்வாரும் வைணவர்கள் முழுமுதற் கடவுளாகக் கொண்டுள்ள பரமபத நாதனாகிய நாராயணனைப் "பையுடைய நாகப் பகைக் கொடியான்"[37] என்றும், "படுத்த பைந்நாகனைப் பள்ளி கொண்டான்"[38] என்றும், "பரமேட்டி, பரமாத்மன்"[39] என்றும் அடையாளம் காட்டி மகிழ்வர். அன்றியும், 'மல்லாண்ட திண்டோள் மணிவண்ணன்"[40] என்றும் "இலங்கை பாழாகப் படைபொருதான்"[41] என்றும், "அந்தியம் போதில் அரியுருவாகி அரியை அழித்தவன்"[42] என்றும், "ஆழிவல்லான்"[43] என்றும், "பல்வகையாலும் பவித்திரன்"[44] என்றும் போற்றி உரைப்பர்

இதுகாறும் கூறியவற்றால் இரண்டு திருப்பதிகங்களிலும் உள்ள கருத்தொற்றுமைகளை ஒருவாறு கண்டோம். சைவ வைணவ சமயங்கள் இரண்டும் வைதிகச் சமயங்களாகும்; ஒரு தாய் வயிற்றில் தோன்றிய சகோதரர்களைப் போன்றவை. சில குடும்பங்களில் சகோதரர்களிடையே தோன்றும் போட்டி பொறாமை காழ்ப்பு முதலியவற்றைப் போலவே இவைகளிடையே அவை சிலசமயம் தோன்றி மறைகின்றன. பக்தி இயக்கக் காலத்தில் புறச் சமயங்களாகிய பௌத்தம், சமணம் போன்ற சமயங்களை எதிர்ப்பதில் இவை இரண்டும் ஒன்றுபட்டு நின்றுள்ளன. திருமுறைத் திருப்பாடல்களிலும் திவ்வியப் பிரபந்த திருப்பாசுரங்களிலும் சில இடங்களில் புறச்சமயக் கண்டனங்களைக் காணலாம். ஈண்டுக் குறிப்பிட்ட இரு பதிகங்களும் ஆண்டவனை வழுத்துவதில், அவனுக்குப் பல்லாண்டு பாடிப் பரப்புவதில், ஒத்த பண்புகளைக் கொண்டவை என்பதனை நன்கு அறிகின்றோம்.

---

37. பெரியாழ்வார்-8
38. பெரியாழ்வார்-9
39. பெரியாழ்வார்-12
40. பெரியாழ்வார்-1
41. பெரியாழ்வார்-3
42. பெரியாழ்வார்-6
43. பெரியாழ்வார்-7
44. பெரியாழ்வார்-6

# 6. அறிவியல் தமிழ்

'அறிவியல் தமிழ்' அண்மைக் காலத்தது. நாட்டுப் பற்று மிகுந்து அது விடுதலை இயக்கமாக மாறத் தொடங்கிய நாள் தொட்டு அதனுடைய இரட்டைப் பிறவிபோல் மொழிப்பற்றும் அதனுடன் தோன்றி ஓர் இயக்கமாக வளர்ந்து வருகின்றது. பல்வேறு வகையில் இதற்கு உரம் இட்டு நீர்வார்க்கப் பெற்று வருவதால் இத்துறை விரைவாக வளர்ந்து வருகின்றது. ஆயினும், எம்மருங்கும் கேட்கப்பெறும் 'முழக்கத்திற்' கேற்ப இத்துறையில் செயல் திறம் காணப்பெறவில்லை. இன்று வாய்ச்சொல் வீரர்கட்குத் குறைவு இல்லை. செயல்வீரர்களின் தொகை மிகுந்தால்தான் இத்துறையில் உருப்படியான பயனை எதிர்பார்க்கலாம். நாட்டுப்பற்று வளர்வதற்குத் தூண்டுகோல்போல் அமைந்த கவிஞனின் குரல் மொழிப் பற்றும் வளர்வதற்கும் ஓர் ஊன்றுகோல் போல் அமைந்தது. தமிழ்த்தாய் தன்மக்களை வேண்டுவது போல் அமைத்து மேனாட்டான் ஒருவன் கூறிய இழி சொல்லை அகற்றுமாறு குறையிரப்பதுபோல் அமைந்த கவிஞனின் குரல் இது :

"இன்னொரு சொல்லினைக் கேட்டேன்—இனி
ஏதுசெய் வேன்?என தாருயிர் மக்காள்!
கொன்றிடல் போலொரு வார்த்தை—இங்கு
கூறத் தகாதவன் கூறினன் கண்டீர்!

---

* தில்லித் தமிழ்ச் சங்க வெள்ளி விழா மலரில் (1971) வெளிவந்தது.

'புத்தம் புதிய கலைகள்—பஞ்ச
பூதச் செயல்களின் நுட்பங்கள் கூறும்;
மெத்த வளருது மேற்கே—அந்த
மேன்மைக் கலைகள் தமிழினில் இல்லை.

சொல்லவும் கூடுவ தில்லை—அவை
சொல்லும் திறமை தமிழ்மொழிக் கில்லை;
மெல்லத் தமிழினிச் சாகும்—அந்த
மேற்கு மொழிகள் புவிமிசை யோங்கும்'

என்றந்தப் பேதை உரைத்தான்—ஆ!
இந்த வசை யெனக் கெய்திட லாமோ?
சென்றிடு வீர்எட்டுத் திக்கும்—கலைச்
செல்வங்கள் யாவும் கொணர்ந்திங்குச்
சேர்ப்போம்''[1]

இத்தகைய ஊக்குமொழிகளாலும் அறிஞர்கள் பலர் ஆற்றிவரும் தொண்டுகளாலும் கடந்த சில ஆண்டு களாக 'அறிவியல் தமிழ்' புதிய வேகத்துடன் வளர்ந்து வருகின்றது. ஆயினும், மேலை நாடுகளில் அறிவியல் துறை பல்கிப் பெருகி வரும் வேகத்திற்கு ஏற்ப அது வளர்ச்சி பெறவில்லை என்பதுவே இன்றுள்ள நிலையாகும்.

கடந்த சுமார் இருநூறு ஆண்டுகளாக நம்நாடு வேற்றுமொழியாளரின் ஆட்சியிலிருந்து வந்தது. இதன் காரணமாக அடிமட்டத்திலிருந்து எல்லா மாவட்டங் களிலுமே ஆங்கிலம் பயிற்று மொழியாக அமைந்தது. நாடெங்கும் எல்லா மாநிலங்களிலும் இது வரன் முறையாக நடைபெற வேண்டியது இயல்பாயிற்று. மேலை நாடுகளில் ஏற்பட்ட தொழிற்புரட்சியின் காரண மாக வளர்ந்த அறிவியல் துறைகள், சமூகவியல்பற்றிய துறைகள், பிற துறைகள் ஆகியவற்றை ஆங்கிலத்தின்

1. பாரதியார் கவிதைகள்-தமிழ்த்தாய்-8,9,10,11

வாயிலாகவே பயிலும் வாய்ப்பே நிலவி வந்தது. இவற்றைத் தாய்மொழிமூலம் கற்கும் சூழ்நிலையும் கற்பிக்கும் வாய்ப்பும் வசதியும் ஏற்படாமலே போய் விட்டது. இதனால் தமிழில் அறிவியல் துறை நூல்கள் தோன்றும் நிலையே எழவில்லை.

தொடக்கநிலைத் தொண்டர்கள் : ஆயினும், நாட்டு விடுதலை இயக்கம் முற்றிய நிலையிலிருந்தபொழுது காந்தியடிகள் போன்ற சில பெரியோர்களின் தூய்மை யான உள்ளத்தில் நம் நாட்டுக் கல்விநிலைபற்றிய சிந் தனையும் எழுந்தது. தாய்மொழி மூலம கல்வி புகட்டப் பெற்றால் நாட்டு மக்களின் அறிவு நிலை விரைவாக வள ரும் என்ற எண்ணம் அவர்களிடையே வேரூன்றலாயிற்று; நாடு விடுதலை அடைந்த பல்லாண்டுகட்கு முன்பிருந்தே (1930க்கு மேல்) தாய்மொழிக் கல்வித் திட்டத்தையும் வகுக்கலாயினர். முதன் முதலில் உயர்நிலைப் பள்ளிகளில் பள்ளி இறுதித் தேர்வுக்கான ஏ. பிரிவு பாடங்களைத் (வரலாறு, புவியியல், பொது அறிவியல் போன்றவை) தாய்மொழியில் கற்பிப்பதும் தேர்வுகள் எழுதுவிப்பதுமான முறைகள் செயற்பட்டன. நாளடைவில் சி. பிரிவு பாடங்கட்கும் (வேதியியல், இயற்பியல், கணிதம் முதலிய விருப்பப் பாடங்கள்) இம் முறைகள் நீட்டிக்கப்பெற்றன. இக் காலத்தில் பல்வேறு துறைகளில் தாய்மொழியில் பாட நூல்கள் தோன்றலாயின. தொடக்கத்தில் தோன்றிய நூல் களில் கலைச் சொற்கள் சரியாக இல்லாத காரணத்தாலும், நூலெழுதுவோரின் தமிழறிவு குறைவாக இருந்ததாலும் நடை ஆற்றொழுக்குபோல அமையவில்லை; படிப்பதற்கு அது சரளமாகவும் இல்லை. நாளடைவில் (1940க்கு மேல்) மொழி அறிவும், துறையறிவும் சேர்ந்த ஆசிரியர்களின் தொகை பெருகவே, நூல்களும் புது மெருகுடன் புத்தொளி வீசித் திகழலாயின. இக் காலத்தில் உயர்நிலைப் பள்ளிக்

கல்வித் திட்டத்திற்குமேல், சற்று உயர்ந்த நிலையில், பொதுமக்கள் படிப்பதற்கென்று பல நூல்கள் தோன்றலாயின. இராஜாஜி அவர்கள் எழுதிய 'தமிழில் முடியுமா?' "திண்ணை இரசாயனம்' ஆகிய நூல்களும்; திரு. பெ. ந. அப்புசாமி அவர்கள் எழுதிய 'மின்சாரம்', 'வானக்காட்சி' போன்ற முதல் நூல்களும்; 'நீங்களும்-விஞ்ஞானமும்' போன்ற மொழி பெயர்ப்பு நூல்களும்; பேராசிரியர் ஆர். கே. விசுவநாதன் அவர்கள் எழுதிய 'அணுவில் ஆநந்தத் தாண்டவம்', 'விசுவரூபம்', 'ஆலயமணி' போன்ற நூல்களும்; பேராசிரியை ஈ. தா. இராஜேசுவரி அம்மையார் எழுதிய 'சூரியன்', 'வானக்குமிழ்' போன்ற நூல்களும் குறிப்பிடத் தக்கவை. இத் துறையில் இங்ஙனம் பணியாற்றிய வேறு பல ஆசிரியர்களும் உள்ளனர், சரியான விவரங்கள் தெரியாததால் அவர்களுடைய பெயர்களும் குறிப்பிடப்பெறவில்லை. இவர்கள் யாவரையும் இத் துறையின் முதல் நிலைத் தொண்டர்களாகக் கருதலாம். அரசின் துணையோ பிறர் துணையோ இன்றித் தாமாகவே தாய்மொழிப் பற்றுடன் தொண்டாற்றிய பெரியார்கள் இவர்கள்.

**கலைச் சொல்லாக்க முயற்சிகள் :** அறிவியல் தமிழ் வரலாற்றில் தமிழக அரசின் பங்கும் உண்டு. தொடக்கத்தில் இது குறைவாகவே இருந்தது. நாளடைவில் இது வளர்ந்து வருகின்றது. நாடு விடுதலை பெறுவதற்கு முன்னர் இராஜாஜி அவர்கள் சென்னை மாநிலத்தில் முதல் அமைச்சராக இருந்த காலத்தில் உயர்நிலைப்பள்ளி மட்டத்தில் தாய்மொழிக் கல்வி நடைமுறைக்குக் கொண்டு வரப்பட்டது. இதன் காரணமாக இம் மட்டத்தில் தனியார் முயற்சியால் பல்வேறு துறையில் பல நூல்கள் தோன்றின. அறிவியல் தமிழின் வளர்ச்சியில் பெரிய இடர்ப்பாடாக இருப்பது கலைச் சொற்களின்

ஆக்கமே. இதில் பல்வேறு கருத்து வேற்றுமைகள் உள்ளன. இவற்றை இச் சிறு கட்டுரையில் ஆராய்வதற்கு இடம் இல்லை. கலைச் சொற்களினை ஆக்கும் தீர்மானம் சென்னை மாகாணத் தமிழர் முதலாண்டு மாநாட்டில் (சூன் 10, 11-1934) தோன்றியது. அதனை நிறைவேற்ற ஓர் உட்கழகம் அப்பொழுதே உருப்பெற்றது. அம் மாநாட்டில் தோன்றிய சென்னை மாகாணத் தமிழ்ச் சங்கம் அவ்வுட்கழகத்தைக் கூட்டிச் (14-10-1934) சொல் லாக்கக் கழகம் எனப் பெயர் தந்து வேலை தொடங்கியது. அதனால் உருப்பெற்ற பல்வேறு துறைச் சொற்கள் பல்வேறு அறிஞர்களால் திருத்தம் செய்யப் பெற்று செப்பம் அடைந்தன. கணிதவியல், இயற்பியல், வேதியியல் போன்ற ஒன்பது துறைகளில் கலைச் சொற்கள் சென்னை மாகாணத் தமிழ்ச் சங்க ஆதரவில் (1938) வெளி வந்தன. இதில் சென்னை மாகாண முதல் அமைச்சராக இருந்த இராஜாஜி அவர்கள் தந்த ஆக்கமும் ஊக்கமும் குறிப்பிடத்தக்கவை. இந்த முயற்சிகள் பல நல்ல கலைச் சொற்களை உருவாக்கியுள்ளன. நல்ல பல தனித்தமிழ்ச் சொற்களும் தோன்றின. இச் சொற்கள் சுமார் பத்து ஆண்டுக் காலம் நூல்கள் எழுதுவோருக்குப் பெருந்துணை யாக இருந்தன.

நாடு விடுதலை பெற்றுச் சுயாட்சி ஏற்பட்ட பிறகு இத் துறை வளர்ச்சியில் ஒரு தனி வேகம் உண்டாயிற்று. தமிழ்க் காதலர் திரு. தி.சு. அவினாசிலிங்கம் அவர்கள் சென்னை மாநிலக் கல்வி அமைச்சராக இருந்த காலத்தில் இந்த வேகத்தை மேலும் முடுக்கினார். இவர்கள் காலத் தில் மீண்டும் பல்வேறு துறைகட்கும் தனிக் குழுக்கள் அமைக்கப்பெற்றன. இவைகளின் துணையால் இதுகாறும் தனியார் முயற்சியால் தோன்றிய பல்வேறு கலைச் சொற் களும் நூல்கள் எழுதுவோர் தத்தம் நூல்களில் இறுதியில் பிற சேர்க்கைகளாகத் தொகுத்து வெளியிட்ட சொற்களும்

ஒருசேர தொகுக்கப்பெற்று, ஒருநிலையாக்கப் பெற்று (Standardised), மேலும் சில புதிய சொற்கள் சேர்க்கப் பெற்றுச் சென்னை மாநில அரசின் ஆதரவில் (1947) மீண்டும் நூல் வடிவாக வெளியாயின. இவை ஒரு பத்தாண்டுகள் நூல்கள் எழுதுவோருக்குத் துணை நின்றன. இந் நிலையில் கல்லூரிகளிலும் தமிழ் பயிற்று மொழியாக அமைதல் வேண்டும் என்ற கருத்து அறிஞர்களிடையே முகிழ்த்தது. இதற்கு இதுகாறும் வெளிவந்த சொற்கள் போதா என்பதையும் அவர்கள் உணர்ந்தனர்.

இந் நிலையில் இளங்கலை மட்டத்தில் சில அறிவியல் துறைகளைத் துணைப் பாடங்களாக (Minors) அமைக்கலாம் என்ற கொள்கையைச் சென்னைப் பல்கலைக் கழகம் ஒப்புக் கொண்டது. இதற்கு உடனடியாகத் தமிழில் பல நூல்கள் எழுதப்பெற வேண்டிய இன்றியமையாமையும் எழுந்தது. திரு. சி. சுப்பிரமணியம் கல்வி அமைச்சராக இருந்த காலத்தில் திரு. ஜி. ஆர். தாமோதரன் அவர்களைத் தலைவராகக் கொண்டு அரசினரால் 'கல்லூரித் தமிழ்க் குழு' (College Tamil Committee) என்ற பெயரில் ஒரு குழு அமைக்கப்பெற்றது. அது பல்வேறு துறைகட்கென அமைக்கப் பெற்ற, உட்குழுக்களின் துணையால் பல்வேறு துறைக் கலைச் சொற்களை உருவாக்கியது. இவை யாவும் நூல் வடிவில் சென்னை மாநில அரசினரால் (1960இல்) வெளியிடப் பெற்றுள்ளன. இவற்றிலும் குறைகள் இல்லாமல் இல்லை. என்றாலும், நூல்கள் எழுதுவோருக்கு இவை துணையாக நிற்கும் என்பதற்கு ஐயம் இல்லை. நூல் எழுதுவோர், மாணாக்கர்கட்குக் கற்பிப்போர் இவர்களிடம் இச் சொற்கள் நன்கு செப்பமுற்று வருகின்றன. இங்ஙனம் அந்தந்த நேரங்களில் சில அவசர நிலைகளுக்கேற்ப வெளியிடப்பெறும் கலைச் சொல் அகராதிகளில் பல குறைகள் உள்ளன. இம்முயற்சிகள் விட்டுவிட்டு நடை

பெறுவதால் அறிஞர்களின் சிந்தனையும் அறுபடுகின்றது. இதனால் உருப்படியான முறையில் ஒருநிலையாகப் பெற்ற கலைச் சொல் அகராதிகள் (Standardised technical terms) தோன்ற முடியாத நிலையினைக் காணலாம். இலங்கையிலும் தமிழைப் பயிற்று மொழியாக்கும் முயற்சி நடைபெற்று, பல்லாண்டுகட்கு முன்னரே இளங் கலைப் படிப்பு நிலையில் கலைச் சொற்களை ஆக்கியுள்ளனர் என்பது ஈண்டுக் குறிப்பிடத்தக்கது. இவ்வாறு ஏற்பட்ட கலைச் சொல் அகராதிகளைக் கூர்ந்து நோக்கினால் இவற்றுள் ஒரே சொல்லுக்குப் பலப்பல சமயங்களில் வெவ்வேறு சொற்கள் மொழி பெயர்ப்பாக அமைந்திருப்பதைக் காணலாம். ஆதலின் இவ் வாக்கத்தில் சில விதிகளை வகுத்துக்கொண்டு அந் நெறிப்படி சொற்களை ஆக்குதல் இன்றியமையாதது. அந் நெறியை ஆய்வதற்கும் ஈண்டு இடம் இல்லை.

உயர்நிலைப் பள்ளிகளின் பாடமுறைகட்கும் பயிற்று மொழிக்கும் ஏற்பவே ஆசிரியர் கல்லூரிகளின் பாட முறைகளும் பயிற்றுமொழியும் அமைதல் வேண்டும் என்ற இன்றியமையாமையை நாளடைவில் உணரலாயினர். ஆகவே, உயர்நிலைப் பள்ளிகளில் பணியாற்றும் ஆசிரியர்கட்கு அளிக்கப்பெறும் பயிற்சியும் அதே மொழியில் இருந்தாலன்றிப் பயிற்சி பெறும் ஆசிரியர்கள் தங்களுடைய தொண்டிற்கு இன்றியமையாத தகுதியுடன் வெளியேறுதல் இயலாது என்பதையும் உணர்ந்தனர். ஆசிரியர் கல்லூரிகளில் தமிழ் மொழியே பயிற்று மொழியாகத் தகுதி பெறுவதற்கு முதன் முதலாக அதற்கேற்ற கலைச் சொற்களின் இன்றியமையாமையை உணர்ந்து அதனைத் தொகுத்து வெளியிடும் பொறுப்பினைச் சென்னை மாகாணத் தமிழ்ச் சங்கம் ஏற்றுக் கொண்டது. அப் பொறுப்பினை நிறைவேற்றுவதற்கான குழு ஒன்றினை அப்பொழுது தமிழகக்

கல்வித்துறை இயக்குநராக இருந்த தாமரைச் செல்வர் நெ. து. சுந்தரவடிவேலு அவர்களின் தலைமையில் அமைக்கப் பெற்றது. சுமார் ஐயாயிரம் கலைச் சொற்களைத் தேர்ந்தெடுத்து அவற்றிற்கேற்ற தமிழ்ச் சொற்களையும் தொகுத்துக் கலைச் சொல்லாக்க அடிப்படை வேலையைச் செய்தது. பிறகு இச்சொற்களைப் பல்வேறு மட்டங்களில் ஆய்ந்து ஒருநிலையாக்கி நூல் வடிவில் (1959) வெளியிட்டது. உள்ளது சிறத்தலின் மூலமே முன்னேற்றம் காணமுடியும் என்ற முறைப்படி இச் சொற்கள் நடைமுறையில் திருத்தங்கள் பெற்று புதுமெருகேறி வருகின்றன.

நூல்களை வெளியிடும் முயற்சிகள்: பல்லாண்டுகளாகத் தனிப்பட்டோர் இத் துறையில் பல்வேறு நூல்களை வெளியிட்டுள்ளனர்; வெளியிட்டும்வருகின்றனர். இன்று வெளிவந்துள்ள, வெளிவந்து கொண்டிருக்கும் அறிவியல் நூல்களை, பாடநூல்கள், பொதுமக்களுக்கான நூல்கள் என இரண்டு கூறுகளாகப் பகுத்துக் கூறலாம். இந்த இரண்டு பகுதிகளிலும் முதல் நூல்கள், மொழி பெயர்ப்பு நூல்கள் என்ற இரண்டு வகை உள்ளன. தொடக்கத்தில் அவசரத்தின் நிமித்தம் மொழிபெயர்ப்பு நூல்கட்கு இடம் இருப்பினும், தெளிவு காரணமாகவும் மூலநூல் போலவே தோன்றுமாறு மொழி பெயர்ப்புச் செய்தல் அருமை காரணமாகவும், நாளடைவில் பல வேற்றுமொழி நூல்களை ஒப்பு நோக்கித் தமிழில் தெளிவுடன் மூல நூல்களாகவே வெளியிடும் முயற்சியில்தான் அதிகக் கவனம் செலுத்தப் பெறுதல்வேண்டும்.

தனியார் துறையில் மேற்கொள்ளப் பெற்ற முயற்சியால் பல்வேறு வகை அறிவியல் நூல்கள் வெளிவந்துள்ளன. பல்கலைக் கழகங்களும் அரசும் மேற்கொண்ட முயற்சியாலும் பல பாட நூல்கள் வெளிவந்துள்ளன. இவற்றுள் மொழி பெயர்ப்பு நூல்களும் உள்ளன; முதல் நூல்களும்

உள்ளன. இவற்றைப் பற்றிச் சில செய்திகளை ஈண்டு அறிவது மிகவும் இன்றியமையாதது.

முதலாவதாக, பொதுமக்களுக்கென எழுதப்பெறும் நூல்களின் வளர்ச்சியினைக் காண்போம். தனியார் துறை இதில் பெரும்பணி ஆற்றியுள்ளது. தொடக்க நிலையில் மேற்கொள்ளப்பெற்ற முயற்சியால் வெளிவந்த சில நூல் களைப்பற்றியும் முதன் முதலாகத் தொண்டாற்றிய முதல் நிலைத்தொண்டர்களைப்பற்றியும்மேலே குறிப்பிட்டோம். அங்குக் குறிப்பிட்ட பெரியார்களில் திரு. பெ. ந. அப்பு சாமி அவர்களும் பேராசிரியர் ஆர். கே. விசுவநாதன் அவர் களும் இன்னும் தமிழ்த்தாய்க்கு அணிகலன்கள் பூட்டி மகிழ்ந்து வருகின்றனர். அவர்களுடைய அடிச் சுவடுகளைப் பின்பற்றிப் பல்வேறு எழுத்தாளர்கள் தோன்றியுள்ளனர். இவர்களுள் ந. குழந்தைவேலன் (என். கே. வேலன்), பேராசிரியர் டாக்டர். ந. சுப்புரெட்டியார் ஆகியோர்களை முக்கியமானவர்களாகக் குறிப்பிடலாம். திரு. வேலன் அவர்கள் பல்லாண்டுகளாகத் தமிழுலகுக்கு நன்கு அறிமுக மானவர்கள். இவர்களுடைய பல்வேறு துறை நூல்கள் பெரும்பாலும் சிறுவர்கட்கும் பொதுமக்கட்கும் அதிக மாகப் பயன் படுபவை. 'மின்சாரத்தின் கதை', (தமிழக அரசு பரிசு பெற்றது) 'அணுவின் கதை,' 'நிலவின் கதை' போன்ற பல நூல்கள் படிக்கும் சிறுவர்களின் மனங்களை நன்கு கவரும். பேராசிரியர் ரெட்டியார் அவர்கள் இன்று சிறுவர்கட்கும் வளர்ந்தவர்கட்கும் நூல்கள் எழுதியுள்ளார். மொழி பெயர்ப்பு நூல்களில் 'மானிட உடலைக்' (1958) குறிப்பிடலாம். 'அணுவின் ஆக்கம்' (1958), 'இல்லறநெறி' (1964,1976) 'வாழையடிவாழை' (1961) இவை வளர்ந்தவர்க் கென எழுதப்பெற்றவை. இவருடைய 'இளைஞர் வானொலி' (1961), 'இளைஞர் தொலைக் காட்சி, (1966), 'இராக்கெட்டு கள்' (1964) (தமிழக அரசின் பரிசு பெற்றது) 'அதிசய மின்னணு' (1963), 'நமது உடல்' (1966) (தமிழக அரசின்

பரிசு பெற்றது) 'அம்புலிப் பயணம்' ஆகிய நூல்கள் சிறுவர்க்காக எழுதப்பெற்றவை; இனிய எளிய தெளிவான நடையில் அமைந்தவை. இவர்களைத் தவிர, திரு. எஸ். எஸ். இராமசாமி, திரு. பெ. தூரன், பேராசிரியர் சவரிமுத்து முதலியோரும் சில அறிவியல் நூல்களை எழுதி யுள்ளனர். கோவையிலிருந்து வெளிவரும் 'கலைக்கதிர்' என்ற திங்கள் இதழ் பல்லாண்டுகளாகப் பல அரிய கட்டுரை களைத் தாங்கி தமிழ் கூறு நல்லுலகில் உலா வந்து கொண் டுள்ளது. சிறிது காலம் உலா போந்த 'அணுக்கதிர்' (சென்னை) இதழும் அறிவியல் பணியாற்றி உள்ளது.

பொது மக்களுக்கென நூல்கள் வெளியிடுவதில் பல்லாண்டுகளாகச் சென்னைப் பல்கலைக் கழகம் பரிசுத் திட்டங்களை ஏற்படுத்தி எழுதுவோருக்கு ஊக்கம் காட்டி வருகின்றது. மொழி பெயர்ப்பு நூல்கட்கும் முதல் நூல் கட்கும் பரிசுகள் அளித்து வருகின்றது. மொழி பெயர்ப்பு நூல்களில் பேராசிரியர் ந. சுப்புரெட்டியாரின் 'அணுக்கரு பௌதிகம்' (1966) இங்ஙனம் பரிசு பெற்று வெளிவந்த மொழி பெயர்ப்பு நூலாகும். அங்ஙனமே, பேராசிரியை ஈ. த. இராஜேசுவரி அம்மையாரின் 'அணுப் புராணம்' (1953) என்ற முதல் நூலும் பரிசு பெற்ற முதல் நூலாகும். பரிசுத் திட்டங்களின் கீழ் இங்ஙனம் வெளி வந்த வேறு நூல்களைப்பற்றிய குறிப்புகள் கிடைக்க வில்லை.

இரண்டாவதாக, அறிவியல் தமிழில் பாட நூல்களின் வளர்ச்சியினை ஆராய்வோம். உயர்நிலைப் பள்ளிக் கல்வியில் தமிழ் பயிற்று மொழியாக அமைந்த காரணத் தால் இம்மட்டத்தில் எண்ணற்ற அழகிய தமிழ் நூல்கள் பல துறைகளிலும் வெளி வந்திருப்பதைக் கண்டு மகிழலாம். தனியார் துறை இதில் செய்துள்ள தொண்டு பொன் னெழுத்துகளால் பொறிக்கப்பெற வேண்டியதொன்று.

இன்று அரசு நூல்களை வெளியிடும் பொறுப்பைத் தானே மேற்கொண்டு வருகின்றது. இதனால் நூல்கள் ஒருகால் சற்று மலிவாகக் கிடைக்கலாம். ஆயினும், இத்திட்டத்தால் அகத்தோற்றத்திலும், புறத்தோற்றத்திலும் செய் நேர்த்தியிலும் வளரும் திறன் இல்லாமல் போய் விடுவதற்கு ஏதுவாகும். தகுதி வாய்ந்த ஆசிரியர்களைத் தேர்ந்தெடுப்பதில் விழிப்புடன் இருத்தல் வேண்டும்.

கல்லூரிக் கல்வி மட்டத்தில் அண்ணாமலைப் பல்கலைக் கழகம் இடைநிலை வகுப்புக்கான (Intermediate) சில அறிவியல் பாட நூல்களை வெளியிட்டுள்ளது. 'நவீன ஆசேதன இரசாயனம்' (Modern Inorganic Chemistry) (2 பகுதிகள்) (1938, 1941), பௌதிக நூல் (Physics) (2 பகுதிகள்) (.94.) என்ற நூல்களை வெளியிட்டுள்ளது. தொடக்க நிலையாதலால் இவற்றில் நல்ல ஆற்றொழுக்கான நடை அமையவில்லை; கலைச் சொற்களும் நன்கு செப்பம் பெறவில்லை. கல்லூரி மட்டத்தில் தாய்மொழி பயிற்று மொழியாகப் புகுத்தப் பெறாமையால் இதற்குமேல் அப்பல்கலைக் கழகம் அறிவியல் நூல்களை வெளியிடுவதில் ஊக்கம் காட்டவில்லை.

கல்லூரிகளில் தாய்மொழி பயிற்று மொழியாக அமைதல் வேண்டும் என்ற கொள்கை அண்மையில் மேற்கொள்ளப்பெற்றது. கடந்த பத்தாண்டுகளாக இத்துறையில் நூல்களை வெளியிடும் பணியைத் தமிழக அரசே மேற்கொண்டு புகுமுக வகுப்பு இளங்கலைப் படிப்பு மட்டங்களில் பல்வேறு துறைகளில் முதல் நூல்களையும் மொழிபெயர்ப்பு நூல்களையும் வெளியிட்டு வருகின்றது. இன்று வரையிலும் இருநூறுக்கு மேற்பட்ட நூல்கள் வெளிவந்துள்ளன. ஆசிரியர் கல்லூரி மாணவர்கட்கு ஒரு சில நூல்கள் வெளியிடப் பெற்றுள்ளன. ஆனால், இத்துறையில் அரசு வெளியிடுவதற்கு முன்னதாகவே சில தனியார் துறைகள் இவ நூல்களை வெளியிட்டுள்ளன. இவற்றுள்

பேராசிரியர் டாக்டர் ந. சுப்பு ரெட்டியாரின் 'தமிழ் பயிற்றும் முறை' (957, 1964, 1980) 'அறிவியல் பயிற்றும் முறை' (957, 1971, 1981) 'கல்வி உளவியல்' (1961, 1981) குறிப்பிடத் தக்கவை; மிகச் செல்வாக்குடன் புழங்குபவை. அண்மையில் இவரது 'யுனெஸ்கோ: அறிவியல் பயிற்றும் மூலமுதல் நூல்,' (1969) என்ற மொழி பெயர்ப்பு நூலும் வெளிவந்துள்ளது.

தொழில் துறையிலும் அறிவியல் நூல்களை வெளியிடும் பணி மிகவும் இன்றியமையாதது. ஆலைகளிலும் தொழிற் கூடங்களிலும் அநுபவ வாயிலாகத் தொழிலாளர் பெற்ற அறிவைப் பயன்படுத்தி முறையான அறிவியல் அறிவாக வளர்க்கும் வகையில் நூல்கள் எழுதப்பெறுதல் வேண்டும். இன்று இத்துறையில் ஒரு சில நூல்கள் தோன்றி வருகின்றன. கோவை தொழில் நுட்பக் கல்லூரி 'தொழில் நுட்பம்' (1967) என்ற அருமையான நூலை வெளியிட்டுள்ளது. திரு. வி. அருணாசலம் என்பார் எழுதிய எலக்டிரிக்கல் என்ஜினீயரிங்' (தமிழக அரசின் பரிசு பெற்றது) என்ற நூல் குறிப்பிடத்தக்கது. 'ரேடியோ மெக்கானிசம்', 'ரேடியோ செய்வதெப்படி?' என்ற தலைப்புகளிலும் நூல்கள் வெளிவந்துள்ளன.

**எதிர்காலத் திட்டங்கள்** : அறிவியல் தமிழ் வரலாற்றில் உடனடியாக மேற்கொள்ள வேண்டிய திட்டங்களைப்பற்றி ஈண்டு ஒரு சில குறிப்புகள் நினைவிற் கொள்ளத்தக்கவை.

கலைச் சொற்களை உருவாக்கி ஒருநிலையாக்கும் பணியில் அறிஞர்கள் ஈடுபட வேண்டும். தனிப்பட்டோரும், அமைப்புகளும இதில் பங்கு பெறலாம். எந்த நூல் வெளிவரினும் அதில் வரும் கலைச்சொற்களை அகர வரிசையில் நூலின் இறுதியில் தொகுத்து வெளியிடும் வழக்கம் அமைதல் வேண்டும். இதனால் பலருக்கும் சொற்களை அறிய வாய்ப்பு ஏற்படும். நாளாவட்டத்தில் ஏற்ற சொற்கள் நிலைத்து நின்று, பொருந்தாச் சொற்கள்

மறைந்து போகும். கணிதம், இயற்பியல், வேதியியல், உயிரியல் ஆகிய பல்வேறு துறையினரும் ஒரே மாதிரியாகப் பொதுவான கலைச் சொற்களைத் தமிழாக்கம் செய்தல் வேண்டும். பல மாவட்டங்களில் பாமரர் வாக்கில் வாய் மொழியாகப் பயின்று வரும் தொழில் நுணுக்கக் கலைச் சொற்களைத் தொகுத்து வெளியிடும் பணி மேற்கொள்ளத் தக்கது. அதிகமாக நூல்களை வெளியிடும் அரசு இதில் நல்ல கவனம் செலுத்த வேண்டும்.

அறிவியல் விரைந்து வளரும் இன்றைய சூழலில் தமிழில் உருவாக்கப்பெறும் நூல்கள், மொழி பெயர்ப்பு நூல்களாயினும் சரி, முதல் நூல்களாயினும் சரி, அவை அண்மைக் கால வளர்ச்சி வரை எடுத்துக் காட்டுவனவாக இருத்தல் வேண்டும். அறிவியல் நூல்களை மொழி பெயர்ப்போர் அறிவியலறிவு, முதல் மொழி அறிவு, தமிழறிவு இம்மூன்றும் பெற்றவராக அமையின் மிக நன்று. இம்மூன்றும் ஒரு சேரப்பெற்றவர்கிடைப்பது அருமையினும் அருமை இன்று வெளி வந்துள்ள பல நூல்களில் தெளிவும் நீரோட்டமான நடையும் காணப்பெறாததற்கு .இக் குறையே முக்கிய காரணமாகும் இந்நூல்களில் கருத்துகள் மொழி பெயர்க்கப்பெற்று விடினும் கனமான ஆங்கிலச் சாயல் படிந்த ஒரு செயற்கையான தமிழ் நடை கையாளப் பெறுகின்றது; படிப்போரின் கருத்துணர்தலுக்கு இது பெருந்தடையாக உள்ளது. எதிர்காலத்தில் இந்நடை தவிர்க்கப் பெறுதல் வேண்டும்.

இறுவாய் : இன்று எங்கும் 'தமிழ் முழக்கம்' கேட்கப் பெறுகின்றது. தமிழுணர்ச்சி பொங்கி வழிகின்றது. இந்த உணர்ச்சி ஆற்றில் கரைத்த புளி போலாகாமல்; காற்றில் கரையும் கற்பூரம் போலாகாமல், உருப்படியாக துறை களில் செயற்படுதல் வேண்டும். பாரதியாரின்,

'பிறநாட்டு நல்லறிஞர் சாத்திரங்கள்
தமிழ்மொழியில் பெயர்த்தல் வேண்டும்;
இறவாத புகழுடைய புதுநூல்கள்
தமிழ்மொழியில் இயற்றல் வேண்டும்,"[2]

என்ற ஆணையைச் செயற்படுத்துதல் வேண்டும்.

"வெளியுலகில் சிந்தனையில் புதிதுபுதிதாக
விளைந்துள்ள எவற்றினுக்கும் பெயர்களெல்லாம் கண்டு
தெளிவுறுத்தும் படங்களொடு சுவடியெலாம் செய்து
செந்தமிலழச் செழுந்தமிழாய்ச் செய்வதுவும் வேண்டும்;

..................................................................

"உலகியலின் அடங்கலுக்கும் துறைதோறும் நூல்கள்
ஒருவர்தயை இல்லாமல் ஊரறியும் தமிழில்
சலசலென எவ்விடத்தும் பாய்ச்சிவிட வேண்டும்"[3]

என்ற கவிஞனின் கட்டளையை நிறைவேற்றுதல் வேண்டும்.

இதுவே தமிழ் மொழியில் அறிவியல் வளர்ச்சிக்கு உரிய தலையாய தொண்டாகும்; பக்தியுடன் மேற்கொள்ள வேண்டிய விழுமிய பணியுமாகும்.

---

2. பாரதியார் 22 தமிழ் 3
3. பாரதிதாசன் 24 தமிழ் வளர்ச்சி 1, 2

## 7. தமிழ் இலக்கியத்தில் தொலைக் காட்சி*

மனத்தின் வியத்தகு ஆற்றல்களுள் ஒன்று கற்பனை. இல்லாததைப் படைப்பதையும் வானக்கோட்டைகளை எழுப்புவதையும் கற்பனையென்று சாதாரண மக்கள் கருதுகின்றனர். உண்மையில் நிலைபேறில்லாப் பொருள்களையுண்டாக்கும் மனத்தின் ஒருவகை யாற்றல் கற்பனையாகும். ஆற்றங்கரையில் அரசமரத்தடியில் இயற்கைச் சூழலினிடையே தன்னந் தனியாக உட்கார்ந்திருக்கும் பொழுது நம்முடைய மனம் தட்டுத் தடையின்றிப் பாவனை உலகங்களில் (Make believe worlds) அலைகின்றது. வானத்திலுள்ள மேகங்களில் பிராணிகள் பறவைகள், கட்டடங்கள் முதலியவற்றின் வடிவங்களைக் காண்கின்றோம். சாதாரண நிகழ்ச்சி ஒரு சிறுகதையாகின்றது இவை யாவும் கற்பனையே.

சிந்தாமணியில் : சிந்தாமணியில் ஒரு நிகழ்ச்சி. அசனி வேகம் என்ற யானையின் செருக்கைச் சீவகன் அடக்கிய செய்தியைக் கட்டியங்காரன் அறிகின்றான். அதன் பிறகு சீவகன் அவனால் சிறைப்படுத்தப் பெறுகின்றான். பின்னர்ச் சுதஞ்சனன் என்னும் தேவன் துணையால் சிறையினின்றுத் தப்பி உய்கின்றான். இங்ஙனம் தப்பியவன் பதுமை, கேமசரி என்ற இருமகளிரை மணந்து அவர்களிடம் இன்பந் துய்த்து வழக்கம்போல் அவர்களையும் விட்டுப் பிரிகின்றான். பின்னர் மத்திம தேயத்துள்ள ஏமமாபுரத்தின் ஒரு பூஞ்சோலையை அடைகின்றான். அங்குள்ள ஓர் அழகிய பொய்கையைக் கண்டு அதன்

---

* திருப்பதி திருவேங்கடவன் பல்கலைக் கழகக் கல்லூரி ஆண்டிதழில் வெளிவந்தது.

வளங்களை நோக்கிக் காந்தருவ தத்தையையும் குண மாலையையும் நினைந்து பலவாறு புலம்பி மிக்க வருத்தத் துடனிருக்கின்றான். இந் நிலையில் அந்நகரத்து அரசன் தடமித்தன்ன் புதல்வன் விசயன் என்பானை அச்சோலையில் காண நேரிடுகின்றது. விசயன் சீவகனின் தேயம் முதலிய வற்றை வினவ, சீவகனும் தான் இன்னானென்று புலப்படா வண்ணம அவற்றைக் கூறுகின்றான். பின்னர் அச்சோலை யிலிருந்த ஒரு மாமரத்தினின்று ஒரு மாங்கனியை ஓரம்பினால் வீழ்த்திய முறையினால் சீவகன் தான் விற்றொழிலில் வல்லவனாதலைப் புலப்படுத்துகின்றான். பின்னர், சீவகன் தடமித்தன் புதல்வர்கள் விசயன் முதலிய ஐவர்கட்கும் வில் வித்தை கற்பித்து அவர்களை அவ் வித்தையில் வல்லுநராக்குகின்றான. அரசன் அதனை யறிந்து அளவற்ற மகிழ்ச்சியுறறுத் தன் அருமை மகள் கனகமாலையை மணம் புரிவிக்கின்றான். சீவகனும் கனகமாலையுடன் இனிதே வாழ்கின்றான்.

சிறையினின்று தப்பிய சீவகன் யாண்டுள்ளான் என் பதை நந்தட்டன் முதலிய அவனுடைய நண்பர்கள் அறியக் கூடவில்லை. நாடெங்குந் தேடியும் அவனைக் காணாது காந்தருவதத்தையை அடைகின்றனர். அவளோ தன்னுடைய விஞ்சையின் மகிமையால் சீவகன் செயல்களை யறிந்து சிறிதும் வாட்டமின்றி இருக்கின்றாள். அங்ஙனம் அவர்கள் வாட்டமின்றி இருத்தலின் காரணத்தை வினவிய நந்தட்டனுக்கு,

"கொதிமுகக் குருதி வைவேல்
குரிசிலோ நம்மை யுள்ளான்;
விதிமுக மணங்கள் எய்தி
வீற்றிருந் தின்பம் உய்ப்ப
மதிமுகம் அறியும் நாமே
வாடுவ தென்னை?"[1]

1. சீவக சிந்தா-1708

[ஆரிசில்-சீவகன்; உள்ளான்-நினையாதவனாய்; விதி-ஊழ்வினை; வீற்றிருந்து-கவலையற்றிருந்து; மதிமுகம்-ஒரு வித்தை]

என்று பதிலிருக்கின்றாள். ஊழ்வினைப் பயனால் சீவகன் பலரை மணந்து கவலையின்றிக் காலங் கழிக்கின்றான் என்று அவள் அவர்கட்குக் கூறுகின்றாள். பின்னர் நந்தட்டன் தனக்கு அடிமைப்பட்டால், தான் சீவகனை அவனுக்குக் காட்டுவதாகக் கூறுகின்றாள். அவனும் எழுமையும் அடிமையாக இருப்பதாகக் கூறுகின்றான். உடனே காந்தருவதத்தை,

"மாண்டதோர் விஞ்சை யோதி
மதிமுகந் தைவந் திட்டாள்;
நீண்டது பெரிது மன்றி
நினைத்தூழி விளக்கிற் றன்றே"[2]

[மாண்டது-மாட்சிமை பட்டதாகிய; விஞ்சை-மந்திரம்; தைவந்திட்டாள்-தடவினாள்; நீண்டது பெரிதுமன்றி-சீவகன் காட்சியை நந்தட்டனுக்கு மிகவும் அறிய தல்லாத தாக]

இங்கு ஓதிய விஞ்சை, 'மதிமுகம்' என்பது; இஃது ஒரு வித்தை வித்தைகளுள் மகா வித்தை 500-உம் க்ஷுல்லக வித்தை 700-உம் விஞ்சையர்க்குரியன என்றும், மதிமுகம் என்பது அவற்றுள் க்ஷுல்லக வித்தையைச் சார்ந்தது என்றும் கூறுவர். இந்த வித்தை 'ஆபோகினி' என்று ஸ்ரீ புராணத்தில் கூறப்பெறுகின்றது. காந்தருவதத்தை 'மதிமுகம்' என்ற விஞ்சையை ஓதி மதிபோன்ற தன்முகத்தைத் தடவியவுடன்,

"பொற்புடை யமளி யாங்கண்
பூவணைப் பள்ளி மேலால்
கற்பக மாலை வேய்ந்து
கருங்குழல் கைசெய் வானை"[3]

2. சீவக சிந்தா-1709.
3. சீவக சிந்தா-1710.

[அமளி-படுக்கை; கைசெய்வானை-அணிசெய்பவனை.]

நந்தட்டன் காண்கின்றான். அஃதாவது, அழகியதொரு படுக்கையில் அமர்ந்து கொண்டு சீவகன் கனகமாலையின் கரிய குழலை அணி செய்து நிற்பதைக் காண்கின்றான். மதிமுகம் என்ற மந்திரத்தை ஓதியவுடன் வாசவதத்தை இருந்த இடத்திலிருந்து ஒரு பேரொளி—இரயில் வண்டியின் முன்னுள்ள விளக்கின் ஒளி போன்றதொன்று—வீசியிருக்க வேண்டும். அவ்வொளி சீவகன் இருப்பிடத்தையும் அவன் மேற்கொண்டிருந்த செயலையும் புலனாக்கி இருக்க வேண்டும். அஃதாவது அவ்வொளி தொலைவிலுள்ள காட்சியைக் காண்பதற்குத் துணை செய்திருக்க வேண்டும் என்று கருதலாம்; இன்றுள்ள தொலைக்காட்சிச் சாதனம் போன்றதோர் அமைப்பாக இருந்திருக்க வேண்டும் என்றும் ஊகிக்கலாம்.

பாரதத்தில் : பாரதத்தில் ஒரு நிகழ்ச்சி. பாண்டவர் கட்கும் கௌரவர்கட்கும் குருட்சேத்திரம் என்ற இடத்தில் பதினெட்டு நாட்கள் நடந்த போரின் நிகழ்ச்சிகளையும் காட்சிகளையும் சஞ்சயன் என்பான் அரண்மனையிலிருந்து கொண்டே திருதராட்டிரனுக்கு அவ்வப்போது தெரிவிக்கு மாறு ஓர் ஏற்பாடு இருந்ததை அறிகின்றோம். சஞ்சயனும் ‘கிரிக்கெட் விமரிசனம்’ போல் அவ்வப்பொழுது நிகழும் நிகழ்ச்சிகளை இருந்த இடத்திலிருந்து கொண்டே திருதராட்டிரனுக்கு அறிவித்து வருகின்றான் என்பதாக வியாச பாரதத்தால் அறிகின்றோம். ஆனால் வில்லி பாரதத்தில் அவ்வாறு காணப் பெறவில்லை. எனினும், பதினெட்டாம் போர்ச் சருக்கத்தில் சஞ்சயன் நூற்றுவர் இறந்த செய்தியைத் திருதராட்டிரனுக்கும் காந்தாரிக்கும் உரைப்பதாக ஒரு பாடல் காணப்பெறுகின்றது.

"நாடிய சொல் சுருதிநிகழ் நாவினான்
சஞ்சயனும் நள்ளென் கங்குல்
ஓடியொளித் திடுகதிரோன் உதிப்பதன்முன்
விலோசனம்நீர் உகுப்ப எய்தி
ஆடிமுகத் தரசினுக்கும் ஐயிருப
தரசரையும் அளித்து வாழ்ந்து
வாடியமெய்ச் சவுபலைக்கும் உற்றதெல்லாம்
வாய்மலர்ந்தான் வாய்மை வல்லான்."[4]

[சுருதி-வேதம்; நள்ளென் கங்குல்-நடுஇரவு; விலோசனம் நீர்-கண்ணீர்; ஆடி முகத்து அரசு-திருதராட்டிரன்; சவுபலை-சுபலராசன் மகள் காந்தாரி.]

என்ற பாடலால் அறிகின்றோம். இங்ஙனம் இருந்த இடத்திலிருந்து கொண்டே தொலைவில் நடைபெறும் நிகழ்ச்சிகளை நேரில் கண்டு ஒருவர் அறிவிக்க வேண்டுமாயின் 'தொலைக்காட்சி' (Television) போன்ற ஒரு கருவியமைப்பு இருந்திருக்க வேண்டும்; இருக்க வேண்டும் என்பதாகவாவது கவிஞன் கனவுகண்டிருக்க வேண்டும்.

இக்காலக் கவிதையில்: புரட்சிக் கவிஞர் பாரதிதாசனின் 'சஞ்சீவி பர்வதத்தின் சாரல்' காவியப் போக்கில் எழுதப் பெற்ற ஒரு கற்பனைச் சொல்லோவியம். அம்மலையில் குப்பனும் வள்ளியும் சந்திக்கின்றனர். அங்கு இரண்டு மூலிகைகள் இருப்பதாகக் கவிஞர் கற்பனை செய்கின்றார். இவற்றின் மகிமையைக் குப்பன்,

"ஒன்றைத்தின் றால்இவ் வுலகமக்கள் பேசுவது
நன்றாகக் கேட்கும்மற் றொன்றைவா யில்
போட்டால்

4. வில்லி. பார. பதினெட்டாம் போர். பாடல்—146:239 (ராஜம் பதிப்பு)

மண்ணுலகக் காட்சிஎல்லாம் மற்றிங் கிருந்தபடி
கண்ணுக் கெதிரிலே காணலாம்."[5]

என்று வள்ளிக்குக் கூறுகின்றான். இந்த வரிகளைப் படிக்கும் நமக்கு வானொலியும் (Radio), தொலைக்காட்சியும் நினைவிற்கு வருகின்றன. ஒரு மூலிகை வானொலியை உணர்த்துவதாகவும், மற்றொரு மூலிகை தொலைக் காட்சியைக் குறிப்பதாகவும் நாம் கருதலாம்.

சீவகன் வரலாறும் பாரதமும் குப்பன்-வள்ளி சந்திப்பும் வெறும் கதைகள்; கற்பனை ஓவியங்கள். எனினும், அவற்றைப் புனைந்த கவிஞர்கள் தொலைவிலுள்ள காட்சிகளை இருந்த இடத்திலிருந்து கொண்டே காண்பதற்குரிய கருவியமைப்பினைப்பற்றிக் 'கனவு' கண்டிருக் கின்றனர் என்றாவது நாம் ஒப்புக் கொள்ளத்தானே வேண்டும்? இங்ஙனம் கவிஞர்களிடம் தோன்றிய கற்பனை-தான் நாளடைவில் அறிவியலறிஞர்களின் ஆராய்ச்சிகள் மூலம் புதுப்புனைவுகளாக (Inventions) வடிவெடுத்தது என்று கொள்வதில் தவறு ஒன்றும் இல்லை. இவ்வாறு பண்டிருந்து இன்றுகாறும் மனிதன் தொலைக்காட்சியைப் பற்றிக் கண்ட கனவே இன்று அறிவியல் ஆய்வுகளால் நனவாகி உள்ளது. இன்று உலகெங்கும் நடைபெறும் நிகழ்ச்சிகளை நாம் இருந்த இடத்திலிருந்து கொண்டே கண்டு களிக்க முடிகின்றது.

5. சஞ்சீவி பர்வதத்தின் சாரல்—வரி (45-49)

## 8. முத்தி நெறி*

இவ்வுலகில் வாழும் மக்கள் கருத்தாலும் செயலாலும் பலதிறப்பட்டவர்களாய் இருத்தலைக் காணலாம். சிலர் பொருள் திரட்டுவதனையே குறிக்கோளாகக் கொண்டிருப்பர்; சிலர் இவ்வுலக இன்பத்திலேயே ஆழங்கால் பட்டிருப்பர்; சிலர் கல்வி அறிவைப் பெருக்குவதிலேயே நாட்டம் கொண்டிருப்பர். ஆனால், ஒருசிலருக்கு இறைவனருளால் நிலையில்லாததும், அடிக்கடி மாறுந் தன்மையுடையதும், துன்பம் நிறைந்ததுமான இவ்வுலக வாழ்க்கையில் வெறுப்பும்; நிலையுள்ளதும், இன்பம் நிறைந்ததுமான வீடுபேற்றில்—மோட்சத்தில்—விருப்பமும் உண்டாகின்றன. இங்ஙனம் மோட்சத்தை—முக்தி நிலையை—அவாவி நிற்பவர்களைச் சமய நூலார் 'முமுட்சுகள்' என்று குறிப்பிடுவர். துன்பம் கலவாத இன்பம் எதுவோ அதுவே 'மோட்சம்' அல்லது 'முத்தி நிலை'[1] என்று வழங்கப் பெறும். முத்தி என்பது உரவு நீராகிய கடலில் தோன்றும் ஒரு பெரும் முத்துப் போன்ற சிறப்பினையுடையதென்னும் பொருளில் 'முத்தி' என வந்தது. முத்து நீருள் தோன்றுவது போன்று முத்தியும் திருவருளாகிய நீருள் தோன்றுவது. முத்து குளிர்ந்து இன்பம் தருவதுபோன்று முத்தியும் அருள் இன்பம் பயப்பதாகும். இந்த இன்பம் 'ஆன்மாநுபவம்', 'ஈசுவராநுபவம்' ஆகிய இரண்டிலும் உண்டாகின்றது. இந்த இரண்டனுள் ஆன்மாநுபவத்தில்

---

* திருச்சி கி. ஆ. பெ. விசுவநாதம் 75ஆவது நினைவு மலரில் (1973) வெளிவந்தது.

1. உலகத்தில் ஆழங்கால் பட்டிருப்பவர்கள் 'புபுட்சுகள்' எனக் குறிப்பிடப்பெறுவர்.

நாட்டம் உள்ளவர்களைக் 'கைவல்யார்த்திகள்' என்றும், ஈசுவரானுபவத்தில் இச்சையுள்ளவர்களைப் 'பகவத்பிராப்தி காமர்கள்' என்றும் மெய்யறிவு நூல்கள் குறிப்பிடும். இவ்விரு திறத்தினரும் 'முமுட்சுகள்' என்றே வழங்கப் பெறுவர். ஈண்டு நாம் கூறப்போவது ஈசுவரானுபவத்தில் இச்சையுள்ள முமுட்சுகளைப் பற்றியேயாகும். இறைவனைக் கிட்டப்பெற்று அவனுக்குப் பல்வேறு அநுபவ கைங்கரியங்களைச் செய்து அவனுடைய முகமலர்ச்சியைக் கண்டு மகிழவேண்டும் என்னும் இச்சையால் சமுசாரத்தில் (இவ்வுலக வாழ்வில்) வெறுப்புக் கொண்டவர்களே இவர்கள். இவர்கட்கு ஆன்ம சொரூபம்[2] இன்னது என்றும், அந்த வழியைப் பற்றுவதனால் உண்டாகும் பயன் இன்னது என்றும் தெரிந்திருத்தல் வேண்டும். இந்த முமுட்சுகள் முத்தி நிலையை எய்துவதற்குரிய நெறிகளை ஈண்டு விளக்குவோம்.

வைணவ சமயத்தில் சித்தோபாயம், சாத்தியோபாயம் என்ற இரு நெறிகள் பேசப்பெறுகின்றன. சித்தோபாயம் என்பது, நம்மால் செய்யப்பெற வேண்டியதாயன்றி முன்பேயுள்ள நெறி; சர்வேசுவரன். இதனை வேதாந்த தேசிகர்,

'மன்னும் அனைத்துற வாய்மருள்
மாற்றருள் ஆழியுமாய்த்
தன்வினை வால்அனைத் துந்தரித்(து)
ஓங்கும் தனிஇறையாய்
இன்னமு தத்தமு தால்இரங்
குந்திரு நாரணனே
மன்னிய வன்சரண் மற்றோர்பற்
றின்றி வரிப்பவர்க்கே'[3]

2. ஆன்ம சொரூபம்-உடலைவிட்டு வேறுபட்ட ஆன்மா தனக்கும் பிறருக்கும் உரிமையுடைதாயின்றி, ஈசுவரனுக்கே அடிமைப்பட்டதாக இருத்தல்.

3. தேசிக பிரபந்தம்-69

[மன்னும்-நிலைபெற்ற; மருள்-அஞ்ஞானம்; அருள்-கருணை; ஆழி-கடல்; தரித்து-தாங்கி; இன் அமுதத்து அமுது-இலக்குமி; இரங்கும்-இரக்கம் உறுதல்; பற்று-உபாயம்; வரிப்பவர்-சரணம் அடைபவர்; வன்சரண்-சித்தோபாயம்].

என்று குறிப்பிடுவர். சாத்தியோபாயம் என்பது நம்மால் செய்யப்பெறும் உபாயம். இது பத்தி என்றும், பிரபத்தி[4] என்றும் சாத்திரங்களில் இருவகையாகப் பேசப்பெறும். சேதநன்[5] இந்த இரு நெறிகளுள் ஒன்றை அநுட்டித்த பின்பே சர்வேசுவரன் அவனை ஏற்றுக் கொண்டு பலன் தருகின்றான் என்று உபநிடதமும் கூறுகின்றது. வினையிலே, கிடந்துழலும் சேதநனைப் பகவான் தேர்ந்தெடுப்பதற்குக் காரணம் அவன் மேற்கொள்ளும் நெறியேயாகும். பத்தி, பிரபத்தி ஆகிய இரண்டு நெறிகளில் ஒன்றைக் கடைப் பிடித்து ஒழுகுவதே சேதநனின் முத்திநெறியாகும்.

பத்தி நெறி: பேரன்பின் முதிர்ச்சியே பத்தி எனப் படும். இப்பத்தியினை மேற்கொண்டார் பத்தரெனப் படுவர். பத்தரெனினும் பித்தரெனினும் ஒன்றேயாகும். உலகில் நோயால் கொள்ளும் பித்தும் மருளால் கொள்ளும் பித்தும் துன்பம் தருவன. அருளால் கொள்ளும் பித்து அளவிலா இன்பம் தருவது. "பத்தராய்ப் பணிவார்கள் எல்லார்க்கும் அடியேன்"[6] என்னும் சுந்தரமூர்த்தியடிகளின் திருவாக்காலும் பத்தர்களின் மேம்பாட்டினை உணரலா கும். குலசேகரப் பெருமாளும் "பேதைமா மண வாளன்தன் பித்தனே"[7] "எம்பிரானுக்கு எழுமையும்

4. பிரபத்தி-சரணாகதி.
5. சேதநன்—அறிவுள்ள ஆன்மா.
6. தேவாரம்-7.39:10
7. பெரு. திரு. 3:5

பித்தனே"[8] "பித்தனாய் ஒழிந்தேன் எம்பிரானுக்கே"[9] "பேயனாய் ஒழிந்தேன் எம்பிரானுக்கே"[10] என்ற அவர்தம் வாக்கால் தன்னைப் 'பித்தன்' என்றும், 'பேயன்' என்றும் கூறிக்கொள்வதனால் இதனை மேலும் தெளிவு பெறலாம். இந்தப் பத்தி நிலையை மெய்ப்பொருளியலார் 'பத்தி யோகம்' என்று பயன்படுத்தி அதனை எட்டு அங்கங்களாக முறைப்படுத்தி வகுத்துக் காட்டுவர். இதனை,

"எமநியம ஆசனங்கள்
    இயல்ஆவி புலனடக்கம்
தமதறியுந் தாரணைகள்
    தாரையறா நினைவொழுக்கம்
சமமுடைய சமாதிநலம்
    சாதிப்பார்க்(கு) இலக்குஆகும்
அமரர்தொழும் அத்திகிரி
    அம்புயத்தாள் ஆரமுதே."[11]

[தாரைஅறா-இடைவிடாத; சாதித்தல்-அநுட்டித்தல் அம்புயத்தாள்-பெரிய பிராட்டியார்; ஆர் அமுது-அருளாளன்.]

என்று விளக்குவர் வேதாந்த தேசிகர். இந்த எட்டு அங்கங்களையுடைய[12] பக்திநெறி வழியொழுகுவார்க்குப் பிராட்டிக்கு ஆராஅமுதமாக இருக்கும் எம்பெருமான் குறிப்பொருளாகி வீடுபேற்றை அளிப்பான்.

---

8. மேற்படி 3:6
9. மேற்படி 3:7 10. மேற்படி 3:8
11. தேசிகப் பிரபந்தம்—254.
12. எட்டு அங்கங்களாவன: (i) யமம்-அகிம்சை, சத்தியம், திருடாமை, காமத்தை அடக்குதல், பொருளைச் சேர்க்க முற்படாமை ஆகிய நிலை; (ii) நியமம்-தூய்மை, உள்ளதைக்கொண்டு மனநிறைவு பெறுதல்; விரதம தவம் முதலியன செய்தல், எல்லாச் செயல்களையும் இறைவனிட

இந்த பத்தி நெறி ஆழ்வார் பாடல்களில் ஆங்காங்கு குறிப்பிடப் பெற்றுள்ளன. நாலாயிரத்தை ஓதுவார் இதனை நன்கு அறிவர்.

"அறிந்துஐந்தும் உள்அடக்கி
ஆய்மலர்கொண்(டு) ஆர்வம்
செறிந்த மனத்தராய்
செவ்வே—அறிந்துஅவன்தன்
பேர்ஓதி ஏத்தும்
பெருந்தவத்தோர் காண்பரே
கார்ஓத வண்ணன்
கழல்"[13]

[ஐந்து-ஐம்புலன்கள்; ஆய்மலர்-ஆராய்ந்த பூக்கள் ஆர்வம்-பத்தி; செவ்வே-நன்றாக பேர்-திருநாமங்கள்; கார் ஓதம் வண்ணன்-கருங்கடல் நிறத்தினன்; கழல்-திருவடிகள்.]

என்ற பூதத்தாழ்வாரின் பாசுரத்தில் இதனைக் காண லாம். விஷ்ணுவை என்றும் தன் சித்தத்துள் வைத்துள்ள விஷ்ணு சித்தர் என்ற பெரியாழ்வாரின்,

"மார்வம் என்பதோர் கோயில் அமைத்து
மாதவன் என்னும் தெய்வத்தை நாட்டி
ஆர்வம் என்பதோர் பூஇட வல்லார்க்கு
அரவ தண்டத்தில் உய்யலும் ஆமே"[14]

---

சமர்ப்பித்தல்; (iii) ஆசனம்-பதுமாசனம் முதலிய ஆசனங்கள்; (iv) பிராணாயாமம் - மூச்சையடக்குதல்; (v) பிரத்தியாகாரம்-புலன்களை உலக விஷயங்களினின்றும் திருப்புதல்; (vi) தாரணை-பகவானுடைய திருமேனியை மனத்திற் கொள்ளுதல்; (vii) தியானம்-இடைவிடாது இறைவனை நினைத்தல்; (viii) சமாதி-இறைவனை நேரில் கண்டாற்போன்ற நிலையினை அடைதல்.

13. இரண். திரு-6.
14. பெரியாழ். திரு. 4.5:2

[மார்வம்-இதயம்; ஆர்வம்-பக்தி; அரவதண்டம்-யம தூதர்களால் வரும் துன்பம்,]

"பூசும் சாந்து என்நெஞ்சமே;
புனையும் கண்ணி எனதுடைய
வாசகம்செய் மாலையே;
வான்பட் டாடையும் அஃதே;
தேசம் ஆன அணிகலனும்
என்கை கூப்புச் செய்கையே"[15]

[சாந்து-சந்தனம்; கண்ணி-மாலை]

என்ற நம்மாழ்வாரின் திருவாய்மொழியில் அவருடைய பத்தி நிலையைக் கண்டு அநுபவிக்கலாம்.

மெய்யறிவினர் இப்பத்தி நெறி கர்மயோகம், ஞான யோகம், பக்தியோகம் என்ற மூன்று நிலைகளில் பயிற்சி யடைய வேண்டிய நெறி என்றும் கூறுவர். சாத்திரங் களைப் பயின்ற அறிவினால் சில சடங்குகளையும் கடமை களையும் தவறாது செய்தல் வேண்டும். இறைவனை ஏத்தல், திருத்தலப் பயணத்தை மேற்கொள்ளல், அறம் புரிதல் போன்றவை யாவும் கர்மயோகத்தில் அடங்கும். இக்கர்மயோகத்தினால் தன்னை மறத்தல், மனத்தைக் கட்டுப்படுத்தல், ஆன்மாநுபவம் பெறல் போன்ற நிலைகள் ஏற்பட்டு சமுசாரத்தில் ஆழ்ந்திருக் கும் ஆன்மா தூய்மையுறுகின்றது. அடுத்த நிலை, ஞான யோகம் என்பது. கர்மயோகத்தில் தூய்மையடைந்த ஆன்மா இந்நிலையில் தியானத்தில் ஆழங்கால் படுகின்றது. இயமம், நியமம் போன்ற செயல்களால் ஆன்மா அமைதி நிலையை நாடுகின்றது. அலைந்து திரியும் மனத்தை அங்ஙனம் அலையவிடாமல் நிலை நிறுத்தும் நிலை ஏற்படு கின்றது. அஃதாவது, மெய்யறிவினர் குறிப்பிடும் கைவல்ய

15. திருவாய். 4.3;2

நிலை உண்டாகின்றது. ஞானயோகத்தினால் தன் ஆன்மா இன்னது என்று தனக்குப் புலனாவதுபோல எல்லாச் சீவர்களிடமும் ஆன்மா என்று ஒன்று இருப்பது தட்டுப்படுகின்றது.

இதற்கு அடுத்த உயர்நிலையில் எல்லா உயிர்களி டையே ஊடுருவி நிற்கும் பரமான்மாவின் சாயல் தோன்று கின்றது. இது திடீரென்று தோன்றி மறையும் நிலை யாகும். இதற்கு அடுத்த நிலையே பக்தியோகம் என்பது. இந்த நிலையில் முமுட்சுகள் தம் முனைப்பை அகற்றி இறைவனுடைய சங்கற்பத்துக்கு அடிபணிந்து இறைவ னுடன் நிரந்தரத் தொடர்பு கொள்வதற்குத் தயாராகிக் கொள்கின்றனர். இந்நிலையில் தமக்கும் இறைவனுக்கும் அறுபடாத தைலதாரை போன்ற தொடர்பு ஏற்படு கின்றது. நாளாக நாளாக இந்நிலையில் ஒரு புதிய ஆற்றல் தோன்றுகின்றது. வானநூல் அறிஞர் பூமியின் சிறுமையையும் அதனைக் கவர்ந்து நிற்கும் கதிரவனின் பெருமையையும் உணர்வதுபோல், பக்தர் களும் சமுசாரத்தில் உழலும் தம் ஆன்மாவின் சிறுமை யையும், எல்லாவுயிர்களையும் புரக்கும் இறைவனின் பேராற்றலையும் உணர்கின்றனர். இந்நிலையில் சீவான்மா பரமான்மாவுடன் கலக்கின்றது; கடலில் கிடக்கும் கடற்பஞ்சு போன்ற நிலையினை அடைகின்றது. இந்த நிலையையும் பரபக்தி, பரஞானம், பரமபக்தி என்று வேறுபடுத்திக் காட்டும் மரபும் உண்டு. இந்நிலைகளை யெல்லாம் ஆழ்வார்களின் பாசுரங்களில் ஆங்காங்குக் காண லாம். பொய்கையாழ்வார், பூதத்தாழ்வார், பேயாழ்வார் ஆகிய மூன்று ஆழ்வார் பெரு மக்கள் இந்த மூன்று நிலை கட்கும் எடுத்துக்காட்டுகளாகத் திகழ்கின்றனர்.

பிரபத்தி நெறி: மேற்கூறிய பக்தி நெறியை அநுட் டிப்பது எல்லோராலும் முடியாது. ஆகவே, உயர்ந்தோர்,

தாழ்ந்தோர், கற்றவர் கல்லாதவர் என்ற வேறுபாடு இன்றி எல்லோராலும் மேற்கொள்ளக் கூடிய நெறியொன்றினைக் கண்டனர் மெய்யறிவு பெற்ற மேலோர். அதுவே 'பிரபத்தி நெறி'யாகும். இதனை வேதாந்ததேசிகர்,

"அந்தணர் அந்தியர் எல்லையில்
நின்ற அனைத்துலகும்
நொந்தவ ரேமுத லாக
நுடங்கி அனன்னியராய்
வந்தடை யும்வகை'[16]

[அந்தியர்-சண்டாளர்; நொந்தவர் - (சமுசாரத்தில்) வருந்தியவர்; நுடங்கி-துவண்டுபோய்; அனன்னியர்-வேறு பலனையும் வேறு இரட்சகரையும் கொள்ளாதவர்; அடையும் வகை-சரணம் வழி,]

என்று சிறப்பித்துப் பேசுவர். இந்நெறி 'சரணாகதி நெறி' என்ற பெயராலும் வழங்கப்பெறும். எல்லோருக்கும், எளிதாகக் கடைப்பிடிக்கவல்ல இந்நெறியை மேற்கொள்ளுமாறு பரிந்துரைக்கின்றார் அந்த ஆசாரியர்.

"எல்லார்க்கும் எளிதான ஏற்றத் தாலும்
இனிஉரைக்கை மிகையான இரக்கத்தாலும்
சொல்லார்க்கும் அளவாலும் அமைத லாலும்
துணிவரிதாய்த் துணைதுறக்குஞ் சுகரத்தாலும்
கல்லார்க்குங் கற்றார்சொல் கவர்த லாலும்
கண்ணன்உரை முடிசூடி முடித்த லாலும்
நல்லார்க்கும் தீயார்க்கும் இதுவே நன்றாம்
நாரணற்கே அடைக்கலமாய் நணுகு வீரே."[17]

[ஏற்றம்-பெருமை; உரைக்கை-உச்சரிக்கை; இரக்கம்-கருணை; சொல்-பிரபத்தி வாக்கியம்; ஆர்க்கும் அளவு-

16. தேசிகப் பிரபந்தம்-56
17 தேசிகப் பிரபந்தம்-200,

பூர்ணமாய் உச்சரிக்கப்படும் மாத்திரம்; சுகரம்-செளகர்யம்; கவர்தல்-பலனைக் கொண்டிருத்தல்; கண்ணன் உரை-கண்ணனின் கீதை; முடிசூடி-சிகரத்தில் (சரம சுலோகம்) விவரிக்கப் பெற்று.]

என்ற பாசுரத்தில் அவருடைய பரிந்துரையைக் காணலாம். 'துணிவரிதாய் துணை துறக்கும் சுகரம்' என்பது மகா விசுவாசம் என்னும் பிரபத்தியின் அங்கம் கடினமாயினும், அதிலும் கடினமான கர்மயோகம் ஞானயோகம் முதலிய அங்கங்களை விட்டு விடுகையாகிய செளகர்யத்தைக் குறிக்கின்றது. மனநிலை மாறி இரட்சகனாகிய எம்பெருமானின் கருணையின்மீது பெரு நம்பிக்கை கொள்வதே இந்நெறியைக் கடைப்பிடிப்போரிடம் வேண்டப் பெறுவது. ஆழ்வார் பெருமக்களின் இறையநுபவம் பிரபந்நர்களின்[18] தலைவரான நம்மாழ்வார் கண்ட இந்த சரணாகதித் தத்துவத்தில் அடங்குகின்றது. பகவத்கீதை குறிப்பிடும் தத்துவமும் இதுவேயாகும்.[19] மணிவாசகப் பெருமானும் இத்தத்துவத்தைக் குறிப்பிடுகின்றார்; இஃது அடிகளாரின் அநுபவமாக வெளிப்படுகின்றது.[20]

இந்தப் பிரபத்திநெறியிலும் ஐந்து அங்கங்கள் இருப்பதைக் காட்டுவர் ஆசாரிய பெருமக்கள். அவை: (1) அநுகூல்ய சங்கற்பம் என்பது, எம்பெருமானின் திருவுள்ளத்திற்கு உகந்தவற்றையே செய்வதாய் உறுதி கொள்ளலாகும்; (2) பிராதிகூல்ய வர்ஜநம் என்பது, அவன் திருவுள்ளத்திற்குப் பொருந்தாதவற்றைச் செய்யாதிருக்க உறுதிகொள்ளல்; அல்லது அவற்றைச் செய்ய எண்ணம் கொள்ளாமை; அல்லது அவற்றைச்

18. பிரபந்நர்கள்-பிரபத்தியை அநுட்டிப்பவர்கள்.
19. பகவத்கீதை 18 : 66
20. திருவாசகம்-அடைக்கலப்பத்து.

செய்யாது விடுதல்; (5) மகா விசுவாசம் என்பது, அவன் நம்மைக் காக்கவல்லவன் என்று தேறி, தவறாது காப்பான் என்றும் உறுதியாக நம்புதலாகும்; (4) கோப த்ருத்வ வரணம் என்பது, பக்தி யோகம் முதலிய உபா யங்களை அநுட்டிக்க ஆற்றலற்ற தம்மிடம் அருள் புரிந்து அவ்வுபாயங்களின் இடத்தில் நின்று பலன் தருமாறு அவனை வேண்டுகையாகும் இது; (5) கார்ப்பண்யம் என்பது, பக்தியோகம் முதலிய உபாயங்களில் தமக்கு அதிகாரமில்லாமையையும், எம்பெருமானைத் தவிர வேறு தெய்வத்தினிடமோ, வீடுபேற்றினைத் தவிர வேறு பலனிலோ பற்றில்லாமையையும் அநுசந்தித்தல்; அல்லது இவ்வநுசந்தானத்தால் முன் தம்மிடமிருந்த முனைப்பு ஒழியப் பெறுதல்; அல்லது எம்பெருமானின் கருணை தம் மீது வளர்ந்தோங்கும்படி தாழ்ந்து நின்று அஞ்சலி[21] முதலிய வற்றைச் செய்தல் ஆகும். ஆழ்வார்களின் பாசுரங்களால் தெளிந்து அறியப் பெறுவது இந்த பிரபத்தி நெறியே யாகும். பொய்கையாழ்வார் பாசுரம் ஒன்றில் இந்நெறி குறிப்பிடப் பெறுகின்றது.

"அடைந்த அருவினையோ
டல்லல்நோய் பாவம்
மிடைந்தவை மீண்டொழிய
வேண்டில் - நுடங்கிடையை
முன்னிலங்கை வைத்தான்
முரணழிய முன்னொருநாள்
தன்னிலங்கை வைத்தான்
சரண்"[22]

---

21. அஞ்சலி-அஞ்ஜலி (அம்-ஜலயதி) கைகளைக்கூப்பு வதற்கு இப்பெயர். இச்செய்கை எம்பொருமானை நீர்ப் பண்டமாக உருகச் செய்தலால் இதற்கு இப்பெயர் வந்தது.
22. முதல் திருவந்-56

[அணைந்த-பற்றிக் கிடக்கும்; வினை-பழவினை; அல்லல்-மனத்துன்பம்; பாவம்-இப்போது செய்யும் பாவம்; மிடைந்தவை-(ஆன்மாவை) மூடிக்கிடக்கின்றவை; மீண்டு-நீங்க; நுடங்கு இடையை-மெல்லிய இடையையுடைய சீதாப்பிராட்டியை.]

வினை, நோய், பாவம் இவை வாசனையோடு நீங்க வேண்டுமாயின் சக்கர்வர்த்தித் திருமகனைச் சரணம் புகுதலே வழியாகும் என்ற குறிப்பினை இப்பாசுரத்தில் காணலாம்.

"வீடாக்கும் பெற்றி
யறியாது மெய்வருத்திக்
கூடாக்கி நின்றுண்டு
கொண்டுழல்வீர்!—வீடாக்கும்
மெய்ப்பொருள் தான் வேத
முதற்பொருள்தான் விண்ணவர்க்கு
நற்பொருள்தான் நாரா
யணன்."[23]

[வீடு-மோட்சம்; பெற்றி-உபாயம், வழி; கூடு-எலும்புக் கூடு; உழல்வீர்-திரிகின்றவர்களே; மெய்ப்பொருள்-இறைவன்; விண்ணவர்-நித்திய சூரிகள்]

என்ற பாசுரத்தில் திருமழிசையாழ்வார் எம்பெருமானைச் சித்தோபாயமாகக் காட்டுவதைக் காணலாம். பரமபத நாதனையே சரணமடைந்து உய்ந்து போகலாம் என்று குறிப்பிடுவதையும் உணரலாம். இதே ஆழ்வார் பிறிதோரிடத்தில்,

"அடைக்கலம் புகுந்த என்னை
'அஞ்சல்' என்ன வேண்டுமே."[24]
[அஞ்சல்-பயப்படாதே]

---

23. நான்முகன் திரு-13
24. திருசந்த விருத்தம்-92

என்று அருளிச் செய்துள்ளதையும் உணரலாம். திருமங்கை யாழ்வாரும்,

"கூறா ஐவர் வருந்துகுமைக்கக்
குடிவிட் டவரைத்
தேறா துன்அடைந் தேன்திரு
விண்ணகர் மேயவனே!"[25]

[கூறு ஆ-பாகமாக; ஐவர்-ஐம்புலன்கள்; குமைக்க-இம்சிக்க; குடிவிட்டவர்-இந்திரியங்கள்; தேறாது-நம்பாமல்.]

என்று திரு விண்ணகரில் சேவை சாதிக்கும் ஒப்பிலியப்பனைச் சரண் அடைந்து முறையிடுகின்றார். "படைப்புக் காலத்தில் என் நன்மைக்காக என்னிடத்தில் குடியேறியுள்ள ஐம்புலன்களும் என்னை மிகவும் துன்புறுத்துகின்றன; அவற்றை நம்பாமல் உன்னிடம் சரண் புகுகின்றேன்; காத்தருள்க" என்று வேண்டுவதைப் பாசுரத்தில் காண்க. இதே ஆழ்வார்,

"கல்தேன் பாய்ந்தொழுகும்
கமலச்சுனை வேங்கடவா!
அற்றேன் வந்தடைந்தேன்
அடியேனை யாட்கொண்டருளே."[26]

[கல் தேன்-மலை முழைஞ்சுகளினின்றும் பெருகும் தேன்; கமலச் சுனை-தாமரைச் சுனை; அற்றேன்-உனக்கே அற்றுத் தீர்ந்தவன்]

என்று திருவேங்கட முடையானையும் சரணம் அடைந்தலைக் காணலாம். இவர் திருக்கண்ணபுரத்து எம்பெருமானிடமும் சரணம் அடைந்தமையை "அம்மானை... அடியேன் அடைந்து உய்ந்து பிழைத்தேனே"[27] என்ற பாசுர அடியால் அறியலாகும்.

---

26. பெரி. திரு. 6.2:7
26. பெரிய. திரு. 1.9:9
27. பெரிய. திரு. 8.9:2

சரணாகதி தத்துவத்தின் தந்தை போன்றவர் பிரபந்நர்களின் தலைவராக விளங்கும் நம்மாழ்வார். அவர் தம்முடைய 'திருவாய் மொழியில்' "நம் பெருமான் அடிமேல் சேயங்கொள் தென்குருகூர்ச் சடகோபன்"[28] என்றும், "கழல்கள் அவையே சரணாகக் கொண்ட குருகூர்ச் சடகோபன்"[29] என்றும் தம்மை அறிமுகப் படுத்திக் கொள்ளுகின்றார். "எனக்கு நின்பாதமே சரணாகத் தந்தொழுந்தாய்"[30] என்று எம்பெருமான் தனக்குச் சரணாக அமைந்தமையையும் "உன் அடிக் கீழ் அமர்ந்து புகுந்தேனே"[31] என்று தான் எம்பெருமான் கழலிணைகளில் சரணாகப் புகுந்தமையையும் புலப் படுத்துகின்றார். இவ்விடத்தில்,

"சேஷிபக்கல் சேஷபூதன் இழியுந்துறை, ப்ரஜை முலையிலே வாய் வைக்குமாப்போலே"[32]

[சேஷி-இறைவன்; சேஷபூதன்-சேதநன்; ப்ரஜை-குழவி]

என்ற முமுட்சுப்படி வாக்கியம் சிந்திக்கத் தக்கது.

மயர்வற மதிநலம் அருளப் பெற்ற ஆழ்வார்கள் பரத்துவம், வியூகம், விபவம், அந்தர்யாமித்துவம், அர்ச்சை என்னும் இறைவனுடைய ஐந்து நிலைகளையும் உள்ளங்கை நெல்லிக்கனி போன்று கண்டவர்கள். இந்த ஐந்து நிலைகளிலும் காக்கும் இயல்பினதும், அடையத் தக்கதும், எல்லாத் திருக்குணங்களும் நிறைந்துள்ளதுமான இடம் அர்ச்சாவதாரமே என்று தெளிந்தவர்கள். இவர்கள் 'ஒழிவில் காலமெல்லாம் உடனாய் மன்னி வழுவிலா

---

28. திருவாய். 5.9:11
29. திருவாய். 5.8:11
30. திருவாய். 5.7:10
31. திருவாய். 6.10:10
32. முமுட்சுப்படி—147

அடிமை செய்வதற்குப்'[33] பதறிப் பலகாலும் பிரபத்தி பண்ணுகின்ற அளவில், பல இடங்களிலும் அர்ச்சாவதாரத்தில்தான் பிரபத்தி செய்தனர் என்பதை மேலே கண்டோம்.

> "ஆழ்வார்கள் பலவிடங்களிலும் பிரபத்திபண்ணிற்றும் அர்ச்சாவதாரத்திலே''[34]

என்பது ஸ்ரீவசன பூஷண வாக்கியம். முமுட்சுப்படியிலும்,

> 'இதுதான் (அர்ச்சாவதாரம்) பர வியூக விபவங்கள் போலன்றிக் கண்ணாலே காணலாம்படி இருக்கும்.''[35]

என்று இந்த அவதாரத்தின் எளிமை பேசப்பெறுகின்றது. உபாயமாகப் பற்றுமிடத்தில் வேண்டப் பெருங் குணங்கள் வாத்சல்யம், சுவாமித்துவம், சௌசீல்யம், சௌலப்பியம் ஆகியவை. இவற்றுள் வாத்சல்யம் என்பது, கன்றினிடத்தில் பசு இருக்கும் இருப்பு. சுவாமித்துவம் என்பது உடையவனாயிருக்கும் இயல்பு. சௌசீல்யம் என்பது, உயர்ந்தவன் தாழ்ந்தவனோடு புரையறக் கலக்கை. சௌலப்பியம் என்பது, எளியனாயிருக்கும் இருப்பு. இந்தத் திருக் குணங்கள் ''இருட்டறையில் விளக்குப் போலே பிரகாசிப்பது இங்கே"[36] என்று குறிப்பிடுகின்றது ஸ்ரீவசன பூஷணம். இதனால்தான் பிரபந்நர்களின் தலைவரான நம்மாழ்வார் அர்ச்சாவதாரங்களில் இன்று மிகப் பெரும் புகழுடன் திகழும் திருவேங்கட முடையானிடம் சரண் புகுந்தார்.

> " 'அகல கில்லேன் இறையும்' என்று
> அலர்மேல் மங்கை உறைமார்பா!
> நிகரில் புகழாய்! உலகம் மூன்று
> உடையாய்! என்னை ஆள்வானே!

---

33. திருவாய். 3.3:1
34. ஸ்ரீவசனபூஷணம்—38.
35. முமுட்சுப்படி-140.
36. ஸ்ரீவசன பூஷணம்-40. இங்கே அர்ச்சாவதாரத்தில்.

நிகரில் அமரர் முனிக்கணங்கள்
விரும்பும் திருவேங் கடத்தானே!
புகல்ஒன் று இல்லா அடியேன்உன்
அடிக்கீழ் அமர்ந்து புகுந்தேனே."[37]

[இறை-மிகச் சிறியகாலம்]

மேற்குறிப்பிட்ட நான்கு திருக் குணங்களும் இறைவனைப் பற்றுகைக்குத் துணை செய்த நிலையின் விளக்கத்தை இப் பாசுரத்தில் காணலாம். 'நிகரில் புகழாய்' என்பதனால் "வாத்சல்யம்" என்ற திருக்குணமும், 'உலக மூன்றுடையாய்' என்பதனால் 'சுவாமித்துவம்' என்ற பெருங்குணமும், 'என்னையாள்வானே' என்பதனால் 'சௌசீல்யம்' என்ற மேன்மைக் குணமும், 'திருவேங்கடத்தானே' என்பதனால் சேதநன் தன் கண்களால் கண்டு பற்றுகைக்கு எளியனாக இருக்கும் 'சௌலப்பியம்' என்ற உயர்ந்த குணமும் விளக்கம் பெறுவதாக ஆன்றோர்கள் அருளிச் செய்துள்ளனர். இங்ஙனம், பிரபத்தி நெறியினைத் தெளிவாக எடுத்துரைத்து வற்புறுத்துவன ஆழ்வாரின் பாசுரங்கள். இவற்றைப் படித்துப் பயன் பெற்றுய்வது நம்மனோரின் தலையாய கடன்.

"செய்யதமிழ் மாலைகள்நாம் தெளிய ஓதித்
தெளியாத மறைநிலங்கள் தெளிகின்றோமே."[38]

[மறைநிலங்கள்-வேதபாகங்கள்]

37. திருவாய்.—6. 10:10.
38. தேசிகப் பிரபந்தம்—40.

# 9. தமிழ் இலக்கியம் கண்ட அறிவியல்

பன்னெடுங் காலமாகவே தமிழர்கள் நாகரிகத்தில் சிறப்புற்று விளங்கினர் என்பது வரலாற்று அறிஞர்கள் ஒப்புக் கொண்ட உண்மை. அறிவியற் கலைகள் அவர்களிடம் பயன் முறைக் கலைகளாக மிளிர்ந்தன என்பதற்குப் பல்வேறு சான்றுகள் உள்ளன. இன்று மேனாட்டார் 'சயன்ஸ்' (Science) என்று குறிப்பதைத் தான் நாம் அறிவியல் என்று வழங்குகின்றோம். 'சயன்ஸ்' என்ற சொல் 'அறிவு' (Knowledge) எனப் பொருள்படும் இலத்தீன் சொல்லினின்றும் தோன்றியது. மனிதன் வாழும் சூழ்நிலை, சுற்றியுள்ள உலகம், பிற அண்டங்கள் முதலிய வற்றின் தன்மைகளைத்தான் அறிவியற் கலைகள் உணர்த்துகின்றன. பண்டைத் தமிழர்கள் இன்று இருப்பன போன்ற அறிவியல் துறைகளைத் தனித்தனிக் கலைகளாக வளர்த்து வைத்திருந்தனர் என்பதற்குத் தக்க சான்றுகள் இல்லாது போயினும், அவர்கள் இக் கலைகளைப்பற்றி ஓரளவு அறிந்திருந்தனர் என்பதற்கும், இவை அவர்களது வாழ்வில் பயன் முறை அறிவியல் துறைகளாக (Applied sciences) மிளிர்ந்தன என்பதற்கும் பல்வேறு இலக்கியச் சான்றுகள் உள்ளன. இவற்றை ஈண்டுக் காண்போம்.

பண்டைத் தமிழர்கள் வானநூல், உயிரியல், இயற்பியல், (Physics) பொறியியல் முதலிய பல்வேறு துறைகளிலும் வல்லுநர்களாகத் திகழ்ந்தனர் என்பதற்கு இலக்கியச் சான்றுகள் உள்ளன. என்ன காரணத்தாலோ அவர்கள் இன்றுள்ளனபோல் அத் துறைகளைத் தனித்தனியாக வரையறை செய்து பாதுகாக்கவில்லை. ஒருகால்

அவ்வாறு வரையறுத்து வைத்திருந்து அவை அழிந்து பட்டிருத்தலும் கூடும். கடல் கோள், திக்கோள் முதலிய இயற்கை நியதிகட்கு அவை இரையாயிருத்தலும் கூடும். அஃது எங்ஙனமாயினும் அவர்கள் இத்துறைகளில் வல்லுநர்களாயிருந்தனர் என்பது மட்டிலும் ஒருதலை.

பண்டைய அறிவியலறிஞர்கள் : உறையூர் முதுக் கண்ணன் சாத்தனார் என்ற புலவர் அறிவியல் அறிஞர்கள் அக்காலத்தில் திகழ்ந்தனர் என்பதை,

> செஞ்ஞா யிற்றுச் செலவும்
> அஞ் ஞாயிற்றுப் பரிப்பும்
> பரிப்புச் சூழ்ந்தமண் டிலமும்
> வளிதிரிதரு திசையும்
> வறிது நிலைஇய காயமும் என்றிவை
> சென்றளந்து அறிந்தோர் போல என்றும்
> இனைத்து என்போரு முளரே."[1]

என்று குறிப்பிடுகின்றார். "செஞ்ஞாயிற்றினது வீதியும் அஞ் ஞாயிற்றினது இயக்கமும் அவ்வியக்கத்தாற் சூழப்படும் பார்வட்டமும், காற்றியங்கும் திக்கும் ஓர் ஆதாரமும் இன்றித் தானே நிற்கின்ற ஆகாயமும் என்று சொல்லப் பெற்ற இவற்றை ஆண்டாண்டு போய் அளந்தறிந்தவர்களைப் போல நாளும் இத்துணையளவை யுடையனவென்று சொல்லும் கல்வி யுடையோரும் உளர்"[1] என்ற புலவர் கூற்றில் இத்தகைய அறிஞர்கள் இருந்தமை பெறப்படுகின்றது.

வானநூலறிவு : பண்டையோர் வானநூல் துறையில் அறிவுமிக்கு விளங்கினர் என்பதைப் புறநானூறு போன்ற சங்க இலக்கியங்களால் அறியலாம். விண்ணில் மதி

1. புறம்—30 அடி. (1—7)

செல்லும் வழியாகிய வட்டத்தை இருபத்தேழு பிரிவு களாகப் பிரித்து அப்பிரிவுகளை அறிந்து கொள்ளும் அடையாளமாக "எறிகடல் ஏழின் மணல் அளவாக"[2] வுள்ள விண்மீண்களில் இருபத்தேழு விண்மீண் தொகுதி களைக் குறித்து அமைத்தனர் பண்டைய அறிஞர்கள். புறநானூற்றில் "மதிசேர் நாண்மீன்போல்"[3] என வரும் சொற்றொடருக்கு உரையாசிரியர் 'திங்களைச் சேர்ந்த நாளாகிய மீனை ஒப்ப' எனக் கூறும் உரையால் இதனை அறியலாம். கோள்களின் இயக்கத்தால் இயற்கை நிகழ்ச்சிகள் நடைபெறுகின்றன என்பதை அவர்கள் நன்கு அறிந்திருந்தனர். வெள்ளி என்பது ஒரு மழைக்கோள். இது தெற்கே விலகியிருப்பது மழை இல்லாமைக்கு அறிகுறி யாகும் என்பதை,

"வெள்ளி தென்புலத் துறைய விளைவயல்
பள்ளம் வாடிய பயனில் காலை"[4]

என்ற மன்னனார் பாட்டின் பகுதி சுட்டுகின்றது. இதைப் போலவே வால்வெள்ளி தோன்றுவதும், சனி மீன் புகைவதும், எரி கொள்ளி வீழ்தலும் தீக் குறிகளாகக் கொள்ளப் பெற்றிருந்தன. இவற்றை,

"மைம்மீன் புகையினுந் தூமம் தோன்றினும்
தென்திசை மருங்கில் வெள்ளி ஓடினும்
வயலகம் நிறையப் புதற்பூ மலர்"[5]

[மைம்மீன்-சனி : தூமம்-வால்மீன்.]

என்ற பாட்டின் பகுதியால் அறியலாம். இவற்றின் "சனி கரிய நிறமுடையனாதலின் மைம்மீன் என்றார்; சனி புகைதலாவது இடபம், சிங்கம், மீனம் இவற்றோடு மாறுபடுதல்; இவற்றுள் சனி தனக்குப் பகைவீடாகிய சிங்க

---

2.
3. புறம்—160- அடி-8
4. புறம்—388 அடி-(1—2)
5. புறம்—161 அடி-(1—3)

இராசியிற் புகின் உலகிற்குப் பெருந் தீங்கு விளைவிப்பான் என்பதை 'மகத்திற் புக்கதோர் சனி எனக் காணாய்' (தேவாரம் 7.54:9)...என்பவற்றான் உணர்க.[6] தூமம் புகைக் கொடி என்றும் கூறப்படும்; தூமகேது என்பதும் இதுவே; இவ் வட்டம், சிலை, நுட்பம், தூமம் என்னும் கரந்துறைக் கோள் நான்களுள் ஒன்று; இதன் தோற்றம் உலகிற்குப் பெருந் தீங்கு விளைக்கும் என்பர்" என்ற உரைப்பகுதி இதனை நன்கு விளக்குகின்றது.

"மிக்க வானுள் எரிதோன்றினும்
குளமீனோடு தாட்புகையினும்"[7]

என்ற அடிகளும், "எரி, குளமீன், தாள் என்பன வாள் மீன் விசேடங்கள்; இவை மூறையே தோன்றுதலும் புகைதலும் உலக வறுமைக்கு ஏதுக்கள்" என்ற இவற்றின் உரைப் பகுதியும் இதனை உணர்த்துகின்றன. இக் கருத்துகளையே இளங்கோ அடிகள் காவிரியின் சிறப்பைக் குறிப்பிடுமிடத்து,

"கரியவன் புகையினும் புகைக்கொடி தோன்றினும்
விரிகதிர் வெள்ளி தென்புலம் படரினும்"[8]

[கரியவன்-சனி; புகைக்கொடி-வால் மீன்]

என்று குறிப்பிடுவர்.

சங்கப் புலவர்களில் ஒரு சிலர் கணியர்களாகவும் இருந்தனர். கூடலூர்க்கிழார் என்ற புலவர் ஒரு கணி. அவர் வானத்தில் ஒரு விண்மீன் தீப் பரக்கக் காற்றால் பிதிர்ந்து கிளர்ந்து வீழ்ந்தது கண்டார். கார்த்திகை, அனுடம், உத்தரம், மிருகசீரிடம் முதலிய விண்மீன்களின்

6. விண்மீன்களுள் மகம், பூரம், உத்தரத்தின் முதற் பாகம் சிங்க இராசிக்கு உரியவை.
7. புறம்—395 அடி. (34-35)
8. சிலப்—நாடுகாண். அடி (102-103)

நிலையினைக் கண்டார். விண்மீன் விழுந்ததனால் அரசனுக்குக் கேடு வரும் என அஞ்சினார். இவர் அஞ்சிய படியே ஏழாம் நாள் கோச்சேரமான் யானைக்கட்சேய் மாந்தரஞ் சேரல் இரும்பொறை என்ற அரசன் விண்ணாடு புக்கான். இதனைப் புறநானூறு குறிப்பிடுகின்றது.[9]

வெட்டவெளியும் அதனுள் அடங்கியிருக்கும் அண்டங் கள் யாவும் சேர்ந்ததுதான் அகிலம் (Universe). கோடிக் கணக்கான விண்மீன் மண்டலங்களும், அவற்றினின்றும் விடுபட்ட தனித்தனி மண்டலங்களும், வால்மீன்களும் (Comets), விண்கற்களும் (Meteorites) எண்ணற்றவை கதிரவ மண்டலத்தைச் சுற்றிச் சூழன்று கொண்டுள்ளன. இவற்றின் பிறப்பு, மூப்பு, சாக்காடு இவைபற்றிய செய்திகளை இன்றைய வானநூல் வல்லுநர்கள் அறிந்து வெளியிட்டுள்ளனர். மணிவாசகப் பெருமான் இந்த அகிலத்தைப்பற்றி,

"அண்டப் பகுதியின் உண்டைப் பிறக்கம்
அளப்பருந் தன்மை வளப்பெருங் காட்சி
ஒன்றனுக் கொன்று நின்றெழில் பகரின்
நூற்றொரு கோடியின் மேற்பட விரிந்தன"[10]

என்று கூறியுள்ளார். இவ்வுலகிலுள்ள 92 தனிமங்களின் அணுக்களும் தம்மொடுதாமும் பிறிதுமாகச் சேர்ந்து அணுத் திரளைகள் ஆகிய திரட்சியே அண்டங்கள் என்பதும் அறிவியலார் ஆராய்ந்து கண்ட மெய்மையாகும். இந்த அறிவியல்உண்மையினையே கவிஞர்பரஞ்சோதியார்,

---

9. புறம்—229.
10. திருவாசகம்—திருவண்டப்பகுதி அடி. (1—4)

"அண்டங்கள் எல்லாம் அணுவாக
அணுக்கள் எல்லாம்
அண்டங்க ளாகப் பெரிதாய்ச்
சிறிதாயி னானும்
அண்டங்கள் உள்ளும் புறம்பும்
கரியாயி னானும்
அண்டங்கள் ஈன்றாள் துணைஎன்பர்
அறிந்த நல்லோர்"[11]

என்று அநுபவ இயலாகக் கூறியுள்ளமை கண்டு மகிழத் தக்கது. இன்னும் கம்பராமாயணத்தில் கதிரவன் மகர ரேகைக்குத் தெற்கே செல்லுவதில்லை என்பது மிகச் சமத்காரமாகக் கூறப்பெற்றுள்ளது. இது பாடல்:

"முன்னம் யாவரும் இராவணன்
முனியும்என்(று) எண்ணி
பொன்னின் மாநகர் மீச்செலான்
கதிர்எனப் புகல்வார்;
கன்னி ஆரையின் ஒளியினில்
கண்வழுக்(கு) உறுதல்
உன்னி நாடொறும் விலங்கினன்
போதலை உணரார்"[12]

[முனியும்-கோபிக்கும்; கதிர்-பகலவன்; ஆரை-மதில்; விலங்கினன்-விலகிச் சென்றான்.]

பகலவன் மகரரேகைக்குத் தெற்கேயும், கடக ரேகைக்கு வடக்கேயும் நகர்வதில்லை என்பது வானநூல் மெய்ம்மையாகும். இலங்கை மகர ரேகைக்குத் தெற்கேயுள்ளது என்பதை நாம் அறிவோம். 'இராவணன் சினத்திற்கு

11. திருவிளையாடல் புரா. பாயிரம்-6.
12. கம்பரா. சுந்தர. ஊர்தேடு. 21.

ஆளாகவேண்டும் என்று எண்ணிக் கதிரவன் இலங்கைமேல் செல்வதில்லை என்று மக்கள் கூறிவருவது தவறு; இலங்கையின் பொன்மயமான மதிலின் ஒளியினால் கண் கூசுதல் பற்றியே இவ்வாறு விலகிச் செல்லுகின்றான்' என்பதே கவிஞனின் கருத்து. இங்கு வானநூல்பற்றிய மெய்மையைக் கற்பனை நயம் தோன்றக் கூறியிருப்பது எண்ணி மகிழத்தக்கது. பேராசிரியர் ஐன்ஸ்டைன் இந்த அகிலத்தின் வெளி வளர்ந்துள்ளது என்றும், அது விரிந்து கொண்டே போகின்றது என்றும் கூறுவர். ஓர் இரப்பர் பலூன்மேல் பல புள்ளிகளை வரைந்து அப்பலூனை ஊதினால் அது பெரிதாக ஆக ஆக இப்புள்ளிகளின் இடையிட்ட தூரமும் அகன்று விடுகின்றது. இதைப்போல் விண்வெளியும் விண்மீன் மண்டலங்களை ஏந்திக் கொண்டு அகன்று கொண்டே போகின்றது என்பது இன்றைய அறிவியலார் கண்ட முடிவு. இவை போன்ற பல வானநூற் கருத்துகளைத் தமிழ் இலக்கியங்களில் காணலாம்.

பொறி இயல்: பண்டைத் தமிழர்கள் பொறியியலிலும் வல்லுநர்களாக இருந்திருத்தல் வேண்டும் என்று ஊகிக்க இடம் உண்டு. சிந்தாமணியில் குறிப்பிடப்பெறும் விசயை இவர்ந்து சென்ற மயிற்பொறியும், பெருங்கதையில் குறிப்பிடப்பெறும் யூகியால் சமைக்கப்பெற்ற இயந்திர யானையும், புறநானூறு கூறும் 'வலவனேவா வான ஊர்தியும்' இராமாயணத்தில் காட்டப்பெறும் புட்பக விமானமும் பொறி இயல் அறிவினால் அமைக்கப்பெற்ற சாதனங்கள் என்று கருதலாம். அமைக்கப் பெறாவிடினும், அமைக்கலாம் என்ற அறிவியல் கற்பனையாவது எழுந்திருக்கவேண்டும் என்று கருதவாவது இடம் உண்டல்லவா! இன்று பல்வேறு துறைகளில் பொறியியல் அறிவு வளர்ந்துள்ளதைப்போல் அன்றைய பொறியியல் அறிவு வளர்ந்திருந்ததா என்பதை எடுத்துக் காட்டற்குரிய சான்றுகள்

ஒன்றும் கிடைக்கவில்லை. இதனை இலக்கியங்களுள் காணப்பெறும் ஒரு சில குறிப்புகளால் ஊகிக்கலாமேயன்றி அறுதியிட்டு உரைத்தற்கில்லை.

இன்று அமெரிக்கா போன்ற மேனாடுகளிலுள்ள பெரிய நகரங்களில் விண்ணை முட்டும் பல்லடுக்கு மாளிகைகள் கட்டப்பெற்றுள்ளன என்று அறிகின்றோம். சென்னை போன்ற நகரங்களில் பெரிய கட்டடங்களைப் பார்க்கும் நமக்கு இத்தகைய மாளிகைகளின் இருப்பை ஒருவாறு ஊகிக்கலாம். இத்தகைய மாளிகைகள் இலங்கை மாநகரில் திகழ்ந்தன என்பதைக் கம்பன் காட்டுவன்.

> "பொன்கொண்டுஇழைத்துமணியைக்கொடு பொதிந்த
> மின்கொண்டு இழைத்த வெயிலைக்கொடு சமைத்த
> என்கொண்டு இயற்றிய எனத்தெரி கிலாத
> வன்கொண்டல் தாவி மதிமுட்டுவன மாடம்."[13]

இயல்பில் பொன்னால் செய்யப்பெற்று மணிகள் பதிக்கப் பெற்றுள்ள முகில் மண்டலத்திலும் மேலாக உயர்ந்து திங்கள் மண்டலத்தையும் எட்டும் மாடமாளிகைகள் 'மின்கொண்டு இழைத்தனவோ? வெயிலைக் கொண்டு சமைத்தனவோ? இன்னபடிதான் என்று அறுதியிட்டுச் சொல்ல முடியாமல் திகைக்கும்படி இருந்தன' என்று கவிஞன் கூறும்பொழுது அக்காலத்துக் கட்டடப் பேரறிஞர்களின் திறமையை ஒருவாறு விளக்குகின்றது என்பதனை அறிகின்றோம்.

உயிரியல்: இன்று டார்வின் போன்ற அறிஞர்களால் குறிப்பிடப் பெறுவது கூர்தல் அறம் (Theory of evolution) என்ற கொள்கையாகும். இக் கொள்கை பற்றி இன்னும்

---

13. கம்பரா. சுந்தர, ஊர்தேடு. 1.

அறிவியலறிஞர்களிடையே மாறுபட்ட கருத்துகள் இல்லாமல் இல்லை. இத்தகைய கொள்கை போன்றதொரு கருத்தினை,

"புல்லாகிப் பூடாய்ப் புழுவாய் மரமாகிப்
பல்விருக மாகிப் பறவையாய்ப் பாம்பாகிக்
கல்லாய் மனிதராய்ப் பேயாய்க் கணங்களாய்
வல்லசுர ராகி முனிவராய்த் தேவராய்ச்
செல்லாஅ நின்றவித் தாவர சங்கமத்துள்
எல்லாப் பிறப்பும் பிறந்து இளைத்தேன்."[14]

என்று மணிவாசகப் பெருமானும் கூறுவர்.

வானியியல்: வானியியல் (Meteorology) பற்றிய ஒரு சில கருத்துகளையும் இலக்கியங்களில் காணலாம். மேலே செல்லச் செல்ல காற்று இலேசாக இருக்கும் என்பது விண்வெளி ஆராய்ச்சியால் பெறப்படும் உண்மையாகும். கடல் மட்ட அளவில் பத்து மைல் உயரத்தில் காற்று பத்தில் ஒரு பங்காகிவிடுகின்றது என்றும், இருபது மைல் உயரத்தில் அது கிட்டத்தட்ட நூறில் ஒரு பங்காகக் குறைந்து விடுகின்றது என்றும், முப்பது மைல் உயரத்தில் ஆயிரத்தில் ஒரு பங்காகி விடுகின்றது என்றும் இந்த ஆராய்ச்சியால் அறிகின்றோம். இத்தகைய ஓர் உண்மையைக் கம்பன் மிகச் சமத்காரமாகக் கூறுவன். இலங்கையிலுள்ள மாளிகைகள் தேவர் உலகை எட்டும்படியாக உள்ளன. மேருவையும் வருத்தக் கூடிய பேராற்றல் வாய்ந்த காற்று அந்த உயரத்தில் தென்றலாக வீசுகின்றதாம்.

"நாகா லயங்களொடு நாகர்உல கும்தம்
பாகார் மருங்குதுயில் என்னஉயர் பண்ப;

14. திருவாசகம்—சிவபுராணம் அடி (25—31)

ஆகாயம் அஞ்சஅகன் மேருவை அணுக்கு
மாகால வழங்குசிறு தென்றல்வர கின்ற.''[15]

[அணுக்குதல் - வருத்துதல்; மாகால் - பெருமையை உடைய காற்று; வழங்கு-இனிதாக அளிக்கப் பெறுகின்ற.]

என்பது கம்பன் வாக்கு. மிக்க வலிமையையுடைய காற்றுக் கடவுளும் இராவணனிடத்து அச்சத்தால் அடங்கித் தென்றலாக இனிது வீசப் பெற்றிருந்தனன் என்று கவி சமத்காரமாகக் கூறுவதை அறிக. அறிவியல் கருத்து ஈண்டு மிக நயமாகக் கூறப்பெற்றுள்ளது.

மருத்துவ இயல்: தமிழ் இலக்கியத்தில் மருத்துவ இயல் பற்றிய செய்திகளையும் சிகிச்சை முறைகளையும் காணலாம். திருக்குறளிலுள்ள 'மருந்து' என்ற அதிகாரத்தில் நோய்கள் வருவதன் காரணங்களையும் அது வராது தடுக்கும் முறைகளையும், அது வந்தால் தவிர்க்கும் வழிவகைகளையும்பற்றிய செய்திகள் தரப்பெறுகின்றன.

"நோய்நாடி நோய்முதல் நாடி அதுதணிக்கும்
வாய்நாடி வாய்ப்பச் செயல்"[16]

என்பது வள்ளுவப் பெருமானின் கூற்று. நோய் வருவதன் காரணத்தையும், நோய் இன்னதென்பதையும் ஐயமறத் துணிந்து மருந்து செய்தல், உதிரங்களைதல், அறுத்தல், சுடுதல் முதலிய முறைகளை மேற்கொண்டு அந்நோயைப் போக்க வேண்டும் என்பது பண்டைய மருத்துவ முறையாகும். இன்றைய மருத்துவ முறையும் இதனையொட்டியே உள்ளது. இங்ஙனமே, நோயுற்றவன் வயது முதலியற்றையும் அவனுடைய வேதனை, வலி முதலியவற்றையும், காலவேறுபாடுகள் முதலியவற்றையும் நோக்கிச் சிகிச்சை செய்தல்வேண்டும். இதனை,

15. கம்பரா. சுந்தர-ஊர்தேடு-2.
16. குறள்—948

"உற்றான் அளவும் பிணிஅளவும் காலமும்
கற்றான் கருதிச் செயல்."[17]

என்று குறிப்பிடுவர் வள்ளுவர். இங்ஙனம் பல கருத்துகள் இவண் கூறப்பெறுகின்றன.

கண் முதலிய நுட்பமான பகுதிகளில் இரும்புத் தூள் முதலியவை புகுந்து கொண்டால் காந்தத்தைக் கொண்டு இக் காலத்தில் சிகிச்சை செய்கின்றனர். பண்டையோரும் இம் முறையை அறிந்திருந்தனர் என்பதைக் கம்பன் காட்டுகின்றான். இராவண வதம் முடிந்த பிறகு தயரதன் உம்பருலகிலிருந்து நில உலகிற்கு வந்து இராமனுடன் உரையாடும்பொழுது தன் மகிழ்ச்சியைத் தெரிவிக்கின்றான். இதனைக் கவிஞர்,

"அன்று கேகயன் மகள்கொண்ட
வரமெனும் அயில்வேல்
இன்று காறும்என் இதயத்தின்
இடைநின்ற தென்னைக்
கொன்று நீங்கலது இப்பொழுது
அகன்றதுஉன் குலப்பூண்
மன்றல் ஆகமாம் காந்தமா
மணியின்று வாங்க."[18]

[அயில்வேல்-கூரியவேல்; மன்றல்-மணம்; ஆகம்-மார்பு]

என்று குறிப்பிடுகின்றான். அன்று கைகேயி தன் இதயத்தில் பாய்ச்சின வரம் என்னும் கூரிய வேல், இன்று இராமனைத் தழுவியதனால் அவன் மார்பாகிய காந்தம் அதனை வாங்கி விட்டது என்று கூறுவதில் நவீன சிகிச்சை முறையின் குறிப்பைக் கண்டு மகிழ்க.

---

17. குறள்—946.
18. கம்பரா. யுத்த. மீட்சி. 118

சருவுயிர்த்த மங்கையர் குழந்தையை நீராட்டி மருந்தூட்டி வளர்க்கும் திறம் சிந்தாமணியில் காட்டப் பெற்றுள்ளது.

"காடியாட்டித் தராய்ச் சாறும்
கன்னல் மணியும் நறுநெய்யும்
கூடச் செம்பொன் கொளத்தேய்த்துக்
கொண்டு நாளும் வாயுறீஇப்
பாடற் கினிய பகுவாயும்
கண்ணும் பெருக உகிர்உறுத்தித்
தேடித் தீந்தேன் திப்பிலிதேய்த்(து)
அண்ணா உறிஞ்சி மூக்குஉயர்த்தார்."[19]

[காடி-கஞ்சி; தராய்ச்சாறு-பிரமிச்சாறு; கன்னல் மணி-கருப்புக்கட்டி; வாயுறீஇ-வாயில் உறுத்தி; பெருக-பெரிதாகும்படி; உகிர் உறுத்தி-நகத்தால் அகலமாகும்படி செய்து; அண்ணா-உள் நாக்கு]

இப் பாடலில் குறிப்பிடப்பெறும் செய்திகளை எண்ணி எண்ணி உணர்க. நவீன மருத்துவர்களும் அறியாத எவ்வளவு செய்திகள் இதில் காட்டப் பெறுகின்றன!

அறிவியல் செய்திகள் யாவும் அறிவினைச் சார்ந்தவை. இலக்கியச் செய்திகள் யாவும் உணர்வை அடிப்படையாகக் கொண்டவை. அறிவியல்பற்றிய தனி நூல்கள் தோன்றியிருந்து அவை நமக்குக் கிடைக்குமாயின் பல்வேறு நுட்பமான அறிவியல் துறை பற்றிய செய்திகளை நாம் அறிந்து கொள்ளலாம். இத்தகைய நூல்கள் நமக்கு இதுகாறும் கிடைக்கவில்லை. உணர்வை அடிப்படையாகக் கொண்ட இலக்கிய நூல்களில் அறிவுபற்றிய செய்திகளை

19. சீவகசிந். 2712.

அதிகமாக நுழைத்தற்கு வாய்ப்பில்லை. எனவே, மேற் காட்டிய ஒரு சில சான்றுகளைக்கொண்டு பண்டைத் தமிழர்களின் அறிவியல் அறிவை ஒருவாறு ஊகித்து உணர்ந்து கொள்வதே இன்றைய தமிழர்களின் கடமையாகும். இதுவே தமிழ் இலக்கியம் கண்ட அறிவியலாகும்.

# 10. அழுகையும் ஆன்மிக வாழ்வும்*

பிறந்தவுடன் குழந்தை அழுகிறது. அஃது அழுதால் தான் மக்கட்பேறு பெற்றவர்கட்கு மட்டற்ற மகிழ்ச்சி உண்டாகும். மக்கட்பேறு நேரிட்ட இல்லங்கட்கு விசாரிக்க வரும் உறவினர்கள், அன்பர்கள், 'குழந்தை அழுததா?' என்று கேட்பதை நாம் நன்கு அறிவோம். இதன் பொருள் என்ன? சீதள அலமாரியைவிட எத்தனையோ மடங்கு உயர்ந்த நிலையிலுள்ள தாயின் கருவறையில் எல்லா நலன் களும் பெற்றுப் பத்துத் திங்கள் பாங்குடன் வளர்ந்துவந்த குழந்தை புதியதோர் உலகிற்கு—இந்தக் கர்மபூமிக்கு—வருகின்றது. தாயின் கருவறைக்குள் இருக்கும்போது அதற்கு வேண்டிய உண்ணும் சோறு, பருகும் நீர் முதலிய அனைத்தையும் அன்னையிடமிருந்தே பெற்றுவிடுகின்றது. அங்கு அதற்கு ஒரு குறையும் இல்லை. இங்ஙனம் 'செல்வக் களஞ்சியம்போல்' சேம அறையில் எல்லாப் பாதுகாப்புடன் இருக்கும் குழந்தை, தானே அனைத்தையும் தேடிக்கொள்ள வேண்டிய புதிய உலகிற்கு வருங்கால் அழாமல் என்ன செய்யும்? இந்த 'அழுகைமொழிதான்' குழந்தை தானாகக் கற்றுக்கொண்ட ஒரே மொழியாகும். இந்த ஒரே மொழியைக் கொண்டே குழந்தை தன் பெற்றோரிட மிருந்து சில திங்கள் காலம் அனைத்தையும் பெற்று வாழ்ந்து வளர்கின்றது.

பேருந்து ஓட்டுநர் ஒலிப்பானைக் (Horn) கொண்டு பல்வேறு கருத்துகளைப் புலப்படுத்துவதைச் சாலை

---

* பெங்களூர்த் தமிழ்ச் சங்க வெள்ளி விழா மலரில் (1974) வெளிவந்தது.

யில் செல்வோர் உணர்ந்துகொண்டு செயல்படுவதைப் போல், பெற்றோரும், குழந்தைப் பராமரிப்பில் பங்கு கொள்ளும் மற்றோரும் குழந்தை தன் அழுகை ஒலியால் புலப்படுத்துவதைப் புரிந்துகொண்டு அதற்கு வேண்டிய நலன்களை நல்கி, அதன் தேவைகளை நிறைவு செய்கின்றனர். பேருந்து ஓட்டுநர் ஒலிப்பான்மூலம் தரும் ஒரே ஒலிக்குப் பல பொருள்கள் உண்டு. நடுச்சாலையில் நடந்து செல்வோர் ஒலியைக் கேட்டு "ஓரமாகப் போ" என்பதாக உணர்ந்து ஒதுங்கி ஓரமாகச் செல்கின்றனர். முன்னால் செல்லும் வண்டி ஓட்டுநர்கள் 'முன்னால் செல்வதற்கு இடங் கொடு' என்பதாக உணர்ந்து இடப்புறமாக ஒதுங்கி வண்டி முன் செல்வதற்கு இடம் தருகின்றனர். விளையாட்டில் மனம் ஒன்றிப் பட்டம் விடும் சிறுவர்களும், பம்பரம் ஆடும் பாலர்களும் ஒலிப்பான் ஒலியைக் கேட்டுப் 'பேருந்து வருகிறது' என்பதாக உணர்ந்து அதற்கு வழி விடுகின்றனர்; தம்மையும் ஆபத்தினின்றுக் காத்துக்கொள்கின்றனர். இங்ஙனமே குழந்தையும் 'பால் நினைந்தூட்டாத தாய்க்குத்' தனக்குப் பால்வேண்டும் என்பதை அழுகையால் புலப்படுத்துகின்றது. சிறுநீர்விட்டு ஆடைகளை நனைத்துக்கொண்டு குளிரினாலும், பிற அசௌகர்யங்களாலும் துன்பப்படும் குழந்தை அழுகின்றது. அருகில் இருப்போர் அழுகையைக்கேட்டு ஆடைகளை மாற்றி அதன் தேவையை நிறைவு செய்கின்றனர். சில சமயம் குழந்தையைப் பெற்ற அன்னை குழந்தையைச் சிறிது நேரம் மறந்து, அக்கம்பக்கத்தாரிடம் 'ஸ்வாரஸ்யமாக' அரட்டை அடித்துக் கொண்டிருக்கும்போது 'தனிமையால்' வாடும் குழந்தை 'வீர், வீர்' என்று கத்துகின்றது. அன்னை வந்து அதனை அணைத்துக்கொண்டு படுத்ததும், அழுகையை நிறுத்தி ஆனந்தமாக உறங்கத் தொடங்குகின்றது குழந்தை.

பிறந்த குழந்தைக்கு அழ வேண்டிய இன்றியமை யாமையும் உண்டு. தாயின் கருவறையிலிருக்குங்கால் குழந்தை உயிர்ப்பதில்லை. அன்னையே அதனைச் செய்து அதற்கு வேண்டிய உயிர்க்காற்றை (Oxygen) நல்குகின்றாள். ஆதலால் கருவறைவாழ்வில் குழந்தையின் நுரையீரல் (Lungs) செயற்படுவதில்லை. குழந்தை கருவறையினின்றும் வெளிப்போந்ததும், அஃது அழுவதால் நுரையீரல் செயற்படத் தொடங்குகின்றது. பிறந்தவுடன் அஃது அழாவிடில் மருத்துவப் பெண் அதனைக் கிள்ளியாவது அழ வைக்கின்றாள்; அதன் நுரையீரலைச் செயற்படச் செய்கின்றாள். இந்த உண்மைதான் 'குழந்தை அழுததா?' என்ற வினாவில் அடங்கியுள்ளது. 'அழுத பிள்ளை பால்குடிக்கும்' என்ற பொன்மொழியில் அடங்கிக் கிடக்கும் உண்மையும் இதுதான். 'பால் குடிக்கும்' என்பது ஒரு மரபுத் தொடர்; 'பிழைக்கும்' என்பது இதன் பொருள். இங்ஙனம் பிறர் மகிழ அழுது பிழைத்த குழந்தை, தானாக அறிந்த 'அழுதல்' மொழியைத் தன் வாழ்வுக்குப் பயன்படுத்திக் கொள்வதை குழந்தை வாழ்வில் காண்கின்றோம்.

இந்த உலக வாழ்விலும் பலருக்கு இந்த அழுதல் ஒரு கொள்கையாக அமைந்து விடுகின்றது. அழுதலையே ஒரு கொள்கையாக அமைத்துக்கொண்டு சண்டித்தனம் செய்து கல்நெஞ்சக் கணவன்மார்களையும் மனம் நெகிழச் செய்து தம் காரியத்தை முற்றுவித்துக்கொள்ளும் மனைவிமார்களையும் நாம் காணத்தான் செய்கின்றோம். இந்தப் பேருண்மையைக் கையாண்டு கவிஞர்களும் தம் கவிதைகளிலும் காவியங்களிலும் சிறந்த சொல்லோவியத்தையும், காவிய மாந்தர்களையும் படைக்கின்றனர். அகநானூற்றில் ஒரு பாடல். தலைவியின் உடன்பாடு பெறாமல் பிரியும் குறிப்பொடு புறப்படுகின்றான் தலைமகன். அவனை

வழிபனுப்ப வருவாள் போல் வெளியே வருகின்றாள் தலைமகள். ஆகத்துப் புதல்வனை ஒடுக்கியிருக்கின்றாள். 'அறத்தாறு அன்று என மொழிந்த தொன்றுபடு கிளவி, அன்னவாக என்னுநள் போல' வருகின்றாள். பிரிவின் துன்பத்தை அடக்க முயல்கின்றாள். அடக்க முயன்றதன் வழியே பெருகிப்பெருகி வளரும் துன்பத்தை அவளால் பொறுக்க முடியவில்லை. அழுகையை அடக்க முயன்ற தலைவியின் நெஞ்சம் குமுறி நிற்கின்றது. ஆகத்திருந்த புதல்வனுடைய உச்சியை மோந்து நெட்டுயிர்ப்பு விடுகின்றாள். அப்புதல்வனின் முடியிலிருந்த செங்கழுநீர் மாலை, அவளுடைய அழற்கொழுந்து போன்ற மூச்சுக் காற்றுப் பட்டதால் வாடிக் கரிந்து போகின்றது. தலைவன் இதனைக் காண்கின்றான்; அழுகை நிறைந்த உள்ளம் புழுங்கி வருகின்ற அவளுடைய வருத்தத்தை உணர்கின்றான். உடனுறையும்போதே இவ்வாறு புழுங்குகின்றவள் தான் பிரிந்தால் என்னாவாளோ எனக் கருதித் தன் செலவினைத் தவிர்க்கின்றான்.

"முன்னங் காட்டி முகத்தின் உரையா
ஓவச் செய்தியின் ஒன்றுநினைந் தொற்றி
பாவை மாய்த்த பனிநீர் நோக்கமொடு
ஆகத் தொடுக்கிய புதல்வன் புன்றலைத்
தூநீர் பயந்த துணையமை பிணையல்
மோயினள் உயிர்த்த காலை மாமலர்
மணியுரு விழந்த அணியழி தோற்றம்
கண்டே கடிந்தனம் செலவே."[1]

[முன்னம்-குறிப்பு; ஓவச்செய்தி-ஓவியம் உணர்த்துவது; ஒன்று நினைந்து-உடன்படாமையை நினைந்து; பாவை-கண்மணி; மாய்த்த-மறைத்த; ஆகம்-மார்பு; பயந்த-தந்த; பிணையல்-மாலை; மோயினள்-மோந்து; மணியுரு-பவளம்

1. அகம்-5

போலும் உரு; அணியழி தோற்றம்-பொலிவற்ற காட்சி; கடிந்தனம்-தவிர்ந்தோம்; செலவு-பயணம்.]

என்ற பாடற்பகுதி இதனை விளக்குகின்றது. தலைவியின் அழுகையை அடக்கும் முயற்சியாலேயே தலைவன் தன் பயணத்தை நிறுத்திக்கொள்கின்றான்; தலைவியும் தன் கருத்தினை நிறைவேற்றிக்கொள்கின்றாள். அறுபதினா யிரம் ஆண்டு அரசாண்டு பெரும்புகழ் எய்திய தசரதனிடம் கைகேயி அழுதே தன் எண்ணத்தினை முற்றுவித்துக் கொள்ளும் செயலைக் கம்பநாடன் காட்டுவதை நாம் நன்கு அறிவோம். 'மாகமும் நாகமும் மண்ணும் வென்ற வாளான்' கைகேயியின் அழுகைக்குத் தோற்றுவிடுவதைக் காண்கின்றோம். இங்ஙனம் உலக வாழ்வில் 'அழுகை' புரியும் அற்புதத்தை அன்றாட நிகழ்ச்சிகளாலும், கவிஞர்கள் சித்திரித்துக்காட்டும் நிகழ்ச்சிகளாலும் அறி கின்றோம்.

இங்ஙனம் உலக வாழ்க்கைக்குப் பெருந்துணையாக இருக்கும் அழுகை ஆன்மிக வாழ்க்கைக்கும் பெருவழியாக அமைவதை அருட்பெருஞ்செல்வர்கள் நமக்குக் காட்டி யுள்ளனர். நூல் வழியாகக் கற்றுணர்ந்த உண்மைகளும் ஆன்ம நெறியில் உய்ப்பதற்குத் தவறும்பொழுது இந்த அழுகை கைகொடுத்து உதவுவதை விளக்கியுள்ளனர். அழுகையின் உறைப்பிற்கேற்ப ஆண்டவன் மேல் தம் பேரவா இருப்பதைப் புலப்படுத்தியுள்ளனர். ஆழ்வார்கள் அருளியுள்ள திருப்பாசுரங்களிலும், நாயன்மார்கள் திருவாய் மலர்ந்துள்ள திருப்பாடல்களிலும் இதற்குச் சான்றுகளைக் காணலாம்.

மணிவாசகப் பெருமான்,

உள்ளந்தாள் நின்றுச்சி அளவும் நெஞ்சாய்
உருகாதால் உடம்பெல்லாம் கண்ணாய் அண்ணா

வெள்ளந்தான் பாயாதால் நெஞ்சம் கல்லாம்
கண்ணிணையும் மரமாம்தீ வினையி னேற்கே.[2]

என்று நெஞ்சுருகி அழுவதைக் காண்க. தாயுமான அடிகளும் அழுகையைக் குறித்துப் பல இடங்களில் பேசுகின்றார். 'கரைந்து கரைந்துருகிக் கண்ணருவி காட்ட, விரைந்து வரும் ஆனந்தமே'[3] என்றும், 'கரைந்து கரைந்துருகக் கண்ணீர் ஆறாக, விரைந்தே நிற்விகற்பம் எய்தி'[4] என்றும் கூறியிருப்பது காண்க. மேலும்,

என்புருகி நெஞ்சம் இளகிக் கரைந்துகரைந்து
அன்புருவாய் நிற்க அலந்தேன் பராபரமே![5]

என்றும் நெஞ்சுருகிப் பேசுவர்.

திருமங்கையாழ்வார் தன்னுடைய வாழ்நாட்களிம் பெரும்பகுதி கொன்னே கழிந்தமைக்குக் கழிவிரக்கல் கொண்டு புலம்புகின்றார்.

"ஊமனார் கண்ட கனவிலும் பழுதுஆய்
ஒழிந்தன கழிந்தஅந் நாட்கள்"[6]

என்பது அவருடைய திருவாக்கு. ஊமையன் ஒருவன் கனாக்கண்டால் அதனை அவன் ஒருவரிடம் வாய்விட்டுச் சொல்லி மகிழ முடியாது. ஆகவே, ஊமையன கனவுகள் பழுதேயாகும். ஊமன் ஒருவன் தன் கனவை வாய்விட்டுச் சொல்ல முடியாமற் போனாலும், தன் நெஞ்சாவது நினைந்திருந்து மகிழ்தல் கூடும். அங்ஙனம் தான் தனக்குள்ளேயே மகிழக்கூடிய விஷயமும் ஒன்றில்லாமையால், ஊமன் கண்ட கனவைவிடத் தன் நாட்கள் வீணாகக் கழிந்தமைக்கு அங்கலாய்க்கின்றார் ஆழ்வார். கடந்த

2. திருவா. திருச்சதகம்-21
3. தாயு. பாடல். 497
4. தாயு. பாடல். 498
5. தாயு. பாடல். 656
6. பெரி. திரு. 1.1:3

காலங்களில் ஆற்றின் வழியாகப் பாய்ந்து சென்று ஆழியில் கலந்த நீரை அளவிட்டுக் கூறமுடியாது. அங்ஙனமே, தன் வாழ்நாளின் பெரும் பகுதி வீணாகக் கழிந்துவிட்டதே என்று சோக உணர்ச்சியுடன் அழுகின்றார். தான் அன்று திருக்கோவலூரில் கண்ட எம்பெருமானின் திருவடிகளைத் தொழுதவாறு கடந்த காலத்தில் செய்ய முடியவில்லையே என்று பரிதபித்துப் பேசுகின்றார் பொய்கையாழ்வார்.

"பழுதே பலகாலும்
போயினவென்று அஞ்சி
அழுதேன்."[7]

என்பது அவரது திருமொழி.

ஆழ்வார்களின் தலைவரான நம்மாழ்வார் தனக்கு அறிவு மலராத காலத்தில் இராமபிரானைத் தோத்திரம் செய்யாது போனமைக்கு இரங்கி அழுகின்றார்.

"தெரிந்துணர் வொன்(று) இன்மையால்
தீவினையேன் வாளா
இருந்தொழிந்தேன் கீழ்நாட்கள்
எல்லாம்."[8]

என்பது அவரது திருவாக்கு. இந்தத் திருவாக்கினை, 'உணர்வு இன்மையால், உணர்வு ஒன்றின்மையால், தெரிந்து உணர்வு ஒன்றின்மையால்' என்று பிரித்துப் பொருள் காணல் வேண்டும். 'உடல் வேறு ஆன்மா வேறு' என்ற ஞானமில்லாமையைக் கருதி 'உணர்வு இன்மையால்' என்றார். 'ஆன்மா எம்பெருமானுக்கு அடிமைப்பட்ட 'பொருள்' என்கின்ற ஞானமில்லாமையை நினைந்து உணர்வு ஒன்று இன்மையால்' என்றார். 'பகவானுக்கு அடிமை என்ற கொள்கைக்கு எல்லை நிலம் பாகவ

7. முதல் திரு. 16
8. பெரி. திருவந். 82

தற்கு அடிமை என்ற கொள்கை' என்கின்ற ஞான மில்லாமையைத் தெரிந்து, 'தெரிந்து உணர்வு ஒன்று இன்மையால்' என்றார். இந்த உணர்வு நிலைகளின்மை யால் தன்னைப் 'பாவியேன்' என்று சொல்லிக் கொள் கின்றார் ஆழ்வார்.

இந்த ஆழ்வாரின் திருவாய்மொழி ஆயிரமும் இறைவன் திருவடிகளில் கைங்கரியம் புரிய வேண்டும் என்ற பேரவாவினைப் பல்வேறு நிலைகளில் வெளியிடும் அழுகைத் திருப்பாசுரங்களாகும்.

"செடியார் ஆக்கை அடியாரைச்
சேர்தல் தீர்க்கும் திருமாலை
அடியேன் காண்பான் அலற்றுவன்."[9]

[அலற்றுவன்-கூவுகின்றேன்]

என்பது அத்தகைய அழுகையைக் காட்டும் பாசுரப் பகுதி. சம்சாரமாகின்ற பெருங்காடு நிறைந்த சரீர சம்பந்தத்தைத் தவிர்த்துத் தருகின்ற எம்பெருமானைக் காணும்பொருட்டு ஆழ்வார் கவல்வதைப் பாடல் காட்டு கின்றது. இங்குச் 'சம்சாரம்' என்பது பிறவித்தொடர் கள் நிறைந்த இவ்வுலக வாழ்க்கை. இன்னொரு பாசு ரத்தில்,

"கூவிக்கூவிக் கொடுவினைத்
தூற்றுள் நின்று
பாவியேன் பலகாலம்
வழிதிகைத் தலமர்கின்றேன்."[10]

[தூறு-புதர்; அலமருதல்-வருந்திக்கிடத்தல்]

9. திருவாய். 1.5:7
10. திருவாய். 3.2:9

என்று பேசுகின்றார். இங்குத் தூறு என்பது மேலே குறிப்பிட்ட சம்சாரத்தையே குறிக்கின்றது.

இன்னொரு பாசுரத்தில் ஆழ்வார் தனக்குக் காட்சி தந்தருளுமாறு வேண்டுவது கல்நெஞ்சத்தையும் உருக்கும் தன்மையது.

"தாவி வையம் கொண்ட எந்தாய்!
தாமோதரா என்று என்று
கூவிக் கூவி நெஞ்சுருகிக் கண்பனி
சோர நின்றால்
பாவிநீ என்று ஒன்று சொல்லாய்
பாவியேன் காண வந்தே."[11]

என்பது அப் பாசுரப் பகுதி. "'திருவடிகளால் மூன்று உலகங்களையும் அகப்படுத்திக் கொண்ட எந்தையே! தாய்பால் யாப்புண்ட தழும்பை வயிற்றிலுடையவனே!' என்று பலகாலும் விடாயுடன் கூவிக்கூவி நெஞ்சு நீர்ப்பண்டமாக உருகிக் கண்ணீர் பெருக நின்றால், பாவியான அடியேன் சேவிக்கும்படியாகக் கண்ணுக்கு இலக்காகி வந்து, 'ஆழ்வாரே! நீர் பாவி' என்று சொன்னாலும் போதும்; அதுவும் சொல்லுகின்றாய் இல்லை" என்பது இதன் கருத்து. மற்றுமோர் பாசுரத்தில்,

பாவியேன் நெஞ்சம்
புலம்பப் பலகாலும்
கூவியும் காணப்
பெறேன்உன் கோலமே"[12]

என்கின்றார். பிறிதொரு பாசுரத்தில்,

"பாய்ஓர் அடிவைத்து அதன்கீழ்ப்
பரவை நிலமெல்லாம்

---

11. திருவாய். 4.7:3
12. திருவாய். 3.8:7

தாய், ஓர் அடியால் எல்லா
உலகும் தடவந்த
மாயோன்! உன்னைக் காண்பான்
வருந்தி, எனைநாளும்
தீயோடு உடன்சேர் மெழுகாய்
உலகில் திரிவேனோ?"[13]

[பாய்வைத்து-பரப்பிவைத்து; தாய்-தாவி அளந்து; தடவந்த-ஆக்கிரமித்த.]

என்று கூறுவர். முன்னிரண்டு அடிகளின் கருத்தை ஆறாயிரப்படியில் 'என்னை உன் திருவடிகளிலே சேர்க்க வேணுமென்று உலகத்தை அளக்கும் செயலை வியாஜமாகக் கொண்டு விலையில்லாதொரு இரத்தினம் கொடுத்துத் தேடுவாரைப் போல பெரிய வருத்தத்தோடே உன் திருவடியாலே என்னைத் தேடிக்கொண்டு திரிந்த உன்னை' என்று பிள்ளான் அருளிச் செய்துள்ளார். 'நீ என்னைத் தேடித் திரிந்த காலத்தில் உனக்கு நான் அகப்பட்டேன் இல்லை; உன்னை நான் தேடித் திரியும் இக்காலத்தில் எனக்கு நீ அகப்படுகின்றாய் இல்லை' என்று ஆழ்வார் கூறுவது போல் உள்ளது.

இங்ஙனம் ஆழ்வார் திருநகரில் திருப்புளியாழ்வார் நிழலிலிருந்துகொண்டு அழலிலிட்ட மெழுகென உருகி ஆண்டவனை அழுது அழுது கூவியழைப்பதே இவர் அருளிய திருவாய்மொழி. இவருடைய திருக்குரல் சிந்தை செல்லாச் சேணெடுந்தூரத்திலுள்ள அந்தமில் இன்பத்து அழிவில் வீடாகிய பரமபதத்திலும் ஒலிக்கும் என்பதற்கு எள்ளளவும் ஐயமில்லை. இந்த அழுகைக் குரலைக் கேட்ட பரமபதநாதன் ஆழ்வாருக்குத் தன் திருவடிப்பேற்றை அருளினான் என்பதை 'அவா அற்று' வீடு பெற்ற குருகூர்ச்

13. திருவாய். 6.9:6

சடகோபன்'[14] என்ற அவரது திருவாக்கினாலேயே அறிகின்றோம்.

இங்ஙனமே, சைவ அடியார்களுள் மணிவாசகப் பெருமான் அழுகையையே வீடுபெறும் வழியாகக் கொண்டு உய்ந்த ஞானியாவார். அவர்,

"யானே பொய்என் நெஞ்சும்
பொய்என் அன்பும்பொய்
ஆனால் வினையேன் அழுதால்
உன்னைப் பெறலாமே."[15]

என்று கூறியிருப்பதை அறியலாம். இவருடைய திருவாசகம் முழுவதும் இங்ஙனம் ஆண்டவனை நோக்கி அழுத திருப்பாடல்களேயாகும். இவை இன்று நமக்கு 'எல்லை, மருவா நெறியளிக்கும் வாதவூர் எங்கோன், திருவாசகம் என்னும் தேன' ஆகத் தித்திக்கின்றது. மாணிக்கவாசகரின் அழுகைக் குரலை நன்கறிந்த பரஞ்சோதியார், அவரை "அழுது அடி அடைந்த அன்பன்"[16] என்று போற்றி மகிழ்வர்.

திருவாய்மொழி, திருவாசகம் ஆகிய இரண்டு சொற்றொடர்களும் ஒரே பொருளைத் தருவன. இரண்டுமே பெரிய ஞானியரின் அழுகுரல்களின் தொகுப்புகள்; ஆன்மிக வாழ்விற்கு நெறியமைத்துத்தரும் அருள் மொழிகளமைந்த பக்திக் கருவூலங்கள். இவை இரண்டையும் பயின்று, அழுகை வழியைத் துணையாகக் கொண்டு ஆன்மிக வாழ்வினை அமைத்துக் கொள்வோமாக! இந்த வாழ்வே ஆண்டவனை அடையும் பெருநெறி என்பதையும் அறிவோமாக!

---

14. திருவாய். 10.10:10
15. திருச்சதகம்—90
16. பரஞ்சோதி—திருவிளையாடல்—மதுரை காண்டம்-21.

# 11. இறைவனின் ஆன்ம வேட்கை*

ஈசுவர இலாபம் உயிர்கட்குக் குறிக்கோளா? அல்லது உயிர்களின் இலாபம் ஈசுவரனுக்குக் குறிக்கோளா?' என்ற ஆராய்ச்சி வைணவ பக்தர்களிடம் நடைபெறுவது உண்டு. உயிர்களின் இலாபந்தான் ஈசுவரனுக்குக் குறிக்கோள் என்பதுவே வைணவ சித்தாந்தம். எம்பெருமான் தன் படைப்பினாலும் அவதாரங்களினாலும் ஆன்மப் பயிர்த் தொழில் செய்வதெல்லாம் ஓர் ஆருயிர் தனக்குக் கிடைக்கும் என்ற நப்பாசையினாலன்றோ? "'எல்லாம் வாசுதேவன்' என்று திருவுள்ளங் கொண்டுள்ள ஒரு மகாத்மா எனக்குக் கிடைக்கவில்லை"[1] என்றன்றோ சொல்லுகின்றான் கண்ணன்? பாடுபட்டுத் தேடிப் பார்த்தும் கிடைக்காததனால் வருத்தத்துடன் வெளிப்படும் கூற்று இது என்று நாம் அறிகின்றோமன்றோ? இங்ஙனம் ஆன்மப் பயிர்த்தொழில் புரியும் இறைவனின் ஆன்ம வேட்கையை ஒரு திருவாய்மொழியில் பேசி இனியராகின்றார் நம்மாழ்வார். எம்பெருமான் தன்னுடைய உள்ளத்தில் வீற்றிருந்த பெருமையை,

> "சிறியே னுடைசிந்தை
> யுள்மூ வுலகும்தம்
> நெறியா வயிற்றிற்கொண்டு
> நின்றொழிந் தாரே"[2]

என்று இறைவன் பாரித்து முறை கெடப் பரிமாறின பரிமாற்றத்தை அநுபவித்தவரன்றோ ஆழ்வார்?

---

*பண்ணாராய்ச்சி வித்தகர் திரு. சுந்தரேசனார் மணி விழா மலரில் (.9·5) வெளிவந்தது.

1. பகவத் கீதை 7:9 2. திருவாய் 8.7:8

நீண்ட நாட்களாகவே இறைவனுக்கு "ஒழிவு இல் காலம் எல்லாம் உடனாய் மன்னி, வழுவிலா அடிமை செய்ய வேண்டும்"[3] என்பதையே திருவருள செய்கையாகத் திருவுள்ளம் பற்றியிருந்தார் ஆழ்வார். இதனையே ஒரு பற்றாகக் கொண்டு தன்னுடைய சீல குணத்தால் ஆழ்வாரின் நெஞ்சத்தை வஞ்சித்துப் புகுந்து அவரை ஆட்கொள்ளுகின்றான் இறைவன். இதனை ஆழ்வார்,

> "நீர்மையால் நெஞ்சம்
> வஞ்சித்துப் புகுந்து,என்னை
> ஈர்மைசெய்(து) என் உயிர்
> ஆய்என உயிர் உண்டான்"[4]

[நீர்மை சீல குணம்; ஈர்மை செய்து - இருபிளவாக்கி]

என்று கூறுவர். 'வஞ்சித்து நெஞ்சம் புகுந்து என்னை நீர்மையால் ஈர்மை செய்து' என்று கொண்டு கூட்டிப் பொருள் கொள்வது சுவை மிக்கது. 'தான் ஆண்டானும் நான் அடிமையுமான முறை தவறாது பரிமாறுவதாகவே' சொல்லி என் நெஞ்சை இசையப்பண்ணி உள் புகுந்தான் என்கின்றார் ஆழ்வார். 'தான் அடிமை, நான் ஆண்டான்' என்று முறைகேடாகப் பரிமாறப் போவதாக முன்னமே தெரிவித்து விட்டால் ஒருகால் ஆழ்வார் இசையாது போயினும் போவர் என்று கருதியே இங்ஙனம் 'வஞ்சித்து' (ஒன்றைச் சொல்லி மற்றொன்றைச் செய்து) உள் புகுந்தான் போலும்! இங்ஙனம் புகுந்தவனுடைய 'கள்வத்தை'த் தன்னால் அறியக் கூடவில்லையே என்கின்றார் ஆழ்வார். இங்ஙனம் புகுந்த பிறகு தன் நீர்மையைக் காட்டத் தொடங்குகின்றான்; தான் தாழ நின்று பரிமாறவும் தொடங்குகின்றான். அதனால் ஆழ்வார் நெஞ்சை ஈடு படுத்துகின்றான். இங்ஙனம் ஈடுபடுத்தியவன் இவரை

3. திருவாய் 3.3:1 4. திருவாய் 9.6:3

அடிமை கொள்பவன் போலே இவருள் புகுந்து இவர் உடலையும் உயிரையும் ஒரு சேரப் புசித்துவிடுகின்றான்.

"திருவருள் செய்பவன்
போலஎன் உள்புகுந்து
உருவமும் ஆருயிரும்
உடனே உண்டான்"[5]

[உருவம்-உடல்; உடனே-ஒருசேர]

துயர்அறு சுடர்அடி தொழுது எழுகைக்கு மயர்வுஅற மதி நலம் அருளுவாரைப் போலப் புகுந்தான் என்பது குறிப்பு. ஆயினும், ஆழ்வார் திறத்தில் 'திரு அருளை' இறைவனே பெற்றவன் ஆயினன். இங்கே நம்பிள்ளை ஈடு வியக்கத் தக்கது: "அவன் அங்கீகாரத்துக்கு முன்பு சரீரத்தையே விரும்பிப் போந்தார். அவன் இவரை அங்கீகரித்த பின்பு இவர் தம் சரீரத்தை வெறுக்க இவர் சரீரத்தை அவன் விரும்பிப் புக்கான். இவருக்கு அவனுடைய சேர்க்கை சொரூப ஞானத்துக்குஉடல் ஆயிற்று; அவனுக்கு இவருடைய சேர்க்கை உடலை உயிராக விரும்புவதற்கு உடல் ஆயிற்று."[6] இறைவனுடைய இத்திட்டத்தை "அறிகிலேன்" ..........சிறிய என் ஆருயிர் உண்ட திருஅருளே"[7] என்கின்றார் ஆழ்வார். இந்தத் திருப்பாசுரத்தின் ஈட்டில், 'பகைவரை அம்பாலே அழிக்கும்; அடியார்களைக் குணத்தாலே அழிக்கும்...........அம்பு பட்ட புண் மருந்து இட்டு ஆற்றலாம்; குணத்தால் வந்த புண்ணுக்கு மாற்று இல்லை" என்ற பகுதி சிந்தித்து அநுபவிக்கத்தக்கது.

இவ்விடத்தில், "போகதசையில் ஈசுவரன் அழிக்கும் போது நோக்கவேணும் என்று அழியா தொழிகை"[8]

5. திருவாய் 9.6:5
6. ஈட்டின் தமிழாக்கம்—பகுதி 9 (திருவாய் 9.6:5)
7. திருவாய் 9.6:4
8. முமுட்சுப்படி-சூத்திரம்-92

என்றமுமுட்சுப்படியின் மகாவாக்கியத்தின்கருத்தும் சிந்திக்கற்பாலது. அஃதாவது, ஈசுவரன் சீவனாகிய தன்னுடன் கலந்து பரிமாறும்போது, அவன் தன் மாட்டுக் கொண்டுள்ள பிரேமப் பித்தினால் (எழில்பெருங் காதலினால்) தாழ நின்று பரிமாறி, தன்னுடைய சேஷத்துவத்தை (அடிமைத் தன்மையை) அழிக்குங்கால், "நம சேஷத்துவத்தை நாம் நோக்கிக்கொள்ள வேண்டும்" என நினைத்துச் சீவனாகிய தான் பின்வாங்கி அவன் போகத்தைக் கெடுக்காமலிருத்தல் வேண்டும் என்பதே இதன் பொருளாகும். இதுதான் பகவானுக்கே ஆனந்தம் ஏற்படுமாறு வினியோகப் படுகை என்று சொல்லப்படுவது.

ஈசுவரன் சேதனனை (உயிரை) வினியோகம் செய்து கொள்ளல் இரண்டு வகைப்படும்; இவற்றுள் அவன் தலைவனாகவே இருந்து உயிரை அடிமையாக வைத்துப் பரிமாறுதல் ஒரு வகை. சில சமயம் அவன் உயிருடன் கலந்து போகம் துய்க்கக் கருதுவான். அவ்வமயம் ஈசுவரன் உயிரை அடிமை கொள்பவன் போன்று, உயிரை நெருங்கி, அதன்மாட்டுத் தனக்குள்ள வேட்கை மிகுதியால், உயிரைத் தலைமையாக வைத்துத் தான் அடிமையாக இருந்து, இழிதொழில் செய்து, அவ்விதத்தில் உயிரை வினியோகம் கொள்ளுதல் மற்றொரு வகை. ஈண்டுக் கூறிய இரண்டாவது வகை அநுபவத்திற்குக் குசேலரின் வாழ்க்கை வரலாற்றின் நிகழ்ச்சி ஒன்றை எடுத்துக் காட்டாகக் கொள்ளலாம். பரம பக்தராகிய குசேலர் தன் துணைவியின் தூண்டுதலால் கண்ணனிடம் செல்லுகின்றார். குசேலரின் வருகையைக் காவலரால் அறிந்த துவரைநாதன் தானே அரியணையினின்றும் இறங்கிவந்து,

"திலகமண் தோய ஐயன்
திருவடி வணங்கிப் பின்னர்

நிலவுமெய்ப் புளகம் போர்த்து
நிறம்புறத் தழுவிக் கொண்டான்"[9]

என்றவாறு குசேலரின் திருவடிகளில் வணங்குகின்றான். பின்பு அவரைத் தன்னுடன் அழைத்துச் சென்று அவருடைய திருவடிகளைத் தன் மடிமீது வைத்து, "இத் திருவடிகள் நீண்ட தொலைவு நடந்து நொந்தனவே" என்று பகர்ந்து கொண்டே அவற்றை மெல்லெனப் பிடிக்கின்றான். குசேலர் கண்ணன் செய்யும் உபசாரங்களுக்குத் தன் பார தந்திரியத்திற்கேற்ப (தலைவனது வசத்திலிருப்பதற்கேற்ப) இசைந்திருக்கின்றார். இதனை,

"'வழிநடந் திளைத்த வோஇம்
மலரடி இரண்டும்?' என்று
கழிமகிழ் சிறப்ப மெல்ல
வருடினான் கமலக் கண்ணன்;
பழியில்பல் உபசா ரங்கள்
பண்ணவும் தெரியா னாகி
ஒழிவுறு தவக்கு சேலன்
ஒன்றும்பே சாதி ருந்தான்"[10]

என்ற பாடலில் காணலாம். தம்மை அடிமை கொள்பவனைப் போன்று தம்மிடம் கிட்டித் தாழ நின்றுத் தம் ஆன்மாவை முற்றும் கவர்ந்து கொண்ட ஆச்சரியமான சேஷ்டிதங்களை (செயல்களை) யுடையவன் ஈசுவரன் என்பதை ஆழ்வாரும்,

"ஆட்கொள்வான் ஒத்துஎன்
உயிர்உண்ட மாயன்"[11]

---

9. குசேலோபாக்கியானம்—குசேலர் நகர்ப்புறம் அடைந்தது செய்—104

10. குசேலோபாக்கியானம்—குசேலர் நகர்ப்புறம் அடைந்தது—செய்.110

11. திருவாய் 9,6:7

எனத் தெரிவிக்கின்றார். இதனால் ஈசுவரன் உயிரைத் தனக்கு எனவே வினியோகம் கொண்டுள்ளான் என்பதனை அறிகின்றோம்.

எம்பெருமானை அநுபவிக்கும் ஆழ்வாருக்கு "எப்பொழுதும் நாள் திங்கள் ஆண்டு ஊழிதோறும், அப்போதைக்கு அப்பொழுது என் ஆரா அமுதமே"[12] என்னும்படி நாள்தோறும் அறிதாகத் தோன்றுமாப் போலே, எம்பெருமானுக்கும் ஆழ்வாருடைய அநுபவம் நாள்தோறும் அரிதாகவே தோன்றுகின்றது. எனவே அவன்,

"கோளுண்டான் அன்றிவந்து
என்னுயிர் தான்உண்டான்
நாளும்நாள் வந்தென்னை
முற்றவும் தான்உண்டான்"[13]

ஒருநாள் அநுபவித்து, "இனி இது நாம் அநுபவித்தது அன்றோ?" என்று கைவாங்கியிராமல் நாள்தோறும் வந்து ஆழ்வாரை அப்பொழுதைக்கு அப்பொழுது ஆராவமுதமாக அநுபவித்தான். இங்கே நம்பிள்ளை, "அணுப்பரிமாணமான இவ்வஸ்துவை விபுவான தான் விளாக்குலை கொண்டு[14] அநுபவித்தானென்கின்ற இது தனக்கு ஏற்றமாம்படி கௌரவியா நின்றான்" என்று அருளிச் செய்திருப்பது சிந்திக்கத் தக்கது. ஆழ்வாருடைய ஆன்மா அணுவளவாக இருப்பினும், அளவு கடந்த பாரிப்புக் கொண்ட எம்பெருமான் அநுபவிக்குமிடத்து அந்த அணு அளவுப் பொருளையும் பெரிதாக்கிக் கொண்டு அநுபவிப்பதாக ஆழ்வாருடைய திருவுள்ளம் என்பது இதன் கருத்தாகும். இத்தனைக்கும் காரணம்,

12. திருவாய் 2.5:4
13. திருவாய் 9.6:8
14 விளாக்குலை கொள்ளல்—குலை குலையாகப் பறித்து வாய்க்கொள்ளுதல் (ஒரே கவளமாக உண்ணுதல் என்றபடி)

"காளநீர் மேகத்தென்
காட்கரை என் அப்பற்கு
ஆளன்றே பட்டதுஎன்
ஆருயிர் பட்டதே"[15]
[ஆள்பட்டது—அடிமைப்பட்டது]

என்பதேயாகும். இங்ஙனம் தன் உயிர் பட்ட பாட்டை வேறு எவரும் பட்டிருக்க முடியாது என்பதை,

'ஆர்உயிர் பட்டது
எனதுஉயிர் பட்டது'[16]

என்று குறிப்பிடுகின்றார் ஆழ்வார். பகவானுடைய குணங்களுக்கு நிலம் அல்லாததாக இருக்கும் லீலா விபூதியில் (இந்த உலகில்) தான் பட்ட பாட்டினை நித்திய விபூதியில் (பரம பதத்தில்) உள்ள நித்திய சூரிகளும் பட்டிருக்க முடியாது என்பது ஆழ்வாருடைய திருவுள்ளம்.

இதுகாறும் இறைவன் தன்னை உண்டபடியைக் கூறினார் ஆழ்வார். உண்டவனுக்குத் தண்ணீரும் வேண்டுமன்றோ? ஆகையால் இறைவன் தண்ணீர் பருகின படியையும் அருளிச் செய்கின்றார் அவர்.

"'வாரிக்கொண்டு உன்னை
விழுங்குவன் காணில்' என்று
ஆர்வுற்ற என்னை
யொழியஎன் னில்முன்னம்
பாரித்து, தான்என்னை
முற்றப் பருகினான்;
கார்ஒக்கும் காட்கரை
அப்பன் கடியனே."[17]

---

15. திருவாய் 9.6:8 16. திருவாய் 9.6:9
17. திருவாய் 9.6:10

[ஆர்வு-ஆசை; பாரித்து - எண்ணி; கடியவன்-பதற்றமுடையவன்.]

என்பது பாசுரம். இறைவனைக் கண்டால் அப்படியே விழுங்கிவிடுவதாக ஆசைப்பட்டிருந்தார் ஆழ்வார்; ஆனால் இப்படிச் செய்யவேண்டுமென்று தனக்கு முன்பே இறைவன் எண்ணித்தன்னை அடியோடு பருகிவிட்டான். ஆழ்வாருக்கு இறைவன் "உண்ணும் சோறு பருகும்நீர்"[18] என்னலாம்படி இருந்தான். அங்ஙனமே இறைவனுக்கும் ஆழ்வார் "உண்ணும் சோறு பருகும்நீர்" என்று ஆகிவிட்டார். திருவாய்மொழி ஆயிரத்திலும் இப்பாசுரம் உயிரானது என்பது வைணவர்களின் திருவுள்ளம். இங்ஙனம் இறைவனது ஆன்மவேட்கையைப் பக்திப் பனுவல்களில் கண்டு மகிழலாம்.

---

18. திருவாய் 6.7:1

## பேராசிரியர் டாக்டர் ரெட்டியாரின் நூல்கள்

ஆசிரியம் :

1. தமிழ் பயிற்றும் முறை
2. கவிதை பயிற்றும் முறை
3. அறிவியல் பயிற்றும் முறை
4. கல்வி உளவியல்
5. யுனெஸ்கோ: அறிவியல் பயிற்றும் மூலமுதல் நூல்

இலக்கியம் :

6. கவிஞன் உள்ளம்
7. காலமும் கவிஞர்களும்
8. காதல் ஓவியங்கள்
9. அறிவுக்கு விருந்து
10. முத்தொள்ளாயிர விளக்கம் (பதிப்பு)
11. பரணிப் பொழிவுகள்
12. அறிவியல் தமிழ்
13. வேமனர்
14. சி. ஆர். ரெட்டி
15. திருக்குறள் கருத்தரங்கு மலர்-1974 (பதிப்பு)
16. கம்பனில் மக்கள் குரல்
17. காந்தியடிகள் நெஞ்சுவிடு தூது (பதிப்பு)
18. திருவேங்கடமும் தமிழ் இலக்கியமும்
19. மேகாணி

சமயம் :

20. மலைநாட்டுத் திருப்பதிகள்
21. தொண்டை நாட்டுத் திருப்பதிகள்
22. பாண்டிநாட்டுத் திருப்பதிகள்
23. வடநாட்டுத் திருப்பதிகள்
24. சோழ நாட்டுத் திருப்பதிகள்—முதல் பகுதி
25. சோழ நாட்டுத் திருப்பதிகள்-இரண்டாம் பகுதி.
26. சில நோக்கில் நாலாயிரம்
27. முத்தி நெறி

திறனாய்வு :

28. கவிதையநுபவம்
29. தொல்காப்பியம் காட்டும் வாழ்க்கை
30. கம்பன் படைத்த சிறு பாத்திரங்கள்
31. அகத்திணைக் கொள்கைகள்

அறிவியல் :

32. மானிட உடல்
33. அணுவின் ஆக்கம்
34. இளைஞர் வானொலி
35. இளைஞர் தொலைக் காட்சி
36. அதிசய மின்னணு
37. நமது உடல்
38. இராக்கெட்டுகள்
39. அம்புலிப் பயணம்
40. தொலை உலகச் செலவு

41. அணுக்கரு பௌதிகம்
42. இல்லற நெறி
43. வாழையடி வாழை
44. அறிவியல் விருந்து

ஆராய்ச்சி :

45. கலிங்கத்துப்பரணி ஆராய்ச்சி
45. Religion and Philosophy of Nalayira Divya Prabandham with Special Reference to Nammalvar.
47. Studies in Arts and Sciences (61st Birth Day Commemoration Volume)
48. Collected papers of Prof. Dr. N. Subbu Reddiar.

குறிப்பு : இவற்றைத்தவிர ஆங்கிலத்தில் ஐம்பதிற்கு மேற்பட்ட தமிழ் ஆய்வுக் கட்டுரைகளும், தமிழில் நாற்பதிற்கு மேற்பட்ட ஆய்வுக்கட்டுரைகளும் முன்னூறுக்கு மேற்பட்ட பொதுத் தமிழ்க் கட்டுரைகளும், எழுதியுள்ளமை; அன்றியும், முதல் ஐந்து வகுப்புகட்குத் தமிழ்ப் பாடநூல்கள் எழுதினமை; 8 முதல் 12 வகுப்புகட்குரிய உரைநடைப் பகுதிக்குப் பல்வேறு துறைகளில், குறிப்பாக அறிவியல் துறைகளில், கட்டுரைகள் வழங்கினமை.



64 அகவை நிரம்பிய இந்நூலாசிரியர் பி.எஸ். சி., எல்.டி., வித்துவான், பி.ஏ.,எம்.ஏ.,பிஎச்.டி., பட்டங்கள் பெற்றவர்: ஒன்பதாண்டுகள் துறையூர் உயர்நிலைப் பள்ளித் தலைமையாசிரியராகவும்,(1941-50) பத்தாண்டுகள் காரைக்குடி அழகப்பா ஆசிரியர் பயிற்சிக் கல்லூரித் தமிழ்ப் பேராசிரியராகவும், (1950-60) பதினேழு ஆண்டுகள் திருப்பதி திருவேங்கடவன் பல்கலைக் கழகத் தமிழ்த்துறைத் தலைவராகவும், பேராசிரியராகவும், ( 1960-77 ) பணியாற்றி ஓய்வு பெற்றவர். ஓய்வு பெற்றபின் பதினைந்து மாதங்கள் (1978 பிப்ரவரி-1979 ஜூன்) கலைக்களஞ்சியத் தலைமைப் பதிப்பாசிரியராகப் பணியாற்றியவர், நாலாயிரத் திவ்வியப் பிரப்பந்தத்தில் நம்மாழ்வாரின் தத்துவத்தை ஆராய்ந்து டாக்டர் (பி,எச்.டி) பட்டம் பெற்றவர். தமிழிலும், ஆங்கிலத்திலும் பல ஆய்வுக்கட்டுரைகள் எழுதி வெளியிட்டவர்: தவிர ஆசிரியம் (5)இலக்கியம் (15), சமயம் (7), திறனாய்வு (4), அறிவியல் (13), ஆராய்ச்சி (4)—என்று 48 அரிய நூல்களின் ஆசிரியர். இனிமை, எளிமை, தெளிவு [illegible] இவர்தம் நூல்களின் தனிச் சிறப்பியல்புகளாகும்.